# ரமண பெரிய புராணம்

(75 அணுக்கத் தொண்டர்களின் ஆன்மீக பயணம்)

**பகுதி 1**



**வே. கணேசன்**

**Ramana Periya Puranam – Tamil - Volume 1**

by

**Sri V. Ganesan**

*Author and Copyright owner:*
**V. Ganesan**
"Ananda Ramana"
C/o Sri Ramanasramam P.O.,
Tiruvannamalai – 606 603
Tamilnadu, India
Email: ramanamymaster@gmail.com

*Published by:*
**Sri Ramana Maharshi Brahmavidyasrama Trust**
4/8, Lady Desika Road, Chennai – 600 004
Phone: +91 98451 79294, +91 98860 76229, +91 44 48566333
Email: contact@voiceofrishis.org

First edition: July 2019
ISBN: 978-81-930569-7-4

*Printed by:*
sri bharathi printers
Bengaluru

# முன்னுரை

அருணாசல க்ஷேத்திரத்தில் கருணைக் கடலான ஸ்ரீ ரமண பகவான் வாழ்ந்த காலத்திலேயே, அவரது ஸ்வானுபூதியின் மணம் உலகெங்கும் பரவியது. ஆன்மீக வேட்கை கொண்ட பக்தர்கள் உலகின் பல பகுதிகளிலிருந்தும் அவரை நாடி வந்து அந்த திவ்ய சந்நிதியின் விசேஷத்தை அனுபவித்தனர்.

அவ்வாறு பகவான் ஸ்ரீ ரமணரை அணுகி ஆத்ம தேவன் பதத்தில் அனிசம் ரமிக்கும் பேறு பெற்ற அணுக்கத் தொண்டர்கள் பலருடன் நேரிடையாகக் கலந்து பழகும் அரிய வாய்ப்பைப் பெற்றவர் ஸ்ரீ கணேசன் அண்ணா. அன்னவர் பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷி அவதரித்த திருக்குலத்தில் பிறக்கும் பெரும் பேறு பெற்றவர்.

ஸ்ரீ கணேசன் அண்ணா தனது வாழ்க்கை முழுவதும், ஸ்ரீ ரமண பகவானையும் அவரது அடியார்களையும் குறித்த விஷயங்கள் பற்றி பேசியும், எழுதியும் எப்போதும் பகவானின் சிந்தனையிலேயே வாழ்பவர். முப்பத்தேழு வருடங்கள் ஸ்ரீ ரமணாச்ரமப் பணியில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டவர். பகவான் ஸ்ரீ ரமணரின் அடியார்களை ஆச்ரமத்தில் தங்கச் செய்து பரமபக்தியோடு அவர்களுக்கு சேவை செய்தவர்.

அவர்களிடமிருந்து பகவானின் வாழ்க்கை பற்றிய பல விலைமதிப்பற்ற குறிப்புகளையும், அவர்கள் பகவானுடன் ஸத்ஸங்கத்தில் உணர்ந்து அனுபவித்த பல நுணக்கமான விஷயங்களையும் சேகரித்தார். அவ்வாறு அன்னாரால் சேகரிக்கப்பட்ட அடியார்களின் அனுபவத்தொகுப்பு **“ரமண பெரிய புராணம்”** என்ற தலைப்பில் ஆங்கிலத்தில் ஆறு வருடங்களுக்கு முன் வெளியிடப்பட்டது. இது

அவருடைய தபஸின் பலனாக நமக்குக் கிடைத்த பெரிய பொக்கிஷம்.

ஸ்ரீரமண பகவானின் அணுக்கத் தொண்டர்கள் 75 பேரின் அத்யாத்ம வாழ்க்கையை நம் கண் முன் கொண்டு வரும் இந்நூல், இதே போன்று ஆன்மீக பாதையில் செல்ல விழையும் ஸாதகர்களுக்கு மேலும் ஊக்கம் அளிப்பதாக இருக்கிறது.

ஸ்ரீமதி அகிலா அம்மா (திருச்சி) அவர்கள், பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் பரம பக்தை. திருச்சி ஸ்ரீராமகிருஷ்ணா சாரதா சமிதி மூலம் ஆன்மீக தொண்டாற்றுபவர். அவர்கள் மிகுந்த சிரத்தையுடனும், பக்தியுடனும் தமிழ் வாசகர்களுக்கு பயன்படும் வகையில் தூய தமிழில் இந்நூலை மொழிபெயர்த்துள்ளார்.

இந்த முதல் தொகுதியில் பகவானின் 20 அணுக்கத் தொண்டர்களின் ஆன்மீக அனுபவங்கள் இடம் பெற்றுள்ளது. ஆங்கில பதிப்பில் உள்ளது போன்றே, பகவானின் திவ்ய சன்னிதியை பக்தர்கள் வந்தடைந்த காலக்கிரமத்தின் அடிப்படையில் தொகுக்கப்பட்டள்ளது. இதில், பகவானுடைய உபதேசங்கள், பாடல்கள் மற்றும் பகவான் மீது பக்தர்கள் பாடிய பாடல்கள் என்று பல புதிய விஷயங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. இந்நூலில் இடம் பெற்றுள்ள அடியார்களின் அனுபவப் பிழிவு இதைப் படிக்கும் அனைத்து ஸாதகர்களுக்கும் மானிட வாழ்வின் மகத்தான லட்சியமான ஆன்மானுபவத்தை அனுக்ரஹிக்கும் ஐயமில்லை.

* * *

# பொருளடக்கம்

# முகவுரை



பகவான் ஸ்ரீ ரமண மகரிஷிக்குச் சொந்தப் பெயர் என்று எதுவும் கிடையாது என்று கூறுவதுண்டு. இருந்தும், அவருக்கு ஒரு பெயர் இருந்தது. அவர் அதை, ஒருமுறை அன்று, மூன்று முறை வெளிப்படுத்தியுள்ளார். முதல் முறை -எழுத்துக்களால் ஆன மணமாலையாகிய “அக்ஷரமணமாலை”- யில் அதை வெளிப்படுத்தி உள்ளார். அதன் கடைசி செய்யுளில்,

“ மாலை அளித்து அருணாசல ரமண என்
மாலை அணிந்து அருள் அருணாசலா” என்று கூறியுள்ளார்.

சில நாட்களுக்குப் பிறகு, விரூபாக்ஷ குகையில் ஒரு பக்தர், பகவான் உண்மையில் யார் என்று தெரிந்து கொள்ள விரும்பியபோது, இரண்டாவது முறையாக வெளிப்படுத்தினார். அந்த பக்தர், காகிதத்தில், “ஹே ரமணா! நீங்கள் யார்? தெய்வங்களில் சிறந்த ஹரியா, அல்லது ரிஷியா, அல்லது தேவலோகத்தைச் சேர்ந்தவரா? நீங்கள் யார்?” என எழுதி, பகவான் வெளியில் சென்றிருந்த சமயத்தில் அவரது கல்படுக்கையில் வைத்துச் சென்றுவிட்டார். பகவான் திரும்பி வந்தபோது, கல்படுக்கையில் இருந்த காகிதக் குறிப்பைப் படித்துவிட்டு, அதன் பின்பக்கத்தில், பின்வருமாறு எழுதினார்,

அரியாதியி தரசீவர தகவாரிச குகையில்
அறிவாய்ரமி பரமாத்தும னருணாசல ரமணன்
பரிவாலுள முருகாநல பரனார்ந்திடு குகையார்ந்து
அறிவாம்விழி திறவாநிச மறிவாயது வெளியாம்.

(அருணாசல ரமணன், பகவான் ஸ்ரீ ஹரியில் இருந்து ஆரம்பித்து, மிகவும் தாழ்ந்த நிலையில் உள்ள ஜீவன் உட்பட, அனைவரின் இதயத்திலும் உறைபவன். பக்தியோடு இதயக்குகையில் ஆழ்ந்து மூழ்கினால், அகக்கண் திறக்கும். உண்மையான, பூரணமான, இரண்டற்ற (அத்வைத) நிலையை அப்போது உணர்வீர்கள்)

மூத்த பக்தரான முருகனார் மீது விஸ்வநாதஸ்வாமி ஒரு பாடல் இயற்ற விரும்பியபோது, மூன்றாவது முறையாக வெளிப்படுத்தினார். விஸ்வநாதஸ்வாமி, முழுமையாகத் தமிழில் பாடல் இயற்ற முடியாத நிலையில், “முகவாபுரி முருகன்” என்ற இரு சொற்களை மட்டும் எழுதி, பகவான் அமரும் இடத்தில் வைத்துவிட்டு, மெதுவாக வெளியே சென்றுவிட்டார். பகவான் திரும்பி வந்து,

அகத்தாமரை மலர்மீதுறை யருணாசல ரமணன்
நகைத்தானுற விழித்தானறச் செகுத்தானென துயிரை
மிகத்தானருள் சுரந்தானென முகவாபுரி முருகன்
செகத்தாருய வகுத்தான்முறை திருவாசக நிகரே

(எல்லோருடைய இதயத் தாமரையிலும் உறையும் அருணாசல ரமணனின் ஒரு பார்வையால் முகவாபுரி முருகனின் பூர்வ வாசனைகள் அனைத்தும் அழிந்தன)

என எழுதி, அந்தச் செய்யுளை முடித்திருந்தார். அது, பல நூற்றாண்டுகளுக்கு முன் மாணிக்கவாசகர் எழுதிய திருவாசகத்துக்கு ஒப்புவமையாகும் வகையில் பல்லாயிரக்-கணக்கான செய்யுட்கள், அவரிடமிருந்து தாமாகவே எழும்ப வழி வகுத்தது.

அப்படியானால் பகவான் அருணாசல ரமணன் இவ்வுலகிற்கு வந்த காரணம்தான் என்ன? தனது 'நவமணி மாலை' என்ற பாடலில் பகவான் அதை வெளிப்படுத்துகிறார். "ஒவ்வொருவரின் இதயத்திலும் உள்ள 'நான்' என்னும் உண்மை உணர்வே 'தான்' என்பதை உலகிற்கு உணர்த்தி, ஒவ்வொருவரும் தங்களை உடம்பு எனக் கருதும் பொய்யான அறிவை, அபிமானத்தை அழிக்குமாறு கட்டளையிட்டான்" என உரைத்துள்ளார். புனிதமான மலையாகத் தோன்றும், எல்லையற்ற ஞானாக்னியான அருணாசல சிவன், நமது மொழியிலேயே பேசி உணர்த்துவதற்காக, ரமணராக அவதரித்துள்ளார். மலையின் மொழியோ மௌனம். அந்த மொழியில் பேசினால் யாரால்தான் புரிந்துகொள்ள முடியும்?

ஒருமுறை இந்தக் கருத்தைப் பகவானின் மூத்த பக்தரான ஸ்ரீ என்.ஆர்.கிருஷ்ணமூர்த்தி அய்யரோடு பகிர்ந்துகொண்டேன். அவர் ஒரு பௌதிக பேராசிரியர் விஞ்ஞானியும் கூட. அவர், "என்ன அற்புதமான கருத்து! அது உண்மையே. அருணாசலமேதான் ரமணராக வந்துள்ளது; ஆனால் கணேசன்! அதோடு இன்னொரு வாக்கியத்தையும் சேர்த்துக் கொள்ளுங்கள்" எனக் கூறிவிட்டு, "பகவான், அருணாசலம் என்பது உண்மையே; அவருடைய பக்தர்களோ, புனித அருணாசலத்தோடு முழுமையாகப் பிணைந்துள்ள பெரிய பாறைகளும் கற்களுமே." இக்கருத்து என்னை மெய்சிலிர்க்க வைத்தது. மேலும் தொடர்ந்து "அவதாரங்கள் தோன்றும்போது பரிவாரங்களோடுதான் வருவார்கள். அதுபோல், பகவான் அவதரித்தபோது பணிவிடை செய்வதற்காக நாமும் வந்துள்ளோம். நம் பணி முடிந்துவிட்டால் மீண்டும் மூலத்திடம் போய்ச் சேர்ந்துவிடுவோம்" என்றும் கூறினார்.

உலகம் முழுவதும் தனது செய்தியைப் பரப்புமாறு அருணாசலம் கட்டளை இட்டிருந்தபோதும், 54 வருடம் அருணாசலத்தை விட்டு ஒரு அடி கூட பகவான்

அகலவில்லை. காரணம் - அவர் அசைய வேண்டிய அவசியம் வரவில்லை என்பதுதான். உலகமே அவரை நாடி வந்தது.

முதலில் வந்தவர் ஃப்ராங்க் ஹம்ஃப்ரீஸ் என்னும் மேலை நாட்டவர். தொடர்ந்து, காவ்ய கண்ட கணபதி முனி, பால் ப்ரண்டன், முருகனார், ஆர்தர் ஆஸ்போர்ன் முதலியோர் வந்தனர். குருவின் செய்திகளைப் பதிவு செய்வதொன்றே அவர்களது குறிக்கோளாக இருந்தது. உடன் வந்த பரிவாரங்கள் மட்டும் இல்லாதிருந்தால், பெரிய குருமார்களான புத்தரும், இயேசுநாதரும் கூடப் பெயரளவிலேயே இருந்திருப்பார்கள். பெரிய குருமார்களின் பக்தர்கள், அவர்களின் உபதேசங்களையும், சாதாரணமாக ஆன்மீக ஸாதகர்களுக்கு எழக்கூடிய கேள்விகளுக்கு அவர்கள் அளித்த விடைகளையும், பின்வரும் சந்ததிகள் பயன்பெறும் விதத்தில் காப்பாற்றி வைத்தனர். இந்தப் புனித கைங்கர்யத்தை நிறைவேற்றவே குருமார்களுடன் பரிவாரங்களும் வருகின்றனர்.

தனது பக்த பரிவாரங்களோடு வந்த சிறந்த குருமார்களுக்கு, ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரையும் எடுத்துக்காட்டாகக் கூறலாம். சீடர்கள் யாரும் இன்னும் குருவை வந்தடையாத நிலையில், தெய்வீக ஆனந்தக் களிப்பில், உன்மத்தராக இருந்த சமயங்களில், கங்கைக் கரையில் நின்று, “அம்மா! நீ அனுப்புவதாகச் சொன்னக் குழந்தைகள் எல்லாம் எங்கே? இன்னும் அவர்கள் வரவில்லையே!” என்று கூச்சலிட்டுக் கதறுவார். இறுதியில், பதினெட்டுச் சீடர்களை அன்னை பராசக்தி அனுப்பி வைத்தாள். வாழ்க்கையின் இறுதியில் புற்றுநோய் கண்டு, உடலை உகுக்க வேண்டிய தருணம் வந்தபோது, “நான் மீண்டும் பிறப்பேன். அடுத்தப் பிறவியில் ஒரு பிச்சைக்காரனாகப் பிறந்து, மக்கள் துயரைத் துடைப்பேன்” என்று கூறினார். இதற்கு அவரது பத்தினி புனித அன்னை

சாரதா தேவியார், “ஒருவேளை நான் வராமலிருக்கக்கூடும்” என பதிலுரைத்தார். அதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், “இவ்விஷயத்தில் உனக்கு எந்த சுதந்திரமும் இல்லை. நான் பிறந்தால் எனது பரிவாரங்களும் உடன் வந்தே ஆகவேண்டும்” என்று கூறினார். குளத்தில் வளரும் ஒருவிதமான களையை வேருடன் பிடுங்கி எடுக்கும்போது, அது அருகிலிருக்கும் மற்ற பல களைச் செடிகளையும் இழுத்துக்கொண்டு வரும். அந்தக் களைச் செடியை உதாரணமாகக் கூறினார். ரமண பகவானுக்கு அநேக பக்தர்கள் இருந்தனர். சிலர் பிரபலமடைந்தனர். சிலர் அப்படி பிரபலமடையவில்லை. இந்தச் சீடர்களுக்கும், பகவானுக்கும் இடையே உலக ரீதியிலும் ஆன்மீக ரீதியிலும் நிலவிய உறவு எந்த ஒரு புத்தகத்திலும் பதிவு செய்யப்படவில்லை. Talks with Ramana Maharshi, Letters from Sri Ramanasramam, Day by Day with Bhagavan போன்ற புத்தகங்களில், பகவான் ஸாதகர்களுக்கு அளித்த விடைகளே முக்கியமாக இடம் பெறுகின்றன. எனினும் பகவானின் வாழ்க்கை பற்றிய சில விலைமதிப்பற்றக் குறிப்புகள், பக்தர்கள் நினைவில் பதிக்கப் பெற்றிருந்தன. பகவானுடன் ஸத்ஸங்கத்தில் ஈடுபட்டபோது, அவர்கள் உணர்ந்து அனுபவித்த பல நுணுக்கமான விஷயங்களைப் பதிவு செய்ய வேண்டும் என்ற ஆவல் தீவிரமாக எழவே, 1956ஆம் ஆண்டு முதல், மூத்த பக்தர்களிடம் தொடர்ந்து கேள்வி கேட்க ஆரம்பித்தேன். “பகவானோடு நீங்கள், பரஸ்பரம் எவ்வாறு பழகினீர்கள்? அவர் உங்களுடன் எப்படிப் பழகினார்? அவருடன் உங்களுக்கு எப்படிப்பட்ட உறவு நிலவியது?” என்ற எனது கேள்விகளுக்கு, “நாங்கள் மிகவும் சாதாரணமானவர்கள். எங்களுக்கு அனைத்தும் பகவான்தான். அவரைப் பற்றிக் கேளுங்கள்; அதற்கு நாங்கள் விடையளிக்கிறோம்” என்று கூறுவர்.

1960ஆம் ஆண்டு முதல், நான் ரமணாச்ரமத்திலேயே நிரந்தரமாக வாழ்ந்து வந்தேன். ஆச்ரமத்தில் எனக்குக் கொடுக்கப்பட்ட கடமைகளை நிறைவேற்றக் கடுமையாக உழைத்தேன். ஆயினும் எனக்கு முழுமையான மகிழ்ச்சி ஏற்படவில்லை; எதனால் என்பதும் விளங்கவில்லை. ஆச்ரமத்தில், எனது நலனை விரும்பிய பெரியோர்களிடமிருந்து அறிவுரைகள் பல பெற்றேன். என்றாலும் திருப்தி ஏற்படவில்லை. எனது ஆசிரியர் டி.கே.சுந்தரேச அய்யர், “எங்கள் அறிவுரைகளால் திருப்தி ஏற்படாதபோது, பலராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஞானி ஒருவரின் வழிகாட்டுதலைப் பெறுவது நல்லது” என்று கூறி, என்னைக் கேரளத்தில் காஞ்சங்காடு ஆனந்தாச்ரமத்திலிருந்த ஸ்வாமி ராமதாஸிடம் அனுப்பினார். ஸ்வாமி அவர்கள், தனது ஆன்மீக வாரிசான அன்னை கிருஷ்ணாபாய் என்னும், இறைவனை உணர்ந்த ஞானியிடம் அனுப்பினார். “எனது குருநாதருக்கு நான் எவ்வாறு சேவை செய்ய வேண்டும்? நான் செய்ய வேண்டிய ஆன்மீக சாதனை யாது?” என அவரிடம் வினவினேன். “பகவானுடைய பழைய பக்தர்கள் அனைவரும் ஆச்ரமத்தைவிட்டு வெளியே சென்றுவிட்டனர். அவர்களை மீண்டும் ஆச்ரமத்திற்கு அழைத்து வந்து, அவர்களைக் கவனித்துக்கொள். அவர்களது இறுதிக்காலம் வரை அவர்களுக்குத் தேவையான சேவைகளைச் செய். இந்தச் சேவையே உனது சாதனை” என்று அவர் கூறியதும் நான் அதிர்ச்சியுற்றேன். நான் கிழக்கு மற்றும் மேற்கத்திய ஆன்மீக தத்துவங்களை நுணுக்கமாகப் படித்திருந்தேன். ஒருவர் தன் குருவின் சீடர்களுக்குப் பணிவிடை செய்வதைச் சாதனையாக, அவைகளில் எங்கும் கூறப்படவில்லை. அன்னை கிருஷ்ணாபாய் தொடர்ந்து, “இன்னொரு முக்கியமான விஷயம். பகவான் ரமணரின் உறவினர் என்ற நிலையில் உனக்கு ஏற்கனவே முக்தி கிடைத்துவிட்டதெனப் பலரும் கூறுவர். இந்து

சாஸ்திரங்களின்படி, இறைவனை உணர்ந்த ஞானி ஒருவரின் உறவினர்களும் முக்தி பெற்றவர்களே என்பார்கள். ஞானிக்கு முன்னால் ஏழு தலைமுறையினரும், பின்னால் ஏழு தலைமுறையினரும் கர்மத்திலிருந்து விடுபடுவார்கள் என்றெல்லாம் சொல்வார்கள். இவை ஒன்றையும் நம்பாதே. உன் ஆன்மீகப் பசிக்கு நீதான் உணவைத் தேடி உண்ணவேண்டும். கடவுள் எவ்வித பாரபட்சமும் இல்லாதவர். உனக்கு முக்தி வேண்டுமானால் எல்லோரையும் போல் நீயும் கடுமையாக உழைக்கவேண்டும். பகவான் ரமணரின் உபதேசங்களைப் பின்பற்று. 'நான் யார்?' என்ற ஆத்ம விசாரத்தைப் பழகு'' என்றும் கூறினார். என் முன்னே நின்ற முக்கியத்துவம் வாய்ந்த பணியை நினைத்து, உணர்ச்சிவசப்பட்டு நான் அழுதுகொண்டே, ''அம்மா! நான் கிளம்பிப் போய்விடுவேன். நீங்களோ வெகுதூரத்தில் இருக்கிறீர்கள்'' என்று கூறினேன். ''பப்பா உன்னை என்னிடம் ஒப்படைத்துள்ளார். நான் உன்னை வழிநடத்துகிறேன்'' என்று அன்னை உறுதிமொழி அளித்தார். ''நூற்றுக்கணக்கான மைல்களுக்கு அப்பாலுள்ள நீங்கள், என்னை எவ்வாறு வழிநடத்த முடியும்?'' என்ற எண்ணம் மனதில் எழுந்ததால், பெரிய கேள்விக்குறியோடு, பேச்சின்றி அவர் முகத்தைப் பார்த்தேன். அவர் சிரித்தபடி, ''அதைப்பற்றி நீ கவலைப்படாதே. ஒவ்வொரு நொடியும் உன்னோடு இருந்து உன்னை வழிநடத்துவேன்'' என்று ஆறுதல் மொழிகள் கூறினார். இன்றும்கூட அவர் எனக்கு வழிகாட்டுவதை என்னால் உணரமுடிகிறது.

ஆச்ரமத்திற்குத் திரும்பி வந்த பின்னர், அன்னை கிருஷ்ணாபாய் அவர்களின் அறிவுரைகளின்படி மனப்பூர்வமாகச் செயல்படத் துவங்கினேன். பழைய பக்தர்களைத் தேடிக் கண்டுபிடித்து, அவர்களை ஆச்ரமத்திற்கு மீண்டும் அழைத்து வருவதிலும், அவர்களுக்குப் பணிவிடைகள் செய்வதிலும்,

பகவானுடைய உபதேசங்களைக் கடைப்பிடிப்பதிலும் மும்முரமாக ஈடுபட்டேன். ஆரம்பத்தில் முழுமையாக வெற்றி கிடைத்ததென்றோ, என் பணியை நான் முழுமையாகப் புரிந்து கொண்டேன் என்றோ கூறமுடியாது. என்றாலும் நான் பணியைக் கைவிடவில்லை. பழைய பக்தர்களுக்குச் சேவை செய்வதே எனது சாதனை என அன்னை எனக்கு அறிவுறுத்தியது ஏன்? என்பது ஒரு கேள்விக்குறியாகவே இருந்தது. என் மனதில் மின்னல்போல் பதில் பளிச்சிட்டது. பகவானைப் பற்றிய நினைவுகளையும், அவர்களுடன் பகவான் கொண்டிருந்த உறவையும் பதிவு செய்யுமாறு அவர் என்னைப் பணித்துள்ளார் என்பதைப் புரிந்துகொண்டேன். இதுவரை செய்யப்படாத காரியம் அது. ஆர்வத்துடன் இப்பணியில் என்னை ஈடுபடுத்திக்கொண்டேன். தங்குதடையின்றி, தங்களது நினைவுகளைப் பகிர்ந்துகொண்ட மூத்த பக்தர்களை எனது சிரம் தாழ்த்தி வணங்குகின்றேன். நான் செய்த இப்பதிவுகள் பெரும்பாலும், அவ்வப்போது ஆச்ரம வெளியீடுகளாகவும், ஆச்ரமப் பிரசுரமான “மௌண்டன் பாத்” பத்திரிக்கையில் தொடர்ந்தும் வெளியிடப்பட்டன. பகவானைப் பற்றிய, தங்களது அற்புதமான நினைவுகளை என்னுடன் பகிர்ந்து கொள்ள முன்வந்த பெரும்பாறைகளாக (boulders) விளங்கிய குஞ்சு ஸ்வாமி, அண்ணாமலை ஸ்வாமி, ராமஸ்வாமி பிள்ளை, தேவராஜ முதலியார், சூரி நாகம்மா, மேஜர் சாட்விக் போன்றவர்களுக்கும், மற்றவர்களுக்கும் நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்.

எடுத்துக்காட்டாக, ராமஸ்வாமிப் பிள்ளை என்னைப் பார்த்தபோதெல்லாம் பகவான் சம்பந்தப்பட்ட ஏதாவது ஒரு நிகழ்ச்சியைப் பற்றிக் கூற ஆரம்பித்துவிடுவார். ஒருமுறை தென்னைமரம் ஒன்றைச் சுட்டிக்காட்டி, “நான் அதன்கீழ் நின்றுகொண்டு, இரும்புத் துரட்டி பொருத்தப்பட்ட நீளமான கம்பை உபயோகித்துத் தேங்காய்களைப் பறித்துக்

கொண்டிருந்தேன். மலைக்குப் போகும் வழியில் என்னைப் பார்த்த பகவான், ‘மூங்கிலால் ஆன துரட்டியை ஏன் பயன்படுத்தக் கூடாது? உலோகத்தால் ஆன துரட்டி மரத்தைப் புண்படுத்துமே! அது ஏற்கனவே தனது காய்களை எந்த எதிர்பார்ப்புமின்றி உனக்கு அளித்துக் கொண்டிருக்கிறது’ “ என்று கூறியதாகச் சொன்ன பிள்ளை மேலும் தொடர்ந்தார். “மிகவும் கெட்டிக்காரன் என என்னையே மெச்சிக் கொண்ட நான், உண்மையில் தவறிழைத்துவிட்டேன். பகவானோ ஆன்மீக அறிவுரையை – அது உலக நடைமுறைக்கு ஒவ்வாததாக இருக்கலாம் என்றாலும் அளித்துச் சென்றார். நான் நிறையத் தேங்காய்களைப் பறிக்க வேண்டிய நிலையில் இருந்ததால், மூங்கில் துரட்டி உடைந்துபோகக் கூடும் என்று தொடர்ந்து இரும்புத் துரட்டியையே உபயோகித்தேன். பகவான் மலையிலிருந்து இறங்கி வரும்போதும் நான் தொடர்ந்து பணியில் ஈடுபட்டிருந்தேன். திடீரென்று ஒரு தேங்காய் என் மூக்கின் மேல் விழவும் இரத்தம் கொட்ட ஆரம்பித்தது. பகவான் என் அருகே வந்து நின்றுகொண்டு, ‘என் சொற்களை நீ நம்பவில்லை. உன் தவறான செயல்கள் உன்னை எவ்வாறு துன்புறுத்தும் என்பதை இப்போதாவது புரிந்துகொண்டாயா?’ என்று மென்மையாக என்னைக் கடிந்து கொண்டார்” என்று பிள்ளை கூறினார்.

அவரிடமிருந்தும், மற்ற பக்தர்களிடமிருந்தும், மூழ்கடிக்கும் அளவு பெருவெள்ளமாக நினைவலைகள் பொங்கி வந்தன. அவற்றிற்கு எழுத்து வடிவம் தரவேண்டுமென அவர்களிடம் பணிந்து வேண்டிக் கொண்டேன்.

“பகவானைப் பற்றிய உங்கள் நினைவுகளையும், உங்களுக்கும் மற்றுமுள்ள பழைய பக்தர்களுக்கும், பகவானுக்குமிடையே நிகழ்ந்த எல்லா விஷயங்களையும் என்னுடன் பகிர்ந்து கொள்ள வேண்டுமெனக் கெஞ்சிக்

கேட்டுக்கொள்கிறேன். நீங்கள் கூறுவதனைத்தும் பகவானிடமிருந்து நேரடியாக வந்ததாக இருக்கும்'' என்று உரைத்தபோது அவர்களும் பெருந்தன்மையோடு எனக்குத் தக்கவாறு பதிலளித்தனர். ரமணாச்ரமத்தில் நான் இருந்த முப்பத்தேழு ஆண்டுகளில் எனக்குப் பேரானந்தத்தையும் அறிவையும் தந்தது, பகவானுடைய மூத்த பக்தர்களின் தொடர்பு என்றே கூறவேண்டும். என் ஆனந்தத்தை மற்ற ஸாதகர்களோடு பகிர்ந்துகொள்ள வேண்டும் என்ற பேராவல் பல்லாண்டுகளாக இதயத்தில் அடங்கிக் கிடந்தது. ஒவ்வொரு பக்தருக்கும் இந்த லீலையில் தனிப்பட்ட பங்கு ஒன்று இருந்ததே, இப்புத்தகம் வெளிவர அடிப்படைக் காரணம் எனலாம். அருணாசல ரமணரின் பக்தர்கள் - 'மலையின் சிறிதும், பெரிதுமான பாறைகள்' – எவ்வாறு இயற்கையாக, அழகாக அவரது பணியில் இணைந்தனர் என்பதை வெளிப்படுத்துவதே இந்த புத்தகத்தின் குறிக்கோள்.

பகவானுடைய மூத்த பக்தர்களைப் பற்றிய சொற்பொழிவுகளுக்கு ஏற்பாடு செய்த, ஆஷ்பெரோவில், உள்ள 'அஹம் retreat மைய'த்திற்கும், அருணாசலத்திலுள்ள 'அஹம் ஆச்ரம'த்திற்கும் நான் மீளாக்கடன் பட்டுள்ளேன். நெருங்கிய நண்பர்களால் ஒலிப்பதிவு செய்யப்பட்ட குறுந்தகடுகளில் இருந்தே இப்புத்தகம் பெரும்பாலும் தொகுக்கப்பட்டுள்ளது. அவர்களுக்கும் எனது ஆழ்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வார்த்தைகள் அனைத்தும் உதிர்ந்து போகட்டும்.
அவற்றின் ஸாரமான உண்மை உணர்வு மட்டும்,
எல்லோர் இதயத்திலும் மலரட்டும் என்பதே,
என் பணிவான வேண்டுகோள்.
இறைவனருள் எப்போதும் உள்ளது.

வே.கணேசன்

* * *

# அன்னை அழகம்மாள்



தென்னிந்தியாவில், தமிழ்நாட்டில், பலருக்கும் தெரியாத, திருச்சுழி என்ற பெயர் கொண்ட சிறிய கிராமம். 1879ஆம் ஆண்டு திருவாதிரைத் திருநாள் (ஆருத்ரா தரிசனம்); பகவான் அருணாசல சிவன், திருமால் மற்றும் பிரம்மாவின் ஆணவத்தை அழித்து, அவர்களுக்கு ஆன்ம ஞானத்தைப் புகட்டும் பொருட்டு, முன்னைப் பழம்பொருளுக்கும் பழம்பொருளான ப்ரம்ம ஸ்வரூபத்திலிருந்து, ஆதியந்தமற்ற, பேரொளியாகத் தோன்றிய அந்த அழிவில்லாத் தருணத்தைக் கொண்டாடும் திருநாள்.

திருச்சுழியில், அப்புனித நாளில், நள்ளிரவில், பழம்பெருமை வாய்ந்த பூமிநாதேச்வரரின் உத்ஸவமூர்த்தி, வீதிஉலா முடிந்து கோயிலுக்குள் திரும்பி வந்து கொண்டிருந்த வேளை; அதே சமயத்தில், வடக்குத் தெருவில், ஓர் எளிமையான வீட்டிலிருந்து பச்சிளம் குழந்தையின் அழுகுரல் ஓங்கி ஒலித்தது. அன்னை அழகம்மாள் அப்போதுதான் ஓர் ஆண்குழந்தையை ஈன்றெடுத்திருந்தாள். பிற்காலத்தில் உலகத்தவர், ‘பகவான் ஸ்ரீ ரமண மகரிஷி’ என்று போற்றப்போகும் அந்தக் குழந்தைக்கு, **வேங்கடராமன்** எனப் பெயர் சூட்டினர். பகவானுடைய வாழ்நாள் முழுவதும், அக்னி, ஒளி இவற்றின் தன்மைகள் முக்கியமான இடம் பெற்றிருந்ததை, அவருடைய சரித்திரம் தெளிவாக விளக்குகிறது. அன்னை அழகம்மாள் பலமுறை கருத்தரித்திருக்கிறாள். ஆயினும், பகவானைக் கருத்தரித்திருந்தபோது மட்டும் வயிற்றில் ஒருவித எரிச்சல் உணர்வு அனுபவித்தாள். அந்த எரிச்சல் உணர்வை தணிப்பதற்காக, வேப்பிலை, வில்வம் இவற்றைச் சேர்த்து

அரைத்தப் பசையை வயிற்றின் மேல் தினமும் தடவி, பாரம்பரியமான முறையில் வைத்தியம் செய்ய வேண்டியிருந்தது. பின்னர் பிரஸவம் பார்த்த கண் தெரியாத மருத்துவச்சி, குழந்தை பிறந்த சமயத்தில் பேரொளி ஒன்றைக் கண்டாள்.

அறியாப் பருவம் முதல், தன் இதயத்தில் 'அருணாசலா, அருணாசலா' என்ற ஒலியை வேங்கடராமனால் கேட்கமுடிந்தது. அந்த ஒலி எப்போதுமே அவனுள்ளே ஒலித்தபோதும், 'அது என்ன?' என்பதை அவன் அறியவில்லை. பிற்காலத்தில், அவன் குருவின் ஸ்தானத்தை அடைந்தபோது, "எப்போதுமே அவ்வொலி தொடர்ந்து இருந்தபோதும், அதற்கான விளக்கத்தை யாரிடமும் கேட்டுத் தெரிந்து கொள்ளாதது ஏன்?" என்று பகவானிடம் பலரும் வினவினர். அதற்கு அவர், "நாம் மூச்சு விடுகிறோமா என்று நாம் யாரிடமாவது கேட்டுத் தெரிந்துகொள்ள முற்படுவோமா? அதே போன்று, என்னிடம் பிறப்பில் இருந்தே ஒலித்துக் கொண்டிருந்த அந்த ஒலியை எல்லோருமே தங்களுக்குள் கேட்பார்கள் என்று நம்பினேன். அது இயற்கைக்கு மாறானது என்று எண்ணவில்லை" என்றார். (இதே போன்று, ஸ்வாமி விவேகானந்தர், சிறுவயது முதலே உறங்கும்முன், புருவ மத்தியில் நீலநிற ஒளியொன்றைக் காண்பது வழக்கம். "இந்த அஸாதாரண நிகழ்ச்சிக்கு விளக்கம் கேட்காதது ஏன்?" என்று அவரிடமும் கேள்வி கேட்கப்பட்டது. "எல்லோருமே அந்த ஒளியைத் தினமும் பார்க்கிறார்கள் என்றுதான் நான் எண்ணினேன்" என்று அவர் பதிலிறுத்தார்.) இந்த ஒன்றைத் தவிர, வேங்கடராமன் ஒரு சாதாரணமான சிறுவனைப் போன்றே இருந்தான். பிற்காலத்தில், அவன் பெரிய ரிஷியாவான் என்பதைக் குறிப்பால் உணர்த்த, பிரமிக்கத்தக்க எதுவும் அவனிடம் இருக்கவில்லை.

பகவானுடைய தந்தையின் மரணத்திற்குப்பின், அவருடைய விதவைத் தாயார், மானாமதுரையில் தனது மைத்துனரின் வீட்டில் வசிக்க முற்பட்டார். வேங்கடராமன், திருச்சுழியிலிருந்து முப்பது மைல் தொலைவிலிருந்த மதுரைக்குப் படிப்பதற்காக அனுப்பி வைக்கப்பட்டான். அங்கு அமெரிக்க மிஷன் பள்ளியில் அவன் படித்தான். வேங்கடராமன் இந்துமத சாஸ்திரங்கள் எதையுமே படித்ததில்லை என்பது வியக்கத்தக்கதாக உள்ளது. அறுபத்து மூன்று சைவ நாயன்மார்களைப் பற்றிக் கூறும் பெரியபுராணத்தை மட்டுமே படித்திருந்தான். பிற்காலத்தில், “எனக்கு தத்துவ சாஸ்திரங்களிலோ, ஆன்மீகத்திலோ உபயோகப்படுத்தப்படும் ப்ரம்மம், ஆத்மா, ஸமாதி, ஞானம், மனம், ‘நான்’ முதலிய சொற்களைப்பற்றி எதுவுமே தெரியாது” என பகவானே கூறியுள்ளார்.

மதுரையில் இருந்தபோது, தனது பதினாறாவது வயதில் அவனுக்கு மரண அனுபவம் உண்டாயிற்று. ‘தந்தை’யான ‘அருணாசலம்’ தனது தனயனை மீண்டும் தன் வட்டத்திற்குள் வரவழைத்துக் கொள்ளவேண்டும் எனக் கருதியதால், அந்த அனுபவத்தைக் கொடுத்தார் பின்னால் நிகழப்போகும் சம்பவங்களுக்கு அறிகுறியாக, தனது உடலும், மனமும் எரிந்து சாம்பலாவதாக வேங்கடராமன் உணர்ந்தான். தனது உடல் மயானத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டு, எரியூட்டப்படுவதைக் கண்ணால் கண்டான். யாரிடமும் கூறாமல், மதுரையிலிருந்து திருவண்ணாமலைக்கு ஓடிப்போய், அருணாசலேச்வரர் கோயிலினுட்சென்று, அங்கு எழுந்தருளியுள்ள அக்னிலிங்கத்தை ஆறத்தழுவியபடி, “அப்பா! உனது கட்டளைப்படி வந்துவிட்டேன். உன் இஷ்டம், என் இஷ்டம்” என்று கூறும் வரை மதுரையில் துவங்கிய உடல் எரிச்சல் தொடர்ந்து இருந்து, தணிந்தது.

பகவான் வீட்டைவிட்டுக் கிளம்பிய பின், அவர் எங்கு இருக்கிறார் என்ற விபரம் யாருக்குமே தெரியவில்லை. கவலையால் உருகிய தாய், மகனைத் தேடுவதற்கு எடுக்காத முயற்சிகளே இல்லை எனலாம். வேங்கடராமன் கேரளத்திலுள்ள திருவனந்தபுரத்திற்குச் சென்றுள்ளதாக சில வதந்திகள் வந்தன. இளம் பிராம்மணச் சிறுவன் ஒருவன் அங்கு வீதிகளில் சுற்றித் திரிவதாக யாரோ செய்தியும் அனுப்பியதால், அழகம்மாள், மூட்டை முடிச்சுக்களோடு திருவனந்தபுரத்திற்குச் சென்றார். குறிப்பிட்ட அந்தச் சிறுவனைச் சந்திக்கவும் நேர்ந்தபோது, தன்னுடன் வருமாறு கெஞ்சினார் அல்லது தன்னை நேருக்கு நேர் பார்க்கவாவது வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். ஆனால் அந்த இளைஞன், எதையும் காதில் வாங்காமல் ஓடிப்போகவும் செய்தான். அவன், தனது மகன் வேங்கடராமன்தான் என்று அன்னை பூரணமாக நம்பினாள். மீண்டும் துயரத்தில் ஆழ்ந்த அவருக்கு, திருவண்ணாமலையில் இருந்து வந்த ஒருவர் கூறிய செய்தி, சற்று தைரியமும், ஊக்கமும் தரும் வகையில் இருந்தது. அங்கு ஒரு இளைஞன் தன் பெயரைத் ‘திருச்சுழி வேங்கடராமன்’ என எழுதிக் காட்டியதாக அவர் கூறவும், இளகிய மனதையுடைய தன் மைத்துனரை அங்கு அனுப்பித் தனது மகனைத் தேடிப்பார்க்கும்படி கூறினார். அவரும் திருவண்ணாமலை சென்று திரும்பியபோது, கேள்விப்பட்ட செய்தி உண்மையானதுதான் என்றும், “நான் வேங்கடராமனைப் பார்த்தேன்; அவன் ஆழ்ந்த தியானத்தில் மூழ்கியிருக்கிறான்; வீட்டிற்குத் திரும்பி வருமாறு கெஞ்சிக் கேட்டுப் பார்த்தேன். ஆனால் அவன் பதில் கூறவில்லை; அவனிடம் எந்தச் சலனமும் ஏற்படவில்லை; பாறாங்கல்லைப் போன்று அவன் அசைவற்று இருந்தான்” என்றும் தெரிவித்தார்.

தான் வேண்டிக்கொண்டால், மகன் மறுப்புத் தெரிவிக்கமாட்டான் என்று பூரணமாக நம்பியதால், அழகம்மாள்,

மகனிடம் திரும்பி வரவேண்டுமெனக் கெஞ்சிக் கேட்டுக் கொள்வதற்காகப் புறப்பட்டார்.



இதற்குள் பகவான் மதுரையிலிருந்து திருவண்ணா-மலைக்கு வந்து இரண்டு ஆண்டுகள் உருண்டோடி இருந்தன. 1898ஆம் ஆண்டு, பகவான் பவளக்குன்றில் ஒரு பாறையின்மீது அமர்ந்திருந்தார். அங்கு வந்து சேர்ந்த அன்னை, மகனிடம், “நீ வீட்டிற்குத் திரும்பி வந்துவிடு. நான் உனக்கு எந்தத் தொல்லையும் தரமாட்டேன். இங்கு கவனிப்பாரற்று இருக்கும் உனக்கு, உணவு அளித்து, உடம்பைக் கவனித்துக் கொள்கிறேன். உன் வாழ்க்கையில் குறுக்கிடமாட்டேன். உனது ஆன்மீக வாழ்க்கையை அங்கும் தொடரலாம். தயவுகூர்ந்து திரும்பி வந்துவிடு” என்று ப்ரார்த்தித்துக் கொண்டார்.

பகவானிடமிருந்து எந்தவித மறுமொழியும் இல்லை. பாறையைப் போன்று அசைவற்று அமைதியாக இருந்தார். ("அருணாச்சலத்திலுள்ள மிகப்பெரிய பாறைகூட எப்போதாவது ஒரு சமயம் அசையக்கூடும்; ஆனால், பகவான் அசையவே மாட்டார், உங்களால் அசைக்கவும் முடியாது" என்று பிற்காலத்தில் முருகனார் கூறுவதுண்டு.)

மலைமீது ஏறும்போதும், இறங்கும்போதும் அழுது-கொண்டே செல்லும் இந்த வயதான ஸ்திரீயைக் கண்ணுற்ற சில திருவண்ணாமலைவாசிகள், ஒருநாள் அந்த இளம் துறவியைக் கடிந்துகொண்டனர். "அந்த ஸ்திரீ கடந்த மூன்று நாட்களாக அழுதுகொண்டிருப்பதைக் கவனித்துக் கொண்டு-தான் இருக்கிறோம். நீங்களோ, வாயைத் திறப்பதில்லை. வேண்டுகோளை ஏற்கவோ, மறுக்கவோ செய்யலாமல்லவா? ஏன் எந்தப் பதிலும் கூறாமல் இருக்கிறீர்கள்?" என்று நிந்தித்தனர். அதன் பலனாக பகவான் தன் நிலையைச் சற்றுத் தளர்த்திப் பச்சாதாபத்தினால், ஒரு காகிதத்தில் பதில் எழுதிக் கொடுத்தார். அன்னைக்குத் தந்த பதிலே, எழுத்து வடிவில் பகவான் அளித்த முதல் உபதேசம். **"அவரவர் பிராரப்தப்பிரகாரம் அதற்கானவன் ஆங்காங்கிருந் தாட்டுவிப்பன். என்றும் நடவாத தென்முயற்சிக்கினு நடவாது; நடப்ப தென்றடை செய்யினு நில்லாது: இதுவே திண்ணம். ஆகலின், மௌனமாயிருக்கை நன்று"** என்று காகிதத்தில் எழுதி இருந்தார் பகவான்.

மேலெழுந்தவாரியாக நோக்கும்போது, அந்த பதில், தாயின் வேண்டுகோளுக்கு மறுப்புத் தெரிவிக்கப்பட்டதாக மட்டுமே தோன்றும். ஆனால் அந்த வார்த்தைகளில் ஆழ்ந்த கருத்துள்ளது. 'விதிக்கப்பட்டது நடக்கும். எது விதிக்கப்பட-வில்லையோ அது நடவாது' என்னும்போது, ஒரு மனிதன் செய்யவேண்டியதுதான் என்ன? அனைத்துமே ஏற்கனவே

தீர்மானிக்கப்பட்டவை என்றால் மனிதனின் உண்மை நிலை என்ன? இந்த சந்தேகம், அடிப்படைக் கேள்வியான 'நான் யார்?' என்பதில் கொண்டு விடுகிறது. 'அது கட்டாயமாக நடந்தே தீரும்' என்ற அடுத்த வாக்கியம் மிகவும் ஆணித்தரமாகக் கூறப்பட்டது என்றால், அது, மனதிற்குப் பிடித்துக்கொள்ள ஒரு நம்பிக்கையான ஆதாரம் அவசியம் என்பதால்தான். கடைசி வாக்கியம் 'அதனால் மௌனமாக இருப்பதே மிகவும் நல்ல வழி' என்பது. 'மௌனமாக இருத்தல்' என்பது சரணாகதியை நோக்கி நாம் எடுத்து வைக்கும் ஆக்கப்பூர்வமான முதல் அடி – சரணாகதியே முதல் படி. தன்னைத் தான் தேடுதல் என்னும் பணியில் நம்மை வழிநடத்தக் கூடிய ஒரு சக்தி அது. அமைதியற்ற மனதால், இந்தக் காரியத்தில் ஈடுபட இயலாது. இந்த முதல் உபதேசத்தில் மறைந்து கிடக்கும் ஞானம் குறித்து நாம் ஆழ்ந்து சிந்திப்பது அவசியம். ஒரு ஞானியின் வாழ்க்கை வரலாற்றைப் படிக்கும்போது கற்பனைக் கதையையோ அல்லது சரித்திரக் குறிப்புகளையோ படிப்பது போலன்றி, மிகுந்த மரியாதையோடும், பக்தியோடும், படித்தால் ஒரே ஒரு வாக்கியமோ – ஏன் ஒரே ஒரு வார்த்தையோ கூட நமக்கு வழிகாட்டமுடியும். அன்னை அழகம்மாள் மூலம் நமக்குக் கிடைத்துள்ள, பகவான் அருணாசல ரமணரின் உபதேசம் மிகவும் முக்கியமானதும், சக்தி வாய்ந்ததும் ஆகும்.

இயேசுநாதர் தன் தாயிடம், "அன்னையே! உன்னிடம் எனக்கு என்ன வேலை உள்ளது? நான், என் தந்தையின் பணியைச் செய்ய வந்துள்ளேன்" என்றார். அதே போன்று, பகவான் தன் காகிதக் குறிப்பின் மூலமும், செயலாலும், "எனக்கு என் தந்தையின் பணி காத்திருக்கிறது. இதயத்தில் மறைந்து கிடப்பதும், மறந்து போனதுமான, உண்மையான நிலை மௌனமே என்பதை உணர்த்தவே வந்துள்ளேன். அருணாசலமென்பது, அனைவருடைய இதயத்திலும் உணரப்-

படும், 'நான் இருக்கிறேன்' என்ற "அசைவிலாத அமைதி உணர்வே" என்பதை மீண்டும் நினைவூட்டவேண்டும். தற்போது மனம் அதை மறைத்துக் கொண்டிருக்கிறது. அதனால் மனதை விலக்கி, இதயத்தை மீண்டும் அதன் ஒளிமயமான நிலைக்குக் கொண்டுவர வேண்டும். இதுவே என் தந்தையின் பணி. அதனால், அழகம்மாளே! என்னை ஈன்றவளே! நீயும் கூட அதை ஏற்றுக்கொள்" என்று கூறியுள்ளார்.

பகவானுடைய தாயார் ஏமாற்றத்துடன் வீட்டிற்குத் திரும்பினார். மிக உயர்ந்த உபதேசத்தை 1898இல் பகவான் அன்னைக்குக் கொடுத்திருந்தபோதும், ஏறத்தாழ பதினைந்து ஆண்டுகள் குடும்ப விவகாரங்களில் சிக்கியபடி இருந்தார் அவர். 1913இல் பேரிடியாக வந்தது அவரது நெருங்கிய உறவினர்களின் மறைவு. பகவானின் இளைய சகோதரரும் சகோதரியும் மட்டுமே எஞ்சி இருந்தனர். அன்னை அழகம்மாள் துயரத்தில் மூழ்கினார். சந்ததியின்றிக் குடும்பம் நசித்துப் போகுமோ என்ற நிலை. பகவானுடைய மூத்த சகோதரருக்குத் திருமணமாகி இருந்தது என்றாலும், குழந்தைப்பேறு இல்லாது தன் மனைவியை இளம் விதவையாக்கி, அவர் தனது இருபத்து இரண்டாம் வயதில் இறைவனடி சேர்ந்துவிட்டார். திருமணமாகியிருந்தும், பகவானது தங்கைக்குக் குழந்தைகள் பிறக்கவில்லை. பகவானது இளைய சகோதரர், எனது பாட்டனார் ஆவார். அவருக்குத் திருமணமாகியிருந்தபோதும், குழந்தைப்பேறு இல்லாததால், 1913ஆம் ஆண்டு அவரையும் அவரது மனைவி மங்களத்தையும், விரூபாக்ஷ குகையிலிருந்த பகவானிடம் அழைத்துச் சென்று, 'புத்திரபாக்கியம் கிட்ட அருள் புரிய வேண்டுமென' அன்னை ப்ரார்த்தித்துக் கொண்டார். அடுத்த ஆண்டே அவர்களுக்குக் குழந்தையும் பிறந்தது. பகவானுக்கு நன்றி கூறும் வகையாகக் குழந்தைக்கு வேங்கடராமன் என்று பெயர் சூட்டினர். பகவானுடைய வம்சத்தின் ஒரேயொரு குலக்கொழுந்தாக அவர் விளங்கினார்.

1914ஆம் ஆண்டில், குடும்பச் சிக்கலில் இருந்து மீளாத நிலையில், அழகம்மாள் மீண்டும் பகவானை விரூபாக்ஷ குகையில் வந்து பார்த்தார். அப்போது கடுமையான டைபாய்டு ஜுரத்தால் தாக்கப்பட்டார். அச்சமயம், “ஹே அருணாசலா! ஞானக் கனலே! என் தாயை உனது ஒளியால் போர்த்தி, உன்னோடு சேர்த்துக்கொள்” என்று மனமுருகிப் ப்ரார்த்தித்து நான்கு செய்யுட்களைப் பாடினார்.

அவையாவன:

அலையா வருபிறவி அத்தனையு மாற்ற
மலையா எழுந்த மருந்தே – தலைவாநின்
தாள்கதியாய் வாழும்என் தாய்தாபம் ஆற்றியே
ஆள்வதுவும் உன்கடனே யாம் (1)
காலகா லாவுன் கமல பதம்சார்ந்த
பாலன் எனையீன்றாள் பால்அந்தக் - காலன்தான்
வாரா வகையுன்கால் வாரிசமே காட்டுவாய்
யாராயிற் காலனுமே யார்? (2)
ஞானாங்கி யாய்ஓங்கு நல்லருண ஓங்கலே!
ஞானாங்கி யால்அன்னை நல்லுடலை – ஞானாங்க
மாகச்செய்து உன்பதத்தில் ஐக்கியமாக் கிக்கொள்வாய்
சாகத்தீ மூட்டுவதேன் சாற்று (3)
மாயா மயக்கமதை மாற்றருண மாமலையென்
தாயார் மயக்ககற்றத் தாமதமேன் - தாயாகித்
தன்னையடைந் தார்வினையின் தாக்கறுத்தாள் வாருலகில்
உன்னையலால் உண்டோ உரை! (4)

‘அன்னையும் காப்பாற்றப்பட்டார்’ என்பதைக் கூறத் தேவையில்லை. பகவானுடைய ப்ரார்த்தனை அவரது தாய்க்காக மட்டுமன்று; நம் ஒவ்வொருவருக்காகவும் செய்யப்பட்டது. ஆத்ம விசாரத்தை நாம் துவங்கும்போது அருணாசலத்தின் ஞான ஒளி நம்மையும் சூழ்ந்துகொண்டு அருள் புரியும்.

1916இல், குழந்தை வேங்கடராமனை – என் தந்தையை – பகவானுடைய தங்கையின் பொறுப்பில் விட்டுவிட்டு, சிறிய மருமகள் காலமானார். உலக வாழ்க்கை வெறுத்துப்போன அந்நிலையில், அழகம்மாள் பகவானுடன் நிரந்தரமாக தங்குவதற்காக வந்துவிட்டார். அவரைப் பக்குவப்படுத்துவதற்குப் பகவானுக்கு எட்டு ஆண்டுகள் ஆயின. பகவான் அதை எப்படி சாதித்தார் என்பதை விளக்கும் பல கதைகள் உள்ளன. உதாரணமாக – அன்னை, பிராம்மண குலத்திலுதித்த காரணத்தால், ஆசார அனுஷ்டானங்களில் மூழ்கி இருந்தார். அவரது அபிப்பிராயங்களிலிருந்து, பகவான், அழகம்மாளை விடுவிக்க வேண்டியிருந்தது. பிராம்மண குல ஆசாரப்படி, ஒரு பிராம்மணரின் துணிமணிகள், உணவு, சமையலறை மற்றும் அவர் உபயோகிக்கும் பொருட்கள் ஆகியவற்றை, பிராம்மணரைத் தவிர, மற்றவர்கள் தொடவோ, சுத்தம் செய்யவோ கூடாது. இந்த விதி மீறப்பட்டால், அவர்கள் அசுத்தமடைந்துவிட்டதாகக் கருதப்பட்டனர். நாயையோ அல்லது கீழ்ஜாதியினரையோ தொட்டுவிட்டால், ஆசாரமாக உள்ள பிராம்மணன், தன்னைச் சுத்தம் செய்துகொள்ள குளிக்க வேண்டும்.

ஸ்கந்தாச்ரமத்திலும், விரூபாக்ஷ குகையிலும் நிறைய நாய்கள் இருந்தபடியால் அவை அழகம்மாளை எண்ணற்ற முறை தீண்டிவிடும். இதன் காரணமாக அவர் ஒரு நாளைக்குப் பத்து முறை கூடக் குளிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. அவரிடம் அனுதாபம் கொண்ட பண்டிதர் காவ்ய கண்ட கணபதி முனி, “இந்து சாஸ்திரப்படி, ஒரு ஞானியைத் தொட்டுவிட்டால் அசுத்தம் நீங்கிவிடும்; பாவங்கள் போய்விடும்; அதனால் குளிக்க வேண்டிய அவசியமுமில்லை” என்று கூறினார். அதன் பின்னர், தாயார் தன்னிடம் நெருங்கிவந்தால் பகவான் காரணத்தைப் புரிந்துகொள்வார். பகவானைத் தொட்டுவிட்டு அவர் திரும்பிச் சென்ற பின்னர், பகவான்,

“ஏதாவது நாய் அம்மாவைத் தீண்டியிருக்கும்” என்று விஷமத்தனமான சிரிப்புடன் கூறுவதுண்டு. பிராம்மணர்கள் பூண்டு, வெங்காயம் சாப்பிடமாட்டார்கள். ஒருநாள், சிறிய வெங்காயம் ஒன்றைக் கையில் வைத்துக்கொண்டு, அன்னையிடம் காட்டி, “அம்மா! ஜாக்கிரதை! சொர்க்கத்தினுள் நீ நுழையாதபடி, வெளியே தள்ளுவதற்காக, இது சொர்க்கத்தின் வாசலில் நிற்கும்” என்று பரிஹாஸம் செய்தார். இத்தகைய விமர்சனங்கள் மூலமாக அழகம்மாளைத் தேவையற்ற கருத்துக்களில் இருந்து விடுவித்தார்.

உறவினரிடமிருந்த பற்று நீங்கிவிட்டபோதும், மகன் மீதிருந்த பாசத்தை அவரால் விலக்க இயலவில்லை. பகவான், சிறு வயதில் அப்பளத்தை விரும்பி உண்பார் என்பதால், அதைத் தயார் செய்யத் தேவையான உபகரணங்களை எல்லாம் ஆச்ரமத்திற்கு வருவோர் மூலம் சேகரித்தார். ஒருநாள் அப்பளம் தயாரிப்பதில் மும்முரமாக ஈடுபட்டபோது, பகவானை விளித்து, “நீயும் சற்று உதவி செய்யக்கூடாதா? நான் அப்பளம் தயார் செய்யப் போகிறேன்” என்று கூறினார். தாய்ப்பாசம் கண்ணை மறைக்கவே, பகவானுடைய சிறுவயது ஆசையைப் பூர்த்தி செய்வதில் ஆர்வம் பலமாக இருந்தது. இதைப் புரிந்துகொண்ட பகவான், “நீ உன்னுடைய அப்பளத்தைக் குகைக்குள் செய். நான் என்னுடையதை வெளியே பண்ணுகிறேன்” என்று பதில் கூறினார். இவ்வாறுதான் ‘அப்பளப் பாட்டு’ எழுதப்பட்டது. அதில் அப்பளம் செய்யும் முறையை, முக்தி பெறுவதற்கான வழியோடு ஒப்பிட்டுக் கூறியுள்ளார். அப்பளம் செய்யத் தேவையான ஒவ்வொரு பொருளும், முக்திக்குத் தேவையான விஷயங்களாக உருவகப்படுத்தப்பட்டு உள்ளன.



விரூபாக்ஷ குகை ( பழைய புகைப்படம்

## அப்பளப்பாட்டு

### பல்லவி

அப்பள மிட்டுப் பாரு – அத்தைச்
சாப்பிட்டுன் ஆசையைத் தீரு.

### அனுபல்லவி

இப்புவி தன்னி லேங்கித் திரியாமல்
சற்போ தசுக சற்குரு வானவர்
செப்பாது சொன்ன தத்துவ மாகிற
வொப்புயர் வில்லா வோர்மொழி யின்படி – (அப்)

### சரணம்

தானல்லா வைங்கோச க்ஷேத்ர மிதில்வளர்
தானென்னு மானமாந் தான்ய வுளுந்தை
நானாரென் ஞான விசாரத் திரிகையில்
நானல்ல வென்றே யுடைத்துப் பொடித்து – (அப்)
சத்சங்க மாகும் பிரண்டை ரசத்தொடு
சமதம மாகின்ற ஜீரக மிளகுடன்
உபரதி யாகுமவ் உப்போ டுள்ளநல்
வாசனை யாம்பெருங் காயமுஞ் சேர்த்து – (அப்)
கன்னெஞ்சில் நான்நான் என்று கலங்காமல்
உண்முக உலக்கையால் ஓயா திடித்து
சாந்தமாங் குழவியாற் சமமான பலகையிற்
சந்ததஞ் சலிப்பற சந்தோஷ மாகவே – (அப்)
மோனமுத் ரையாகு முடிவில்லாப் பாத்ரத்தில்
ஞானாக்னி யாற்காயு நற்பிரம்ம நெய்யதி
நானது வாகவே நாளும் பொரித்துத்
தானே தானாக புஜிக்கத் தன்மய – (அப்)

‘நான்’ என்னும்
அகங்காரத்தை,
ஆன்ம விசாரமென்னும்
உள்நாட்டத்தால்
இல்லாமல் செய்து

ஸத்ஸங்கத்தால் மனதை
மென்மையாக்கி,

ஸமம், தமம் இவற்றைப்
பழகி, பற்றுக்களை
ஒழித்து,

நல்ல வாசனைகளை
அதிகமாக்கி,

உறுதியான மனதில்,
‘நான்’ என்று கலங்காமல்,

உள்முக நாட்டத்தோடு
சாந்தமாகவும்,
சமநோக்குடனும் இருந்து
எப்போதும் விசாரத்தில்
ஈடுபடவேண்டும்.

மௌனத்தைக்
கடைப்பிடித்து,
ஞானாக்னியால்
அஞ்ஞானத்தைப்
பொசுக்கி,
தன்னைத்தானே
உணர்ந்து,
ஆனந்தம்
அடையவேண்டும்.

தான்ய உளுந்தை,

திரிகையில் இட்டுப்
பொடித்து,
மாவாக்கி,

பிரண்டை
ரஸத்தால் மாவை
மென்மையாக்கி,

மிளகு, ஜீரகம்,
உப்பு இவற்றைச்
சேர்த்து,

பெருங்காயத்தைக்
கூட்டி,

உலக்கையால்

கல்லில் ஓயாமல்
இடித்து, சமமான
பலகையில் இட்டு
அப்பளம் ஆக்க
வேண்டும்.

பாத்திரத்தில் நல்ல
நெய்யில்
பொரித்துப் புசிக்க
வேண்டும்.

இப்பாடலின் உட்கருத்து, பகவானின் தாயாருடைய இதயத்தில் ஆழமாகப் பதிந்து, அவர் முழுமையாக மாறிவிட்டார்.

அன்னைக்கு அவரது உடைமைகளில் மிகுந்த பற்று இருந்தது. இந்தக் குணத்தையும் பகவான் அருமையான விதத்தில் மாற்றி அமைத்தார். ஒருநாள், ஸ்கந்தாச்ரமத்தில் வாழ்ந்த சபாபதி என்ற துறவி பக்தர், மிகவும் சிறிய கிழிந்த துணியை உடுத்தியிருந்தார். “சபாபதி! நீ ஏன் கிழிந்த துணியைக் கட்டிக் கொண்டிருக்கிறாய்?” என்று அன்னை வினவினார். அதற்கு அவர் விளையாட்டாக, “நீங்கள் பதினெட்டு முழம் நீளமுள்ள பெரிய புடவையை அணிந்துள்ளீர்களே, அதிலிருந்து எனக்குக் கொஞ்சம் கொடுக்கக் கூடாதா?” என்று பதில் கூறினார். அன்னை உடனே தனது புடவையிலிருந்து இரண்டு கெஜத்தைக் கிழித்து சபாபதிக்குத் தந்தார். தாயின் பொருட்பற்று குறைய ஆரம்பித்தது.



ஸ்கந்தாச்ரமம் (பழைய புகைப்படம்)

ஒருநாள், விறகு வெட்டுபவர்கள் சிலர், ஸ்கந்தாச்ரமத்திற்கு வந்து, “பகவானே! எங்களுக்கு மிகவும் பசியாக உள்ளது” என்று உரக்கக் கூவினர். அன்னை அழகம்மாள், தான் உண்பதற்கு முன்னால் யாரோடும் உணவைப் பகிர்ந்து கொள்ளமாட்டார். மற்றவர்கள் முதலில் உண்டுவிட்டால் உணவு அசுத்தமாகிவிடும் என்பது அவரது கருத்து. பகவானுக்கு அது நன்றாகத் தெரியும் என்றபோதும் குஞ்சு ஸ்வாமியிடம் கூறி, சமைத்து வைத்துள்ள உணவை விறகுவெட்டிகளுக்குக் கொடுக்கும்படி தாயிடம் தெரிவிக்குமாறு கூறினார். தாயோ தயங்கினார். “நான் இன்னும் உணவருந்த-வில்லை என்று பகவானிடம் சொல்” என்று மறுப்புத் தெரிவித்தார். குஞ்சு ஸ்வாமி பகவானிடம் விஷயத்தைக் கூறியபோது, பகவான் தாயிடம் சென்று, அவரைக் கடிந்து கொண்டார். “ஓஹோ! இதுதான் காரணமா? அவர்களெல்லாம் உன்னிலிருந்து அன்னியமானவர்கள் என நீ நினைக்கிறாய். நேரில் வந்து பார். அங்கே அவர்கள் தூரத்தில் நின்று-கொண்டிருக்கின்றனர். அவர்கள் யாரென்று உனக்குத் தெரியுமா? நன்கு அவர்களைப் பார்” என்றதும் அன்னையும் உற்று நோக்கினார். “அவர்களெல்லாம் அருணாசல ஸ்வரூபம். அருணாசலத்தின் வெவ்வேறு உருவங்கள்” என்றார் பகவான். “தீண்டத்தகாதவர்கள்” என்ற சொல்லை பகவான் உபயோகிக்கவில்லை. அக்கணத்திலிருந்து, அனைவரிடமும் அருணாசலத்தையே அன்னை கண்டார். தனக்கும் பிறருக்கும் எந்த வித்தியாசமும் இல்லை என்பதை உணர்ந்தார்.

பகவான் தன் தாய்க்குச் செய்யவேண்டிய கடமைகள் அனைத்தையும் செய்தார். ஏற்கனவே, ‘குரு’ என்ற நிலைக்கு வந்துவிட்டபோதும், அவருக்குப் பணிவிடை செய்ய மிகக் குறைவானவர்களே இருந்தனர். அவர்கள் தேவையான தண்ணீரைச் சுமந்து கொண்டு மலையடிவாரத்திலிருந்து மிகவும் சிரமப்பட்டு மலையில் ஏறி வருவார்கள். அவ்வாறு

இருந்தும் பகவானே அன்னைக்குத் தேவையான நீரை எடுத்து வருவார். இரண்டு பெரிய பாத்திரங்களில் விளிம்புவரை நீரை நிரப்பி எடுத்துவந்து, அன்னையை அமரச்செய்து, பகவான், தாயின் மேல் ஊற்றிக் குளிப்பாட்டுவார். அவரது வஸ்திரங்களைப் பகவானே துவைக்கவும் செய்வார். தாயின் உடம்பை நன்கு பராமரித்து, அன்போடு பழகியபோதும், மாற்றம் வரவழைக்க வேண்டிய இடத்தில் கடுமையாக நடந்து கொள்வார். மெதுவாக, அன்னையைக் கட்டுப்படுத்திய ஆசாரங்கள், சமூக வழக்கங்கள், இவற்றிலிருந்து அவரை விடுவித்தார். மகனுக்கு உரிய அன்போடு இருந்த பகவானைப் போன்ற உத்தம குருவுடனேயே வாழ்ந்த அன்னைக்குப் பக்குவமடைய எட்டு ஆண்டுகள் தேவைப்பட்டன. அனைத்தையும் பணிவுடன் ஏற்றுக்கொண்டு, மாற்றத்திற்கு வழிவகுத்த தாய்க்கும், மகனுக்கும் இருந்த உறவின் அழகு குறிப்பிடத்தக்கது. (இதிலிருந்து நாம் கற்க வேண்டிய பாடம் - சில ஆண்டுகள் சாதனை செய்தபின் முன்னேற்றம் ஏற்படவில்லையானாலும் நம்பிக்கையில் தொய்வு ஏற்படக்-கூடாது என்பதுதான்.)

ஒரு நாள் பகவானுடைய தங்கை வந்தார். “அம்மா! உனக்கு உடல் நலமில்லாமல் இருக்கிறது. என் வீட்டில் சௌகரியங்கள் இருப்பதால், நீ என்னுடன் இருந்துவிடு” என்றார். அன்னை மறுப்புத் தெரிவித்து, பின் பகவானை நோக்கி, “நான் உன் மடியிலேயேதான் மரணமடையவேண்டும். நான் இறந்தபிறகு என் உடலை முட்புதரில் தூக்கி எறிந்தாலும் கவலையில்லை” என்று கூறினார். இந்த நிகழ்ச்சிக்குப் பின், வெகுவிரைவிலேயே அன்னையின் உடல்நிலை மிகவும் மோசமாகியது. அவர் உடலை உகுக்க வேண்டிய அன்று காலை முதல், பகவான், தனது இடது கையை அவர் தலை மீதும், வலது கையை வலது மார்பின் மீதும் வைத்து, அருகிலேயே அமர்ந்திருந்தார். கிட்டத்தட்ட

எட்டு மணிநேரம் அந்த நிலையிலேயே உட்கார்ந்திருந்தார். அழகம்மாளின் முடிவு நெருங்கிவிட்டதை அங்கிருந்த பக்தர்கள் உணர்ந்தனர். பகவான் தன் தாயின் ஜீவனை எல்லையற்ற பெருநிலைக்கு உயர்த்திய புனிதமான அக்காட்சியை பக்தர்கள் கவனித்தனர். அன்று அங்கிருந்த குஞ்சு ஸ்வாமி, "ஒரு ஜீவன், பூரணப் பொருளுடன் எவ்வாறு கலக்கிறது என்பதைத் தாங்கள் நேரிலேயே கண்டதாக பக்தர்கள் உணர்ந்தார்கள்" என்று பின்னால் கூறினார்.

மனமும், ஜீவனும் பரம்பொருளுடன் ஒன்றிவிட்டது என்பது உறுதியானபின், பகவான் தன்கைகளை அன்னையின் உடலிலிருந்து எடுத்துவிட்டு, "ஒரு ஜீவன், பூரணப்பொருளுடன் கலந்து, எப்போது முழுவதுமாக அழிகிறதோ, அப்போது, மணி ஓசைப் போன்ற மென்மையான ஒலியை ஒருவர் உணரமுடியும்" என்று கூறினார்.

பொதுவாக, மரணம் ஏற்பட்ட சமயத்தில் உடன் இருப்பவர்கள் குளிக்கவேண்டும் என்பது நியதி. ஆனால் இந்த நிலையில், அசுத்தம் என்பது இல்லாததால், குளிக்கவேண்டிய அவசியமில்லை என்றார் பகவான். "அன்னை மரணம் அடைய-வில்லை; அருணாசலத்தோடு கலந்துவிட்டார்" என்று கூறினார். பின்னர், பக்தர்கள் பகவானிடம், "பகவானே! உங்கள் கைகளைத் தலையிலும் மார்பிலும் வைத்து என்ன செய்தீர்கள்? உண்மையில் நடந்தது யாது?" என்று கேட்டபோது பகவான், "என் கைகளை அன்னையின் மேல் வைத்தபோது, எதிர்காலத்தில் பயனளிக்க வல்லதும் பிறவியோடு வந்தவைகளுமான வாசனைகளும், பழைய அனுபவங்களின் நுட்பமான நினைவுகளும், வெகுவேகமாகச் செயல்படத் துவங்கின. அன்னையின் ஆழ்மனத்தில் பல காட்சிகள் விரிந்தன. இந்திரியங்கள் ஏற்கனவே அடங்கிவிட்ட நிலையில், ஜீவன் அவற்றை அனுபவித்தது. அதனால் மறுபிறவி தவிர்க்கப்பட்டது என்பதோடு, ஜீவப்ரம்ம ஐக்கியமும்

நிகழ்ந்தது. ஸூக்ஷ்ம உபாதிகள் அனைத்தும் விலக்கப்-பட்டபோது, எங்கு சென்றால் மீண்டும் அஞ்ஞானத்தில் விழவேண்டியது இல்லையோ, அந்தப் பேரமைதியான முக்தி என்ற பிறவாப் பெருநிலையை அடைந்தார்,“ என்று பகவான் விளக்கம் அளித்தார்.

அன்னையின் உதாரணத்தை முன்வைத்து பகவான் நமக்குத் தரும் போதனை என்ன? பகவானுடைய உபதேசங்களின் சாரம் என்னவென்று ஒருமுறை கேள்வி எழுப்பப்பட்டபோது, “ **‘நான் யார்?’ என்று விசாரம் செய் அல்லது சரணாகதி பண்ணிவிடு. ஒரே நாணயத்தின் இரு பக்கங்களே அவை”** என்று பகவான் பதிலளித்தார். ‘நான் யார்?’ என்ற விசாரத்தின் நுணுக்கங்களைப் பல பக்தர்களின் வாழ்க்கையின் மூலம் தெளிவாகக் காட்டியுள்ளார். அன்னை பூரண சரணாகதி செய்தவர் என்பதால் அவரது சரிதத்தின் மூலம் சரணாகதி தத்துவத்தை முழுமையாகப் போதித்திருக்கிறார் எனலாம்.

ஆத்மவிசாரத்தால் மௌன நிலையை அடைந்துவிட்ட ஒருவருக்கு, அன்னையின் இறுதி நிலையில் உண்டான அதே அனுபவங்கள் ஏற்படும் என்பதையும் இந்த உதாரணத்தால் உணரமுடியும். ஆத்மவிசாரத்தால் மௌன நிலைக்கு வந்துவிட்ட ஒருவருக்கு, ‘எதிர்காலத்தில் பயனளிக்க வல்ல, பிறவியோடு வந்த வாசனைகளும், பழைய அனுபவங்களின் நுட்பமான நினைவுகளும் மிக வேகமாகச் செயல்படும்’ நிலை ஆரம்பித்துவிடும். அத்தருணத்தில், “என்னால் முன்னேற முடியவில்லை” எனக்கூறி, விசாரத்தைக் கைவிட முற்படவும் செய்யலாம். “ஆழ்மனதில் அடுத்தடுத்துப் பல காட்சிகள் விரிந்தன; இந்திரியங்கள் ஏற்கனவே அடங்கிவிட்டன.” – விசாரம் மிகவும் தீவிரமடையும்போது ஆழ்மனதில் கதவுகள் திறக்கப்படுகின்றன. “ஜீவன் அவற்றை அனுபவித்ததால்,

மறுபிறவி தவிர்க்கப்பட்டதோடு, ஜீவ–ப்ரம்ம ஐக்கியமும் நிகழ்ந்தது.'' ஆத்மவிசாரத்தில் ஒருவர் முன்னேறும்போது, மனம் இதயத்தோடு ஒன்றுவதற்கு முன்னால் ஒரு போராட்டம் ஏற்படும். அப்போது மனதை இதயத்திற்குள் தள்ளவும், இதயத்திற்குள்ளிருந்து இழுத்துக்கொள்ளவும் குருவின் அருளும், வழிகாட்டுதலும் மிகவும் அவசியம் – ''ஸூக்ஷ்ம உபாதிகள் அனைத்தும் நீக்கப்பட்டபோது, எங்கு சென்றால் மீண்டும் அஞ்ஞானத்தில் விழவேண்டியதில்லையோ, அந்தப் பேரமைதியான முக்தி என்ற பிறவாப் பெருநிலையை அடையலாம்.'' இவ்வாறு நிகழக்கூடிய இந்த அனுபவம் நமக்காகக் காத்திருக்கிறது என்பதை பகவானின் இந்த உபதேசம் உணர்த்துகிறது. அன்னை அழகம்மாள் நமக்கு வழிகாட்டியுள்ளார். முழுமையாக நம்புங்கள். ஆத்மவிசாரம் செய்யுங்கள் அல்லது மகாசக்தியிடம் சரணடையுங்கள். இரண்டு வழிகளிலும் ''அகங்காரத்திற்கு இடமே இல்லை.'' அகங்காரம் இல்லையென்றால் 'நான்' 'எனது'' என்பது இல்லை. அதனால் ஆட்சிபுரிவது அருணாசலமே! பகவான் கூறி அருளியது போன்று, ''அருணாசலமே இதயம், ஆத்மா, 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வு.'' அருணாசலத்தை அடைவதென்றால், அது காலத்தாலோ அல்லது தேசத்தாலோ அன்று. உங்கள் இதயத்தினுள் எங்கிருந்தோ வந்து நுழையப்போவதில்லை. இப்போதே அது உங்கள் இதயமாக உள்ளது. அதை உணர உங்கள் கவனம் உள்ளே திரும்பவேண்டும். அவ்வளவுதான்! அழகம்மாளின் கவனம் பகவானிடத்தில் திரும்பியது. ''வெளியில் சுற்றும் மனதை உள்ளே திருப்புவது வெளியில் உள்ள குரு, அகமுகமாக ஜீவனை உள்ளே இழுத்துக்கொள்வது உள்ளே உள்ள குரு'' என்று பகவான் கூறுவார். 'அருணாசலம்' வெளியே உள்ள குரு; அவரே உள்ளே தள்ளிவிடுகிறார். ஆத்மாவாகிய பகவானே உள்ளே இருந்து காந்தம் போல்

இழுத்துக்கொள்கிறார். அப்போது, நாம் செய்ய வேண்டியது என்ன? அடங்கியிருத்தலே நம் பணி. எங்கிருந்தாலும் இதயத்திலே அகமுகமாக இருத்தல் வேண்டும். புனிதத் தன்மை என்றால் மௌனத்தினுட் செல்லவேண்டும். எங்கேயானாலும், எப்போதானாலும் மௌனமாக இருந்தால் புனிதத் தன்மையில் இருக்கிறோம் - அதுவே அருணாசலம். அருணாசலம் என்பது ஒரு இந்துக் கடவுளின் பெயரன்று.



அதுவே உண்மை – வெற்று வெளியும், இருப்பும் அதுவே. நாம் நம்மை உடம்போடு ஐக்கியப்படுத்திக் கொண்டிருப்பதால்“ ‘நீ’ என்பது இல்லை; ‘நான் மட்டுமே இருக்கிறேன்’ “ என்பதை நினைவுபடுத்தவே அருணாசலம் அவதரித்துள்ளது.



# பழனி ஸ்வாமி



திருவண்ணாமலைக்கு வந்து சேர்ந்த முதல் தினமே, “அப்பா! நீ வரச்சொன்னபடி வந்துவிட்டேன். நீ நினைப்பதே நடக்கும்” என்று பகவான், அருணாசலத்திடம் திட்ட-வட்டமாகக் கூறிவிட்டார். அந்தக் கணத்திலிருந்து தனது வாழ்க்கையை முழுவதுமாகப் பரம்பொருளிடம் அர்ப்பணித்து விட்டார். அருணாசலேச்வரர் கோயிலில் ஆறு மாதங்கள் தங்கி இருந்த பகவான், எப்போதும் உடல் நினைவற்ற ஆழ்ந்த ஸமாதியில் மூழ்கியிருந்தார். அவ்வாறிருந்தும், அவர் அதுவரை ஸமாதி என்ற வார்த்தையையோ, அந்த அனுபவத்தை விளக்கிக் கூறும் சொற்களையோ கூடக் கேட்டதே இல்லையென்பது வியப்பில் ஆழ்த்துவதாக உள்ளது. பரம்பொருளில் ஆழ்ந்து, உடலைப் பற்றிய சிந்தனை கூட அற்றிருந்த ஆனந்த நிலையில், இருண்டு, ஈரப்பதத்தோடிருந்த பாதாளலிங்க குகையில் இருந்ததால், பூச்சி, கரையான் இவைகளுக்கு அவர் விருந்தாக ஆனார். தனயன் சித்திரவதைக்கு உள்ளாவதைத் தந்தை அருணாசலேச்வரரால் தாங்கிக் கொள்ள முடியுமா? சேஷாத்ரி ஸ்வாமிகள், வேங்கடாசல முதலியார், உத்தண்டி நாயனார், அண்ணாமலை தம்பிரான் இவர்களைக் குகைக்குள் போகும்படி செய்து, பகவானுக்கு உதவி செய்ய ஏற்பாடுகள் செய்தார்.

சேஷாத்ரி ஸ்வாமிகள் பகவானது உடலைப் பாதாள குகையிலிருந்து வெளியே எடுத்துவர உதவினார். மற்றவர்கள், பகவானது ஸமாதி கலையாமல் இருக்கத் தங்களாலான உதவிகளைச் செய்தனர். அப்படியிருந்தும், அறியாமையில் மூழ்கியிருந்த ஜனங்கள், கோயிலில் பகவானை மிகவும் தொந்தரவு செய்தார்கள். அதனால், ஊருக்கு வெளியே,

அண்ணாமலை தம்பிரான் பூஜை செய்து வந்த, குருமூர்த்தம் என்ற புனிதமான கோயிலுக்குப் பகவான் எடுத்துச் செல்லப்பட்டார். அங்கும், புழு பூச்சிகளும், எறும்புகளும் நிறைந்திருந்தன. பகவானுக்கோ உடம்பைப் பற்றிய நினைவே இருக்கவில்லை; குளிக்கவே இல்லை; தலைமுடி நீளமாகவும், அடர்த்தியாகவும் வளர்ந்து, ஜடை விழுந்திருந்தது; நகங்களோ நீளமாக வளர்ந்து சுருண்டு போயிருந்தன. உணவே அருந்தாததால் உடல் மெலிந்து, மிகவும் பலவீனமாக இருந்தார். இதையெல்லாம் அருணாசலேச்வரர் எவ்வாறு தாங்கிக்கொள்வார்? அதனால், பிற்காலத்தில் ரமண பகவானுடைய நந்தியாக விளங்கிய பழனி ஸ்வாமியை அவரிடம் அனுப்பி வைத்தார். (அருணாசலத்தின் தென்மேற்குச் சரிவில் இவருடைய ஸேவகனான நந்தியைப் போன்றே தோற்றமளிக்கும் பெரிய பாறை உண்டு. விஸ்வநாதஸ்வாமி, குஞ்சு ஸ்வாமி போன்ற பகவானின் பழைய பக்தர்கள், அந்தப் பாறையைச் சுட்டிக்காட்டி, “அதோ பார்! பழனி ஸ்வாமி! நம் பகவானின் நந்தி” என்று விளையாட்டாகக் கூறுவதுண்டு)

தனிமையில் வாழ்ந்த துறவி பழனி ஸ்வாமி, திருவண்ணாமலையில் ஒரு குளக்கரையில் இருந்த பிள்ளையார் சிலையைப் பக்தியுடன் வழிபட்டு வந்தார். உப்போ, காய்கறிகளோ எதுவும் இன்றி வெறும் சாதத்தை மட்டுமே தினமும் ஒரு வேளை உண்டு வாழ்ந்தார். இந்த எளிமையான துறவிக்கு வாழ்க்கையில் இருந்த ஒரே குறிக்கோள் - ‘ஸத்தியத்தை உணரவேண்டும்’ என்பது மட்டுமே. ஒருநாள் அவருடைய நண்பர் ஒருவர், “இந்தச் சிலையைப் பூஜிப்பதால் என்ன பயன்? குருமூர்த்தத்தில் உயிரோடு ஒரு ஸ்வாமி இருக்கிறது. துருவனைப் பற்றிப் புராணங்கள் கூறுவதுபோல, ஒரு இளம் துறவி ஸமாதியில் மூழ்கி வீற்றிருக்கிறார். அவருக்குத் தொண்டு செய்தால், நீ

உன் வாழ்க்கையின் குறிக்கோளை அடைவாய்'' என்று கூறினார்.

பழனி ஸ்வாமி உடனே குருமூர்த்தத்திற்குச் சென்றார். அங்கு, இளமை மாறாத பகவான், முழுமையாக ஸமாதியில் ஆழ்ந்திருந்த காட்சி அவரை அடியோடு உலுக்கிவிட்டது. இறைவனை மட்டும் அவர் காணவில்லை; தன் குருவும் அவரே என்று உணர்ந்தார். அந்தத் தருணத்தில் இருந்து, பழனி ஸ்வாமிக்கு மிக உயர்ந்த நிலையிலிருந்த அத்துறவியைத் தவிர வேறு உலகமே இல்லை என்றாகிவிட்டது. தானே ஒரு துறவி என்பதால், பழனி ஸ்வாமிக்கு, அந்த இளந்துறவியின் பூரண சரணாகதி நிலையைக் கண்கூடாகக் காணமுடிந்தது. ‘‘சாகும்வரை இந்தத் துறவிக்குத் தொண்டு செய்வேன்'' என்று தனக்குத்தானே பிரதிக்ஞை செய்துகொண்டார்.

பகவான் ஸமாதி நிலையில் இருக்கும்போது, மக்கள், அவருடைய சரீரத்தை தொடுவார்கள்; உடலை உலுக்கிப் பேச முயற்சி செய்வார்கள். பழனி ஸ்வாமி, பகவானுடைய உடம்பைக் காப்பதையும், அவரது ஸமாதி நிலை கலையாமல் கவனித்துக் கொள்வதையும் தனது கடமையாக வைத்துக்கொண்டிருந்தார். ஈ, எறும்பு போன்றவைகூட அவரைத் துன்புறுத்தாமல் பார்த்துக்கொண்டார். தனக்குக் கிடைத்ததிலிருந்து ஒரு கிண்ணம் உணவையாவது பகவானுக்கு எப்படியோ ஊட்டிவிடுவார். அதனால் பகவானுக்குச் சிறிதளவு உணவாவது தினமும் கிடைத்து வந்தது. பகவானைச் சுற்றி ஒரு வேலி அமைத்து கதவும் வைத்தார். தான் வெளியே போக வேண்டியிருந்தால், பகவானை யாரும் தொந்தரவு செய்யாதவாறு, கதவைப் பூட்டிவிட்டுச் செல்வார். இவ்வாறு, பதினெட்டு மாதங்கள், இரவும் பகலும், கண்ணும் கருத்துமாகக் கவனித்துக்கொண்டார்.

அதன்பிறகு அவ்விடத்தைவிட்டு பகவான் வெளியில் போகவேண்டி வந்தது. அருகிலேயே இருந்த மாந்தோப்பின் உரிமையாளர், பகவானையும் பழனி ஸ்வாமியையும் தோப்பிலிருந்த தென்னங்கீற்றுக் குடிசையில் வந்து தங்குமாறு அழைத்தார். (இருவரும் ஆறு மாதங்கள் தொல்லைகள் ஏதுமின்றி, நிம்மதியாக இருந்தனர். வேடிக்கை பார்க்க வரும் ஜனங்களைத் தோட்டத்தின் சொந்தக்காரரே தடுத்துவிட்டார்.) இச்சமயத்தில்தான் பகவானது வாழ்க்கையின் வேறொரு கட்டம் துவங்கியது.

பகவானைவிட முப்பது வயது மூத்தவரான பழனி ஸ்வாமி, அவரைத் தனது மகனாகவே கருதி வந்தார். கடவுள் தந்த அந்த மகன் படிப்பதற்காக நகரிலிருந்து புத்தகங்கள் வாங்கி வருவார். அவ்வாறுதான், **கைவல்ய நவநீதம், வேதாந்த சூடாமணி, அத்யாத்ம இராமாயணம், யோகவாஸிஷ்டம், பிரபுலிங்க லீலை** போன்ற நூல்களைப் படிக்கப் பகவானுக்கு வாய்ப்புக் கிடைத்தது. அத்வைதம், வேதாந்தம் இவை பற்றிக் கூறும் நூல்களைப் படித்தபோதுதான், தனக்குப் பதினாறு வயதில் கிடைத்த அனுபவங்களையே அவை விளக்குவதாக உணர்ந்தார். ஆத்மா, ஸமாதி, மாயை, ஸம்ஸாரம் போன்ற வார்த்தைகளையே அவர் அப்போதுதான் கற்றுக்கொண்டார்.

பகவான், உணர்வு மாத்திரமாக இருந்துகொண்டு, ‘எப்போதும், எல்லா ஜீவராசிகளினுள்ளும் ஒளிரும், பெயரற்ற இருப்பு அல்லது இதயம் என்பதும், தனது இருப்பு நிலையும் ஒன்றே’ என்பதை மனித குலத்திற்கு உபதேசிக்க வேண்டுமென்பது, அசைவற்ற பரம்பொருளான அருணாசலத்தின் விருப்பம் என்றே கூறவேண்டும். மேற்கூறப்பட்ட உபதேசத்தை அளிக்கத் தேவையான சாஸ்திர ஞானமும், வேதாந்தத்துக்கே உரிய சிறப்பு மொழியும் இந்தக் கால கட்டத்தில்தான் பகவானின் மனதில் ஆணித்தரமாகப் பதிந்தன.

சிறிது காலத்திற்குப்பின், மாந்தோப்பின் உரிமையாளரின் விருப்பத்திற்கிணங்கிப் பழனி ஸ்வாமியும், பகவானும் அருணகிரிநாதர் கோயிலுக்கு இடம் பெயர்ந்தனர். அங்கு பழனி ஸ்வாமியிடம், “நீ அந்தப் பக்கம் போய் பிக்ஷை எடு. நான் இந்தப் பக்கம் போகிறேன்” என்று பகவான் கூறினார். தான் பிக்ஷை வாங்கிய விதத்தை, பிற்காலத்தில் பகவானே கூறியுள்ளார். “ஒரு வீட்டின்முன் நின்று, கைகளை இருமுறை தட்டுவேன். அவர்கள் உணவளித்தால், அதைக் கையிலே வாங்கிக்கொண்டு, அப்படியே, அப்போதே சாப்பிட்டுவிடுவேன்” என்று கூறினார். கைகளை கழுவ வேண்டுமென்ற கட்டாயமும் இன்றி அவற்றைத் தன் தலையிலேயே துடைத்துக் கொள்வார். “அவ்வாறு செய்யும்போது, ‘நான்தான் உலகத்துக்கே சக்ரவர்த்தி’ என்ற உணர்வு என்னிடம் தோன்றும்” என்று பிற்காலத்தில் பகவான் கூறியுள்ளார்.

இதனால்தான், “உண்மையான ஸந்நியாஸம் என்றால், என்னுடையது எதுவுமில்லை என்று தியாகம் செய்தால் மட்டும் போதாது. எவ்விதக் கட்டுப்பாடுகளும் இல்லாமலும், யாரையும், எதையும் எதிர்பார்க்காமலும் இருக்கவேண்டும்” என்றும் கூறுவார். ஒரே வீட்டில் இருமுறை பிச்சை கேட்கமாட்டார் என்பதால், பகவான் அநேகமாகத் திருவண்ணாமலையிலுள்ள எல்லா தெருக்களிலும், எல்லா வீடுகளிலும் பிச்சை எடுக்க வேண்டியிருந்தது.

அருணகிரிநாதர் கோயிலிலும் மக்கள் அவருக்குத் தொந்தரவு கொடுத்தனர். பகவான் எப்போதுமே ஏன் ஸமாதியில் இருக்கிறார் என்பதை மக்களால் புரிந்துகொள்ள இயலவில்லை. பழனி ஸ்வாமி இல்லாத நேரங்களில், அவருடைய அமைதியைக் குலைத்தனர். பின், பகவானைப் பவளக்குன்று என்ற சிறிய மலைக்கு அழைத்துச் சென்றார் பழனி ஸ்வாமி. பகவானுடைய உடம்பையும், ஸமாதி நிலையையும் காப்பாற்றுவது மட்டுமே தனது கடமை என்று

அவர் கருதியதால், வேறு எவ்விதத்திலும் பகவானுடைய காரியங்களில் தலையிடவேயில்லை; தன்னை வெளிக்காட்டிக் கொள்ளவுமில்லை.

பகவானின் பெருமை, நகரில் பரவ ஆரம்பிக்கவே பவளக்குன்றிலும் மக்கள் கூடத் துவங்கினர். மீண்டும் இடமாற்றம் செய்ய எண்ணிய பழனி ஸ்வாமி, அருணாசலத்தின் சரிவில் உள்ள விரூபாக்ஷ குகையைக் கண்டார். “நாங்கள் முதன் முதலில் விரூபாக்ஷ குகைக்குச் சென்றபோது அங்கு ஒரு மண்பானை மட்டுமே இருந்தது” என பகவான் கூறியுள்ளார். சில ஆண்டுகளுக்குப் பின், பெண் பக்தர்கள் சிலர் மதிய உணவைக் கொண்டு வந்து கொடுக்க ஆரம்பித்தனர். காலப்போக்கில் பெருமாள் ஸ்வாமி, அய்யா ஸ்வாமி, கந்தஸ்வாமி முதலிய பக்தர்கள் பகவானிடம் வந்து சேர்ந்துகொண்டார்கள் என்றபோதும், பழனி ஸ்வாமியே முக்கியமான தொண்டராக இருந்து வந்தார்.

இங்குதான், பகவான் மலையாள மொழியைக் கற்றுக்கொண்டார். தன் ஒருவேளை உணவைச் சாப்பிடும் முன் மலையாள மொழியில் இருந்த அத்யாத்ம இராமாயணம் எனும் நூலிலிருந்து ஒரு பக்கமாவது படிப்பது என்ற ஒரு விரதத்தைப் பழனி ஸ்வாமி வாழ்க்கை முழுவதுமே கடைப்பிடித்தார். தாய்மொழி மலையாளம் என்றபோதும் அவரால் அதை ஸரளமாகப் படிக்க இயலவில்லை. அதனால், அவர் படிப்பதற்குள் அதிக நேரம் கடந்துவிடும். பகவானும் மற்ற பக்தர்களும் பழனி ஸ்வாமி வந்த பிறகே உண்பார்கள். ஒருநாள் பகவான், “நீங்களே படிக்கவேண்டுமென்ற விரதத்தை மேற்கொண்டிருக்கிறீர்களா அல்லது வேறு யாராவது படிப்பதைக் கேட்டால் போதுமா?” என்று அவரிடம் கேட்டார். யாராவது படித்துக் கேட்டால் போதுமெனப் பழனி ஸ்வாமி கூறியபோது, பகவானே அந்த வேலையை ஏற்றுக்கொண்டார்.

தனது தாய்மொழி தமிழ் என்பதால் தனக்குத் தெரியாத மலையாள மொழியைப் பழனி ஸ்வாமி மூலமே பகவான் கற்றுக்கொண்டு, மிகக்குறுகிய காலத்திற்குள் அதை எழுதவும், படிக்கவும், புரிந்துகொள்ளவும் துவங்கிவிட்டார். அதன் பிறகு பழனி ஸ்வாமிக்குத் தினமும் மலையாளத்தில் அத்யாத்ம இராமாயணம் கேட்க முடிந்ததுடன், அனைவரும் காலம் தவறாமல் உணவு உண்ணவும் முடிந்தது!

பகவானுடைய பார்வை, ‘ஒருமுனைப்பாட்டுடன் கூடிய கூர்மையான பார்வை’ என்பதால் அவரை ‘ஏகக்ராஹி’ எனக் குஞ்சு ஸ்வாமி கூறுவார். ஒருமுறை வெளிச்சம் பட்ட உடனே புகைப்பட பிலிமில் உருவம் பதிந்துவிடுவதுபோல் பகவானுடைய ஞாபக சக்தி இருந்தது. ஒருமுறை ஒரு பக்கத்தைப் பார்த்துவிட்டால் மீண்டும் அதைப் பார்க்க வேண்டிய அவசியமில்லை.

ஒருநாள், விரூபாக்ஷ குகையில் இருந்த சிறிய மாடத்தில் கணேசரின் சிலை ஒன்றை யாரோ வைத்திருந்தனர். அதைக் கண்ணுற்ற பழனி ஸ்வாமி, “பகவானே! கணபதிக்கு நீங்கள் ஏதாவது நிவேதனம் செய்யக்கூடாதா?” என்று கேட்டார். உணவோ, மாலையோ பூக்களோ அர்ப்பணிப்பது பகவானுக்கு வழக்கமில்லாத ஒன்று. அதனால் அவருடைய பாணியில் ஒரு பாடல் மூலம் ஆராதித்தார். பகவான் எழுதிய முதல் பாடல் அது.

“பருத்த வயிறோடு மாடத்தில் அமர்ந்திருக்கும் பெருமானே! உன் தந்தையை அலைய வைத்துப் பிச்சையெடுக்கும்படி செய்தாய். அந்தத் தந்தையின் மகனாகிய என்னை இப்போதாவது கருணையோடு நோக்கி அருள் புரிவாயாக” என்ற பொருள்படும்படியாக அமைந்தது அப்பாடல்.

பிள்ளையாப் பெற்றவனைப் பிச்சாண்டி யாக்கியெங்கும்
பிள்ளையாப் பேழ்வயிற்றைப் பேணினீர் - பிள்ளையான்

கன்னெஞ்சோ மாடத்துப் பிள்ளையாரே கண்பாரும்
பின்வந்தான் தன்னைநீர் பெற்று.

மாலை வேளைகளில், பகவானுடைய தொண்டர்கள், உணவு சேகரிக்கும் பொருட்டு தெருக்களில் பிச்சை எடுப்பார்கள். தொன்றுதொட்டு பாடப்பட்டு வரும், ஆதி சங்கரரின் பாடலான, “ஸாம்ப ஸதாசிவ, ஸாம்ப ஸதாசிவ, ஸாம்ப ஸதாசிவ ஸாம்பசிவோம்” என்ற பாடலை அவர்கள் பாடுவது வழக்கம். அப்பாடலின் ஒலியைக் கேட்ட மாத்திரத்தில், பகவானின் தொண்டர்கள் வருவதை அறிந்துகொண்டு, பக்தர்கள் உணவோடு காத்திருப்பார்கள். இதைத் தங்களுக்குச் சாதகமாகச் செய்துகொள்ளும் பொருட்டு, சில விஷமிகள் அதே பாடலைப் பாடியபடி, பகவானது தொண்டர்கள் வருவதற்கு முன்னாலேயே சென்று, உணவை வாங்கிக்கொண்டு போய்விடுவார்கள்

இக்காரணத்தால், பிரத்தியேகமான ஒரு பாடலை இயற்றித் தரவேண்டும் எனத் தொண்டர்கள் பகவானிடம் ப்ரார்த்தித்தனர். பகவான், வழக்கம்போல், மௌனம் சாதித்தார். மறுநாள், எல்லோரும் கிரிவலம் செய்யும்போது பழனி ஸ்வாமி, தொண்டர்களுக்குள் அதிகமாகக் கல்வியறிவு பெற்றிருந்த அய்யா ஸ்வாமியைத் தனியாக அழைத்து, “பகவான் தனக்குள்ளேயே ஏதோ முணுமுணுத்தவண்ணம் இருக்கிறார். ஒருவேளை பாடல் ஏதாவது இயற்றுகிறாரோ என்னவோ? கையில் பேப்பரும் பென்ஸிலும் வைத்துக்கொள்” என்று கூறி அவற்றை அவரிடம் கொடுத்தார். கிரிவலம் வந்த சமயத்தில் நூற்றியெட்டு செய்யுட்களை பகவான் இயற்றி முடித்தார்.

**அக்ஷரமணமாலை** என்று அழைக்கப்படும் அவை, ஆன்மீக எழுச்சியூட்டும் பக்திப் பாடல்களாக அமைந்தன. (ஆர்தர் ஆஸ்போர்ன் ஒருமுறை, நூல் ஆசிரியரிடம், “நான் மூவாயிரத்துக்கும் மேல் பக்திரஸம் சொட்டும் ஆங்கிலக் கவிதைகள் அடங்கிய புத்தகங்களைப் படித்துள்ளேன்.

பக்தியிலும் ஞானத்திலும் **அக்ஷரமணமாலை**யை மிஞ்சக்கூடியது எதுவும் அவற்றில் இல்லை'' எனக் கூறியுள்ளார்.)

சிறிது காலத்துக்குப் பின், விரூபாக்ஷ குகையைவிடச் சற்று உயரத்தில் இருந்த **ஸ்கந்தாச்ரமம்** என்னும் குகையில் பகவான் தங்க ஆரம்பித்தார். பழனி ஸ்வாமி சில நாட்கள் அங்கு இருந்தார். முதுமையால் தளர்ந்து போயிருந்த பழனி ஸ்வாமிக்குத் தினமும் அவ்வளவு உயரம் ஏறுவது சாத்தியமாக இல்லாததால், பகவானிடம் உத்தரவு பெற்று, விரூபாக்ஷ குகையிலேயே தங்கினார். பகவான், தினமும் கீழே இறங்கி வந்து அவரோடு சிறிது நேரம் இருந்துவிட்டுச் செல்வார்.

ஸ்கந்தாச்ரமத்தில் இருந்தபோது, ஒருநாள் மயில் ஒன்று, இயற்கைக்கு விரோதமான ஒலிகளை எழுப்பியதைப் பகவான் கவனித்தார். "பழனி ஸ்வாமியின் கடைசி நேரம் நெருங்கி விட்டது'' என்று சொல்லியவாறு, வேகமாகக் கீழே இறங்கி விரூபாக்ஷ குகையை அடைந்தார். அதற்குள் பழனி ஸ்வாமிக்கு மூச்சுத்திணறல் ஏற்பட்டிருந்தது. அவரது மூச்சு அடங்கும்வரை, மகனைப் போன்று, பழனி ஸ்வாமியின் தலையைத் தன் மடியில் வைத்திருந்தார் பகவான். (இந்து சமுதாயத்தின் பரம்பரை வழக்கப்படி, மரண சமயத்தில், தந்தையின் தலையைத் தனயன் தன் மடிமீது வைத்திருக்க வேண்டியது, அவனது கடைசிக் கடமை என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த வாய்ப்பு எந்தத் தந்தைக்குக் கிடைக்கிறதோ, அவர் ஸ்வர்க்கம் செல்வார் என்ற ஒரு நம்பிக்கையுள்ளது.)

பல ஆண்டுகள் தன் குருநாதருக்குத் தன்னலம் அற்ற ஸேவை செய்த பகவானின் 'நந்தி'க்கு, இறைவனின்

இருப்பிடமான, அமைதி நிறைந்த அருணாசலத்திற்குத் திரும்பும் நேரம் வந்துவிட்டது.



# பெருமாள் ஸ்வாமி



ரமண பகவானின் தொண்டர்களில் பெருமாள் ஸ்வாமி சற்று இங்கிதமாகப் பழகத் தெரியாதவர். பயில்வான் உடம்போடிருந்த அவர் முரட்டுத்தனமான போக்கையும் உடையவர். 1914ஆம் ஆண்டு விருபாக்ஷ குகையில் பகவான் இருந்தபோது வந்து சேர்ந்தார். திருவண்ணாமலையில் அவரை எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். பல செல்வந்தர்களுக்கு அவர் நண்பராக இருந்தார். அவரைப் பார்த்துக்கொள்ள நண்பர்கள் இருந்ததால், பெருமாள் ஸ்வாமி, துறவு மேற்கொண்டாலும்கூட செல்வச் செழிப்போடு வாழ்ந்திருக்கலாம். ஆனால் பகவானை முதல்முறை பார்த்தபோதே பணிவோடு கூடிய பக்தி ஏற்பட்டுவிட்டதால், அவரையே தன் குருவாக வரித்துக்கொண்டதோடு, திருவண்ணாமலை வீதிகளில், அவருக்காகப் பிச்சை எடுக்கவும் துணிந்தார்.

பல சமயங்களில், துரதிருஷ்டவசமாக வந்த ஆபத்துகளிலிருந்து பகவானைக் காப்பாற்றியுள்ளார். பழனி ஸ்வாமியும், பெருமாள் ஸ்வாமியும் ஊருக்குள் சென்றிருந்த ஒரு சமயத்தில், பகவான் தனியாக இருக்கும்போது, பயங்கரமான தோற்றத்துடன் கூடிய பைராகி ஸாதுக்களின் கூட்டம், ஈட்டி, வாள் முதலிய ஆயுதங்கள் ஏந்தி பகவானிடம் வந்தனர். “சித்தர்கள் வாழும் பொதிகை மலையிலிருந்து நாங்கள் வந்துள்ளோம். இறுதி மந்திரதீக்ஷை பெறத் தகுதி வாய்ந்த, பக்குவமான ஆன்மா ஒன்று அருணாசலத்தில் இருப்பதாக எங்கள் தலைவர் கூறியதோடு உங்களை அங்கு அழைத்து வரும்படியும் ஆணையிட்டுள்ளார். நீங்கள் ஏற்றுக் கொண்டாலும், ஏற்காவிட்டாலும் உங்களைப் பொதிகை மலைக்குத் தூக்கிச் சென்றுவிடுவோம்” என அவர்கள் கூறிய நிலையிலும், பகவான், சிறிதும் அசைவின்றி அமைதியாக

இருந்தார். அருகில் ஆடு மேய்த்துக்கொண்டிருந்த சிறுவர்கள் சிலர், குகையினுள் அசாதாரணமான நிலை ஏற்பட்டிருப்பதை உணர்ந்து, பெருமாள் ஸ்வாமியிடம் தெரிவிப்பதற்காக விரைந்தனர். அவரும் விரூபாக்ஷ குகைக்கு ஓடிவந்து, பார்த்த மாத்திரத்தில் நிலைமையைப் புரிந்துகொண்டார். பெருமாள் ஸ்வாமி பைராகிகளைப் பார்த்து, “அருகிலுள்ள கிராமத்தைச் சேர்ந்தவன நான். நேற்று ஒரு கனவு கண்டேன். அதில் பொதிகை மலை சித்தர்களின் தலைவர் தோன்றி ‘நாளை எனது சீடர்கள் விரூபாக்ஷ குகைக்கு வருவார்கள். நீ அங்கு சென்று, கொப்பரையில் எண்ணெய் வைத்து, அவர்களைப் பொரித்து, அவர்களது உடல்களை என்னிடம் எடுத்து வா’ என்று கூறினார்” எனச் சொல்லிவிட்டு தொடர்ந்து ஆடு மேய்க்கும் சிறுவர்களிடம், “நீங்கள் விறகுகளைத் தயார் செய்யுங்கள். நான் ஒருநொடியில் கொப்பரை எண்ணெய் கொண்டு வருகிறேன். நாம் இவர்களைப் பொரிக்கலாம்” எனக் கூறிய மறுநிமிடமே பைராகிகள் ஓட்டமெடுத்தனர். கதை அத்துடன் முடிந்தது!

பழனி ஸ்வாமிக்கு இல்லாத நிர்வாகத் திறமை பெருமாள் ஸ்வாமிக்கு இருந்தது. ஆனால், அவரது முரட்டு ஸ்வபாவத்தால் சில இக்கட்டான நிலைகளும் உருவாயின. பகவானின் தாயார் விரூபாக்ஷ குகையில் தங்குவதற்காக வந்ததில் பெருமாள் ஸ்வாமிக்கு விருப்பமில்லை. அன்னை வந்த உடனே, “இங்கிருந்து போய்விடுங்கள். நீங்கள் இங்கே தங்க முடியாது” என்று உரக்கக் கத்திவிட்டார். மனம் புண்-பட்டுப்போன நிலையிலும் அன்னை, பெருமாள் ஸ்வாமிக்குக் கீழ்படிந்து தன்னிடமிருந்த ஒரே புடவையைக் கைக்கு அடியில் வைத்துக்கொண்டு, திரும்பப் போக யத்தனித்தார். வெளியில் அமர்ந்திருந்த பகவான், தாயாரை அன்போடும் ஆதரவோடும் அணுகி, “வாருங்கள் அம்மா! யாருக்கு நாம் தேவை-யில்லையோ அவர்களிடமிருந்து நாம் விலகிச் சென்று-

விடுவோம்” என்று கூறி, அவரிடமிருந்த புடவையைத் தான் வாங்கிக்கொண்டார். தன் தவறை உணர்ந்த பெருமாள் ஸ்வாமி பகவானை நமஸ்கரித்து, இருவரும் அங்கேயே தங்க-வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார்.

ஸ்கந்தாச்ரமத்திற்குப் பகவான் சென்றபோது பெருமாள் ஸ்வாமியும் உடன் சென்றார். பகவானுடைய அணுக்கத்-தொண்டர்களில் யாழ்ப்பாணி என்றொருவர் இருந்தார். (இலங்கையைச் சேர்ந்தவர் என்பதாலும், இலங்கைக்கு யாழ்ப்பாணம் என்று ஒரு பெயர் இருந்ததாலும், அவர் அவ்வாறு அழைக்கப்பட்டார்.) அவர் அப்பழுக்கு இன்றி சுத்தமாக இருப்பவர். ஸ்கந்தாச்ரமத்தைத் தினமும் சுத்தம் செய்து, எல்லாவற்றையும் ஒழுங்கு தவறாமல் வைத்துக்கொள்வார். அவரிடம் எவ்விதக் குறையும் இருக்கவில்லை. பகவான் எங்காவது சென்றுவிட்டு ஸ்கந்தாச்ரமத்திற்குத் திரும்பி வரும்போது இலைகள் கீழே கொட்டிக் கிடந்தால், “யாழ்ப்பாணி இங்கே இல்லையோ?” என்று கேட்பார். ஒருமுறை, ஸ்கந்தாச்மரத்தின் மண் தரையை உறுதிப்படுத்தவும், வழவழப்பாகச் செய்யவும், யாழ்ப்பாணி சாணியால் மெழுகியிருந்தார். ஸ்கந்தாச்ரமத்தின் நிர்வாகியாக இருந்த பெருமாள் ஸ்வாமி வந்து பார்த்தபோது, தரை ஈரமாக இருந்ததோடு, வழுக்கவும் செய்தது. அவர் கோபத்தால், “யாழ்ப்பாணி! ஸ்கந்தாச்ரமத்தை விட்டு வெளியே போய்விடு!” என்று கத்தினார். யாழ்ப்பாணி பகவானின் நேர்மையான பக்தர்களில் ஒருவர். அவருக்கு பகவானை விட்டுச் செல்ல விருப்பமும் இல்லை. நிர்வாகியான பெருமாள் ஸ்வாமிக்குக் கீழ்ப்படியவும் ஆசைப்பட்டார். சாமர்த்தியமுள்ளவர் என்பதால் நிலைமையை எப்படி சமாளிப்பது என ஆலோசித்தார். ஸ்கந்தாச்ரமத்தினுள் இருந்த ஒரு தென்னைமரம், அதன் எல்லைக்கு வெளியேயும் சாய்ந்தபடி இருந்தது. யாழ்ப்பாணி ‘சட சட’ வென்று அம்மரத்தின் உச்சியில் ஏறி

அமர்ந்துவிட்டார். நுட்பமாகப் பார்த்தால் ஒரே சமயத்தில், அவர் ஆச்ரமத்தின் உள்ளேயும் வெளியேயும் இருந்தார். கீழே வரும்படி பலர் கேட்டுக்கொண்டபோதும் அவர் மறுத்துவிட்டார். சாப்பிட அமர்ந்த பகவான், அங்கு யாழ்ப்பாணியைக் காணாதபோது, மற்றவர்கள் மூலம் நடந்ததை அறிந்துகொண்டார். வெளியே வந்து தென்னைமரத்தின் கீழ் நின்றபடி, “யாழ்ப்பாணி! இறங்கி வந்து எங்களோடு சாப்பிடலாமே?” என்று கெஞ்சும் குரலில் பகவான் கேட்ட உடன், சிறு குழந்தையைப்போல் இறங்கி வந்து சாப்பிட ஆரம்பித்தார். இன்னொரு சமயம், பகவான், “என்னிடம் ஒரு நோட்டு இருந்தது. பாடல்கள் எழுதி வைத்திருந்த அதை, உத்தர காசியிலிருந்து வந்தவர் வாங்கிச் சென்றார். மாதங்கள் பல ஆகியும், அவர் அதைத் திரும்பத் தரவில்லை. எனக்கு அந்தப் புத்தகம் தேவைப்படுகிறது” என்று கூறியதைக் கேட்டார், யாழ்ப்பாணி. அதன் பின் பல நாட்களுக்கு யாழ்ப்பாணியைக் காணவேயில்லை. உத்தர-காசிக்குச் சென்று, பகவானது புத்தகத்தைத் திரும்பவும் வாங்கிவந்து, பகவானிடம் கொடுத்தார் அவர். பகவான் மிகவும் சந்தோஷப்பட்டார். குருவின் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய, ஒரு நிமிடம் கூட ஓய்வெடுக்காமல் பல நாட்கள் செயல்பட வேண்டியிருந்ததென மற்ற பக்தர்களிடம், யாழ்ப்பாணி பின்னர் கூறியுள்ளார். பகவானிடம் அவருக்கு அத்தனை தீவிர பக்தி இருந்தது.

ஸ்கந்தாச்ரமத்தில், சிப்பாய் ஸ்வாமி என்றழைக்கப்பட்ட, ராணுவத்திலிருந்து ஓய்வு பெற்ற ஒருவரும் இருந்தார். அதனால் அவரிடம் ராணுவ கலாச்சாரம், மரியாதை, நடைமுறை எல்லாமே இருந்தது. பகவானைக் காப்பது தன் கடமை என அவர் நம்பியதால், அவருடைய மெய்க்காப்பாளராகவே அவர் செயல்பட்டார். ஸ்கந்தாச்ரமத்தில் பகவான் இருந்த போதெல்லாம், துப்பாக்கி வைத்துக் கொள்வதுபோன்று, கையில் ஒரு கம்பைப் பிடித்துக்கொண்டு,

பகவானுக்கு வெகு அருகில், மிக கவனத்தோடு நேராக நிமிர்ந்து நிற்பார். அச்சமயத்தில், அவர் வேறு எதிலும், யாரிடமும் கவனத்தைச் செலுத்தாமல் தியான நிலையிலேயே இருப்பார். ஒருநாள், பெருமாள் ஸ்வாமிக்கு மிகவும் கோபம் வந்துவிட்டது. "நீ என்ன செய்துகொண்டிருக்கிறாய்? இங்கு நாடகம் நடித்துக் கொண்டிருக்கிறாயா? ஆச்ரமத்தைவிட்டு வெளியே செல்" என சிப்பாய் ஸ்வாமியிடம் கடிந்து கூறினார். நிர்வாகியை மீறிச் செயல்பட விரும்பாத நிலையில், பகவானை விட்டுப் போகவும் முடியாமல், அவர் ஸ்கந்தாச்ரமத்திற்கு உள்ளே நின்றதைப் போன்றே வெளியில் காவல்காரனைப் போல் நின்று கொண்டிருந்தார். சில நாட்களுக்குப் பின், பகவானுக்குரிய மரியாதையை மக்கள் தரவில்லை என்று எண்ண ஆரம்பித்தார். அவரைப் பொருத்தவரை, அவரது குரு உலகமனைத்திற்கும் சக்கரவர்த்தி என்றுதான் நினைத்தார். பகவானிடம் அவர் வைத்திருந்த மரியாதையால், அரசர்களைப் போன்று பகவானுக்கும் குதிரைகள் இருக்கவேண்டும் என்று, தனது சொத்துக்களை விற்று ஸ்கந்தாச்ரமத்திற்குச் சில குதிரைகளை வாங்கி வந்தார். அவற்றைப் பராமரிக்கும் விதம் அவருக்குத் தெரியாததால், காலப்போக்கில் அவை ஒன்றின் பின் ஒன்றாக இறந்தன. பகுத்தறிவால் ஆராய முற்படாதவர்கள், சிப்பாய் ஸ்வாமியின் அபரிமிதமான பக்தியை வியந்து பாராட்டாமல் இருக்கமாட்டார்கள்.

பெருமாள் ஸ்வாமி பகவானின் தாயாரை விரும்பாத போதும், 1922இல் அவர் இறந்தபோது, அவரது உடலைத் தற்போதுள்ள ரமணாச்ரமத்திற்கு எடுத்துவர மிகவும் உதவியாக இருந்தார். உடலை இறக்கி வைத்த உடனே, நகருக்குள் சென்று, அன்னைக்கு ஸமாதி கட்டுவதற்குத் தேவையான அனைத்து பொருட்களையும் சேகரித்து வந்தார். அப்படியிருந்தும், அன்னையின் ஸமாதியின் மேல் கட்டப்பட்ட சிறிய குடிசையில் பகவான் தங்க முற்பட்டதும் பெருமாள்

ஸ்வாமிக்குப் பிடிக்கவில்லை. பகவானுடைய சகோதரரான நிரஞ்ஜனானந்த ஸ்வாமியையும் (சின்ன ஸ்வாமி) வெறுத்தார். ஆச்ரம நிர்வாகம் சின்ன ஸ்வாமியிடம் ஒப்படைக்கப்பட்டபோது பெருமாள் ஸ்வாமி பலமாக ஆட்சேபித்தார். அது மட்டுமல்லாமல் சட்டபூர்வமாக பகவானுக்கு எதிர்ப்புத் தெரிவித்து, அவரை நீதிமன்றத்திற்கு இழுத்தடிக்க முயன்றார். ஊருக்குள் பகவானுக்குச் சிலையமைத்து, ஒரு ஸ்தாபனத்தையும் துவங்கி, அதுவே உண்மையான ரமணாச்ரமம் என்றும், தானே அதன் காரியதரிசி என்றும் பிரகடனம் செய்துகொண்டார். அப்படி இருந்தும், முதலில் துவக்கப்பட்ட ஆச்ரமத்தின் நிர்வாகியாகச் சின்ன ஸ்வாமியே செயல்பட்டு வந்தார். ரமணாச்ரமத்தின் பெயரில் தபால்கள் வந்தால், நகரினுள் இருந்த தபால் அலுவலகத்தில் பெரிய போராட்டமே நடக்கும். “எல்லாக் கடிதங்களையும் பெருமாள் ஸ்வாமிக்கே அனுப்பிவிடுங்கள். அவர் தேவையானவற்றை எடுத்துக்கொண்டபின், எஞ்சியுள்ளதை நாம் எடுத்துக்-கொள்ளலாம். சண்டை எதற்கு?” என்று கூறி, வெகு சுலபமாக பகவான் அதைத் தீர்த்து வைத்தார்.

பகவான் தன் விருப்பத்திற்கு இணங்காதது பெருமாள் ஸ்வாமிக்கு ஏமாற்றத்தையும், மன உளைச்சலையும் ஏற்படுத்தியது. பகவான், குஞ்சு ஸ்வாமிகள் மூலம், ‘பெருமாள் ஸ்வாமி, ஆன்மீக சாதனைகளிலிருந்து வழுவாமல் இருக்க வேண்டும்’ எனச்செய்தி சொல்லி அனுப்பினார். அவர் செவி-சாய்க்காதபோதும் பகவான் அவரைக் கைவிடவில்லை. சட்டரீதியாகப் பெருமாள் ஸ்வாமி தோல்வியை ஏற்க நேர்ந்தபின் தாழ்ந்து, அடங்கிப்போனார் அவரது உடல்நலமும் குன்றியது. அப்போது, “பகவானே! நான் பாவம் செய்து-விட்டேன். திரும்பவும் ஆச்ரமத்துக்கு வந்து மன்னிப்புக் கேட்க விரும்புகிறேன்” என்று பகவானுக்குச் செய்தி அனுப்பினார். ஆனால் ஆச்ரமத்திலுள்ள மற்றவர்கள், “உங்களுக்கு எதிராகச்

செயல்பட்ட அவரை உள்ளே அனுமதிக்கக் கூடாது'' என மறுப்புத் தெரிவித்தனர். இதைக் கேட்ட பகவான், ''ஏன் அவன் நம்முடைய பெருமாள் ஸ்வாமி அல்லவா? அவன் வரட்டும்'' என்று பதில் சொல்லிவிட்டார். பெருமாள் ஸ்வாமி திரும்பி வந்தபோது அவரைக் கண்களாலேயே எரித்துவிடுவதுபோல் எல்லோரும் நோக்கினார்கள். அவர் பகவான் முன்னால் கதறியழத் துவங்கினார். ''பகவானே! மஹாபாவம் செய்து விட்டேன். நான் நரகத்துக்குப் போவது திண்ணம்'' என்று கதறியபோது, பகவான் சிரித்துக்கொண்டே, ''அங்கேயும்கூட நான் உன்னுடன் இருக்கமாட்டேனா?'' என்று பதிலிறுத்தார்.

பெருமாள் ஸ்வாமியின் வாழ்க்கையில் ஒரு திருப்பம் ஏற்பட்டது. சேஷாத்ரி ஸ்வாமிகள் ஆச்ரமத்தின் அருகே ஒரு குகையில் தங்கி, ஆழ்ந்த சிந்தனையிலும் தியானத்திலும் மூழ்கினார். பகவான் மறைந்த பின்னரும், ரமணாச்ரம பிரஸாதமே சாப்பிடவேண்டுமென எண்ணினார். அதனால், தினமும் இரண்டு வேளை, ஆச்ரமத்திலிருந்து குஞ்சு ஸ்வாமி, சாதமும் ரஸமும் கொண்டுவந்து கொடுப்பார். முரடனாக இருந்தபோதும், பகவான் அவரையும் கவனித்துக் கொண்டார். அருணாசலத்தின் அமைதியில் அவரும் கலந்திருப்பார் என்பதில் ஐயமில்லை.



# இராமநாத ப்ரம்மச்சாரி



பகவான், தான் இருவருக்கு மட்டும் பயப்படுவதாகக் கூறுவதுண்டு; ஒருவர் இராமநாத ப்ரம்மச்சாரி; மற்றவர் முதலியார் பாட்டி. அவர் இவ்வாறு கூறக் காரணம், உலக இன்பங்களைத் துறந்த அவ்விருவரும் எள்ளளவும் சுயநலமின்றி பக்தியுடன் பகவானுக்குத் தொண்டு செய்தனர்.

ஊருக்குள் இருந்த வேத பாடசாலை ஒன்றில் இராமநாத ப்ரம்மச்சாரி படித்துக் கொண்டிருந்தார். பகவானைப் பார்த்தபோது அவரது மனமும் இதயமும் மகிழ்ச்சியால் மலர்ந்தன; முழுமையாக அமைதியில் மூழ்கிப் போனார். அந்தக் கணத்திலேயே, இயன்றவரை பகவானுடனேயே இருப்பது என்ற முடிவுக்கு வந்தார். பாடசாலையில், மாணவர்கள் இலவசமாகத் தங்குவதற்கும், உணவிற்கும் ஏற்பாடு செய்திருந்தபோதும், இராமநாத ப்ரம்மச்சாரி, பகவானுடன் தங்குவதே நல்லதென முடிவு செய்தார். தெருக்களில் உணவை யாசித்து, அதை விரூபாக்ஷ குகையிலிருந்த பகவானிடம் கொண்டு சேர்ப்பார். பகவான் தந்த உணவைச் சந்தோஷமாக ஏற்றுக்கொள்வார். அத்தகைய வியக்கத்தக்க, சரணாகதி என்னும் பண்பு அத்துறவியிடம் இருந்தது. ஆசாரங்களைக் கடைப்பிடித்து வந்த பகவானின் தாய், (இராமநாதன் பிராம்மண குலத்தைச் சேர்ந்தவன் என்பதால்) அவருடைய உதவிகளை ஏற்றுக்கொண்டார். பாத்திரங்கள் தேய்க்கவோ, துணிகளைத் துவைக்கவோ அல்லது வேறு என்ன வேலையாக இருந்தாலும், ‘இராமநாதா! இராமநாதா!’ என்று அவரை அழைத்த வண்ணம் இருப்பார். காதில் அந்த ஒலி கேட்டதும், பகவான், “அம்மா தன் ஜபத்தைத் துவங்கிவிட்டார்” என்று வேடிக்கையாகக் கூறுவார்.

ஒருநாள் பகவான், “இராமநாதா! நீ உன்னை அறிந்து கொள்ளும் முயற்சியில் வெற்றி (“ஆத்ம சாட்சாத்காரம்”) அடைந்துவிட்டாய்” என்று கூறினார். ஆனால் இராமநாதனால் அதை நம்பமுடியவில்லை. அதனால், அது உண்மைதானா என்று பகவானை மீண்டும் மீண்டும் கேட்டுக்கொண்டே இருந்தார். பகவானும் அதை அவருக்கு உறுதிப்படுத்த எண்ணி, “ஆம், இராமநாதா, நீ உன்னை அறிந்து கொண்டுவிட்டாய்” என்று பல முறை சொன்னார். ஆனாலும் அவருக்கு நம்பிக்கை உண்டாகாதபோது, பகவான் எழுந்து வந்து அவர் தலையில் நன்கு குட்டிக்கொண்டே, “ஆமாம், இராமநாதா! நீ அறிந்து கொண்டுவிட்டாய்” என்று கூறினார். களங்கமற்ற அந்த பக்தர், உன்மத்த நிலையில் அறையைவிட்டு வெளியே ஓடிவந்து, “பகவான் இந்த இடத்தில்தான் என்னைக் குட்டினார்!” என்று, பார்த்தவர்களிடமெல்லாம் சொல்லிக்கொண்டே போனார். தன்னை அறிந்துகொண்டுவிட்டது ஒரு பெரிய விஷயமாக அவருக்குத் தோன்றவில்லை. பகவான் குட்டியது அதைவிடப் பெரியது என்று அவருக்குப்பட்டது.

களங்கமற்ற இந்தச் சீடர், பகவானின் மற்ற பக்தர்களுக்கும் பணிவிடைகள் புரிந்தார். பலாக்கொத்தில் அவர் தங்கியிருந்த அதே சமயத்தில், காவ்ய கண்டர், முருகனார், பால் ப்ரண்டன், கோஹன், விஸ்வநாதஸ்வாமி, குஞ்சு ஸ்வாமி முதலியோரும் அங்கு தங்கி இருந்தனர். பகவானுடன் எத்துணை நேரம் இருக்க முடியுமோ அத்துணை நேரம் இருக்கவேண்டும் என்ற ஒரே ஒரு நோக்கம் மட்டுமே அவர்களுக்கெல்லாம் இருந்தது. ஆச்ரம அலுவலகத்தில் பணிபுரிந்தால் இந்த வாய்ப்பு அவர்களுக்குக் கிடைக்காது. தினமும் மாலையில் இராமநாதன் தானாகவே சென்று, பக்தர்கள் தங்கியிருந்த குடிசைகளை எல்லாம் பெருக்கிச் சுத்தம் செய்வார். எண்ணெய் விளக்குகளை எல்லாம்

சிரத்தையோடும் பக்தியோடும் துடைத்து வைப்பார். பகலில் ஊருக்குள் சென்று பக்தர்களுக்குத் தேவையான பொருட்களையெல்லாம் வாங்கி வருவார். இதெல்லாம் செய்தாலும், பகவானுடன் இருப்பதற்கும் நேரத்தை ஒதுக்கிக் கொள்வார். அவருக்கு எல்லாமே பகவான்தான்.

இராமநாத ப்ரம்மச்சாரி தங்களுக்கு எத்துணை உதவி செய்கிறார் என்ற விஷயத்தைப் பலாக்கொத்தில் தங்கியிருந்தவர்கள் பகவானிடம் கூறவில்லை. ஒருநாள் விஸ்வநாத ஸ்வாமிக்கு அஞ்சல் அட்டையில் எழுதப்பட்ட ஒரு கடிதம் வந்தது. அதில், "எனது நமஸ்காரங்களைப் பலாக்கொத்து ஸர்வாதிகாரியிடம் தெரிவிக்கவும்" என்று ஒரு பின்குறிப்பு சேர்க்கப்பட்டிருந்தது. சில சமயங்களில், வரும் தபால்களை உரியவரிடம் பகவானே சேர்ப்பிப்பது உண்டு. அன்று அவர், விஸ்வநாதஸ்வாமியிடம் தபாலைக் கொடுக்கும்முன், வாய்விட்டுச் சிரித்தபடி, "யார் அந்த பலாக்கொத்து ஸர்வாதிகாரி?" என்று ஆச்சரியத்தோடு கேட்டார். கூடத்தின் ஒரு மூலையில் அமர்ந்திருந்த இராமநாத ப்ரம்மச்சாரி, கூப்பிய கரங்களோடு எழுந்து நின்று, "பகவானே! என்னைத்தான் எல்லோரும் பலாக்கொத்து ஸர்வாதிகாரி என்று அழைக்கிறார்கள். நான் அவர்களுக்கெல்லாம் தேவையான வேலைகளைத் தினமும் செய்து கொடுக்கிறேன் என்று அவ்வாறு கூப்பிடுகிறார்கள். அவர்களுக்குப் பணிவிடை செய்வதற்கு எனக்கு அனுமதி அளித்திருக்கிறார்கள். அவர்கள் ஒப்புக்கொண்டதற்கு அடையாளமாக என்னை ஸர்வாதிகாரி என அழைக்கிறார்கள்" என்றார். பகவான் மிகுந்த திருப்தியோடு, "உண்மையான ஸர்வாதிகாரி – (ஆள்பவன் என்ற அர்த்தத்தில் கூறப்பட்டது) இப்படித்தான் இருக்க வேண்டும்" என்று மெச்சினார்.

வாட்டசாட்டமாக இருந்த தண்டபாணி என்ற ரமணபக்தர், எல்லோரும் தனக்குக் கீழ்ப்படிய வேண்டும் என்று

எதிர்பார்த்தார். ஒருநாள் காரணமின்றி இராமநாத ப்ரம்மச்சாரியிடம் வம்புச் சண்டைக்கு வந்தார். இராமநாதன் மெலிந்திருந்தபோதும், விட்டுக் கொடுப்பதாக இல்லை. தண்டபாணி, தன் பலத்தை மனதில் வைத்துக்கொண்டு ப்ரம்மச்சாரியைக் கீழே தள்ளிவிட்டு, "நான் யார் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய்?" என்று இராமநாதனை நோக்கியபடி உரக்கக் கத்தினார். தரையில் கிடந்தபடியே கைகூப்பிய வண்ணம், "தண்டபாணி ஸ்வாமி! 'நான் யார்?' என்ற உயர்ந்த குறிக்கோளை அறிந்து கொள்ளும் நோக்கத்தோடன்றோ நாம் அனைவரும் இங்கே ஒன்றாகச் சேர்ந்துள்ளோம்!" என்று ப்ரம்மச்சாரி பதிலளித்தார். 'நான் யார்?' என்ற சொற்கள் காதில் விழுந்தவுடன் தண்டபாணி அமைதியடைந்து, தன் தவறான நடத்தைக்கு இராமநாதனிடம் மன்னிப்புக் கோரினார். பிறகு, இருவரும் பகவானிடம் சென்றபோது, நடந்தது அனைத்தையும் தண்டபாணியே எடுத்துரைத்தார். அதைக் கேட்ட பகவான் அன்போடு புன்னகை பூத்தார்.

ஒருசமயம் கன்றுக்குட்டி ஒன்றை பக்தர் ஒருவர் ஆச்ரமத்திற்குக் கூட்டிவந்தார். லக்ஷ்மி என்று பகவானால் பெயர் சூட்டப்பட்ட அதைப் பராமரிக்க யாரும் இல்லாத நிலை. அங்கு புலி, சிறுத்தை முதலியவைகளின் நடமாட்டமும் இருந்தது. அதனால் பகவான், "லக்ஷ்மியை கண்காணிக்க யாருமில்லை. யாராவது பார்த்துக் கொண்டால் அவளை வைத்துக்கொள்ளலாம்" என்று கூறவும், நாலரை அடி உயரமே இருந்த இராமநாத ப்ரம்மச்சாரி, "பகவானே! நான் கவனித்துக்கொள்கிறேன்!" என்று உறுதியளித்தார். ரமணாச்ரம கோசாலை துவங்க வழிகோலப்பட்டது.



இரவு 8.30 மணிக்குத்தான் திருவண்ணாமலைக்கு புகைவண்டி வந்து சேருமென்பதால், வெளியூரில் இருந்து வரும் பக்தர்கள் ஆச்ரமம் வந்து சேர மிகவும் தாமதமாகிவிடும். ஆச்ரமத்தில் இரவு 7.00 மணிக்கு உணவு அருந்தியபின், 7.30 மணிக்கு அனைவரும் உறங்கச் சென்றுவிடுவார்கள். வரும் விருந்தினர்களைக் கவனித்து உபசரிக்க, பகவான் விரும்புவார். ஆனால் யாரும் அதைச் செய்ய முன்வரவில்லை. இராமநாதன் அந்த வேலையை ஏற்றுக்கொண்டு, தினமும் விருந்தினர்களுக்குத் தேவையானதைக் கவனித்துவிட்டுத்தான் உறங்கச் செல்வார்.

மறுதினம் பகவான், இராமநாதனை அன்போடு பார்த்துச் சிரித்துக்கொண்டே, “ஓ! நேற்று இரவு வந்த விருந்தினர்களை வரவேற்றுத் தேவையான உதவியை நீ செய்தாயா? நல்லது, நல்லது!” என்று உற்சாகப்படுத்துவார்.

ஒரு நாள் இரவு நிலவொளியில் பகவானும் பக்தர்களும் கிரிவலம் சென்றனர். அனைவரும் உயர்ந்த மனநிலையிலிருந்தனர். மலையை வலம் வந்தபடியே சிதம்பரம்

சுப்ரமண்ய ஐயரின் தலைமையில் ஒரு கருத்தரங்கம் நடத்தத் தீரமானித்தனர். ஒவ்வொருவரும் ½ மணிநேரத்திற்கு ஒரு தலைப்பில் பேச வேண்டுமெனத் தீரமானிக்கப்பட்டது. முதன் முதலாகப் பேசிய இராமநாத ப்ரம்மச்சாரி இதய குகையில் வாழும் பரமாத்மாவான சிதம்பரேசனுக்கும், விரூபாக்ஷ குகையில் வாழும் பகவானுக்குமுள்ள ஒற்றுமை என்ற தலைப்பைப் பேசுவதற்குத் தேர்ந்தெடுத்தார். நடராஜப் பெருமானுக்கும், ரமண பகவானுக்குமிருந்த எண்ணிறந்த ஒற்றுமைகளை எடுத்துரைத்த போது அவருக்கிருந்த ஆர்வத்தை நேரில் கண்டு ரசித்திருக்க வேண்டும். ½ மணி நேரம் என்ற கால அளவை தலைவரிடம் கெஞ்சிக் கூத்தாடி நீட்டிக் கொண்டே போய் 3 மணி நேரம் தொடர்ந்து உரையாடினார். இறுதியில் தனது உரையின் கருத்துக்களைத் தொகுத்து, 4 சரணங்களைக் கொண்ட "திருச்சுழி நாதனைக் கண்டேனே!" என்ற பாடலை இயற்றினார்.

எனது தாயாருக்கு பகவானிடம் மிகுந்த பக்தி உண்டு. அவர் இராமநாத ப்ரம்மச்சாரி மீது அன்பு வைத்திருந்தார். ஒருநாள், அவரிடம், "முருகனார், ஸாது ஓம், சிவப்ரகாசம் பிள்ளை போன்றவர்களின் பாடல்களில் உங்களுக்கு மிகவும் பிடித்தது எது?" என்று நான் கேட்டபோது, "இராமநாத ப்ரம்மச்சாரியின் பாடல்தான் எனக்கு மிகவும் விருப்பமானது" என்று பதிலளித்தார். அவர் விரும்பிய பாடல்:

**பல்லவி**

திருச்சுழிநாதனைக் கண்டேனே
திரும்பி வராமலே நின்றேனே

**அனுபல்லவி**

தில்லையிலே நடம் புரிபவனாம்
தீனர்க ளைரக்ஷித் தருள்பவனாம்

**சரணங்கள்**

திருவண்ணா மலையென்னும் க்ஷேத்திரத்தில்
திருவரு ளாய்நின்ற மலையின்மீதில்
விருபாக்ஷ மென்னும் குகைதனிலே
வேண்டிக் கண்டன னாண்டவனை (திருச்சுழி)
காயா புரியென்னும் பட்டணத்தில்
கரணங்க ளாகின்ற பிரஜைகளுடன்
அகங்கார மந்திரி யோடுஞ்சீவன்
அநியாய ராச்சிய மாண்டானே (திருச்சுழி)
இப்படி யிருக்குநாள் தன்னிற்சீவன்
ஈச னருளென்னும் வாளேந்தி
அகங்கார மாகுமம் மந்திரியை
அடியோடு மில்லாமல் அறுத்தெரிந்தான் (திருச்சுழி)
தறித்தெறிந்து சீவன் றானாகி
தகராலய மென்னுங் குகைதனிலே
தாண்டவ மாடுமவ் வாண்டவனைத்
தான்கூடி யொன்றாகி நின்றானே (திருச்சுழி)

1946ஆம் ஆண்டு நோய்வாய்ப்பட்ட ப்ரம்மச்சாரி சிகிச்சைக்காக சென்னைக்கு அழைத்துச் செல்லப்பட்டு, அங்கேயே இறைவனடி சேர்ந்தார். 1946ஆம் ஆண்டு பகவான் அவ்வளவாக மௌனத்தைக் கடைப்பிடிக்காத சமயம் என்ற போதும், அந்த செய்தி அறிந்தவுடன், நூற்றுக்கணக்கான பக்தர்கள் சூழ்ந்திருந்த நிலையிலும், முழுமையான மௌன நிலைக்குச் சென்றுவிட்டார்.

ஞானிகளிடம் எவ்வாறு அன்பு செலுத்தி, அவர்களைப் பின்பற்றி நடந்து, இப்பிறவியிலேயே முக்தியடையவேண்டும் என இராமநாத ப்ரம்மச்சாரி வாழ்ந்து காட்டியுள்ளார்.



# கம்பீரம் சேஷய்யா



முத்தொழில்களைப் புரியும் இறைவனின் முதல் பணி ‘படைத்தல்’ என்பது இந்து மதத்தின் கோட்பாடு. அதை நிறைவு செய்யும் பொருட்டு, மனித உருவில், தன்னையே ஒத்த ஒருவரைப் படைக்கச் சித்தம் பூண்டு, அருணாசல ரமணன் என்ற பகவான் ரமண மகரிஷியைப் படைத்தான். இரண்டாவது தொழிலான ‘காத்தல்’ என்ற செயலை நிறைவேற்ற, பகவானது சரீரத்தையும், சுற்றுச்சூழலையும் காக்க, பழனி ஸ்வாமி, அன்னை அழகம்மாள், இராமநாத ப்ரம்மச்சாரி போன்றவர்களையும் இறைவன் அனுப்பி வைத்தான்.

மூன்றாவது தொழிலான ‘அழித்தல்’ – அதாவது அஞ்ஞானத்தை நாசம் செய்வதென்பது, ஞானோபதேசத்தால் நிகழ்கிறது; ‘நான் சரீரம்’ என்ற எண்ணத்தோடு, தன்னை உணர இடையூறு செய்யும் அனைத்துத் தடைகளையும் நீக்கம் செய்கிறது, மேலான இந்த ஞானம். இந்தப் பணியைச் செய்யும் பொருட்டு புத்திக் கூர்மையுள்ள கம்பீரம் சேஷய்யா, சிவப்ரகாசம் பிள்ளை என்ற இருவருக்கும் பகவானிடம் ஈர்ப்பை ஏற்படுத்தியது அருணாசலம். பகவானுக்கு விருப்பமானதும், எடுத்துக்காட்டாகக் கூற அடிக்கடி உபயோகிப்பதுமான **வேதாந்த சூடாமணி** என்னும் நூலில், ‘பக்தர்களின் கடமைகளில் மிக முக்கியமானது குருவின் உபதேசங்களைக் காப்பது’ என்றே கூறப்பட்டுள்ளது. இந்தப் பணியை நிறைவேற்றும் பொருட்டே கம்பீரம் சேஷய்யா, பகவானின் வாழ்க்கையின் ஒரு அங்கமானார். “கம்பீரம் என்பது அவருடைய பெயர் அன்று. குடும்பத்திற்குக் கொடுக்கப்பட்ட பட்டப்பெயரே அது. அவருடைய பாட்டனார் ஒரு அரசனிடம் பணியாற்றி வந்தார். அவருடைய நேர்மையைப் பாராட்டி, ‘அரசனைப் போன்ற பெருந்தன்மையுடையவர்’ என்று

பொருள்படும்படியாக 'கம்பீரம்' என்ற பட்டம் அவருக்கு அளிக்கப்பட்டது. அதுவே அவர்களுடைய குடும்பப் பெயராகி விட்டது'' என்று பகவான் விளக்கியுள்ளார். திருவண்ணாமலையில், பகவான் பிச்சை எடுக்க ஆரம்பித்த முதல் நாளோ, இரண்டாவது நாளோ, நான்கு பேர் ஒரு வீட்டின் முன் இருந்த திண்ணையில் அமர்ந்து 'சீட்டாட்டத்தில்' ஈடுபட்டிருந்தனர். பகவான் வழக்கம்போல் வீட்டின்முன் நின்று உணவை வேண்டிக் கையைத் தட்டவும், வீட்டின் சொந்தக்காரரும், கம்பீரம் சேஷய்யாவின் சகோதரருமான கம்பீரம் கிருஷ்ணய்யா, வெட்கித் தலைகுனிந்து, உள்ளே சென்று, உணவு எடுத்து வந்து பிச்சையிட்டார். அன்று முதல் சீட்டாடுவதை அவர் அடியோடு நிறுத்தியும் விட்டார். இந்நிகழ்ச்சி இறைவனின் திருவிளையாடல் அன்றோ!

அரசாங்க ஊழியரான கம்பீரம் சேஷய்யா நன்கு வேதாந்தம் படித்திருந்தார். ஆயிரத்துத் தொள்ளாயிரத்தில் திருவண்ணாமலைக்கு மாற்றலாகி வந்தபோது, விரூபாக்ஷ குகையில், ஒரு பிராம்மண ஸந்நியாஸி இருப்பதைப் பற்றி அறிந்தார். அவருக்கு வேதாந்தத்தில் இருந்த ஈர்ப்பின் காரணமாக விரூபாக்ஷ குகையிலிருந்த பகவானைப் பார்க்கச் சென்றார். பார்த்த மாத்திரத்திலேயே அடிமையாகிவிட்டார். தன் முன்னிருந்த அந்த மனித உருவில், தான் படித்த சாஸ்திர ஞானத்தோடு, தேடி அலையும் ஸத்தியப் பொருளும் ஒளிர்வதை உணர்ந்தார். யோகம், தத்துவ சாஸ்திரம் இவை பற்றி ஸ்வாமி விவேகானந்தர் எழுதிய பல புத்தகங்களைப் படித்திருந்த அவருக்குச் சில சந்தேகங்கள் இருந்தன. அந்த நூல்களைப் பகவானிடம் காட்டி விளக்கம் கேட்டார். பகவான் மௌனத்தில் இருப்பதாக எண்ணி, கம்பீரம் சேஷய்யா, எப்போதும் தனது சந்தேகங்களை எழுதியே காட்டி வந்தார். பகவானும் பதிலை எழுதியே தருவார். சில காலத்திற்குப் பின் பகவான், சிரித்தபடியே, "நான் மௌன விரதம் என்று

எடுத்துக்கொள்ளாத போதும், நான் மௌனத்திலுள்ளதாகக் கூறுவர். நான் உண்ணாவிரதம் எதுவும் எடுத்துக்கொள்ளவில்லை. உணவை என்னோடு யாரும் பகிர்ந்துகொள்ளவில்லை. அதனால் நான் உபவாஸமிருந்தேன். அப்போது, 'ஸ்வாமி உண்ணாவிரதத்தில் இருக்கிறார்' என்றனர். யாரும் என்னுடன் பேசாத நிலையில், நான் மௌனமாக இருந்தேன். அப்போது 'ஸ்வாமி மௌனத்தில் உள்ளார். அவரை யாரும் தொல்லை செய்ய வேண்டாம்' என்றும் சொல்வார்கள்" என்று கூறுவார்.



கம்பீரம் சேஷய்யா, பகவானிடம் அருமையான கேள்விகளைக் கேட்டார். அத்துடன் தனக்குப் புரியாத சிக்கலான பகுதிகளைச் சுருக்கமாக விளக்கவும் சொல்வார். பகவான் அதையும் செய்வார். பல கருத்துக்களைக் குறித்து விவாதித்தபின், இந்து சாஸ்திரங்களில் கூறப்பட்ட விதத்தில், அதே பெயர்களை உபயோகித்துப் பகவான் விளக்கம் தருவார். சில கேள்விகள் ஆத்ம விசாரம் பற்றியவையாக இருக்கும். அதிகமான கேள்விகள் இந்து தத்துவ சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள யோகம், சாதனை, ஒருமுனைப்படுத்துதல், தியானம், இறைவன், உலகம், அகங்காரம், முக்தி, பிராணாயாமம், அஷ்டாங்கயோகம் இவை பற்றிய கருத்துக்களைக் குறித்ததாக இருக்கும். கம்பீரம்

சேஷய்யாவிற்கு, எல்லாவற்றையும்விட, அஷ்டாங்க யோகத்தில் ஆர்வம் அதிகமாக இருந்தது. அஷ்டாங்க யோகம் போன்ற பிற வழிகளையும் நுணுக்கமாக விளக்கிக் கூறியபோதும், ஞான மார்க்கத்திற்கே முக்கியத்துவம் கொடுத்து அதுவே நேரான வழி என்று பகவான் கூறுவார். மனமாகிய முரட்டுக் காளையை வலுக்கட்டாயமாக அடக்கி வண்டியில் பூட்டுவது போன்றது யோகம் என்றால், மெதுவாக வசப்படுத்திப் புல்லைக் காட்டி அடக்கி, வண்டியில் பூட்டுவதைப் போன்றது ஞான மார்க்கம் என்றுகூட பகவான் கூறியுள்ளார்.

கம்பீரம் சேஷய்யாவின் மூலமாக, பிற பாதைகளின் தத்துவங்கள், யோகம் இவை பற்றிய நூல்களைப் படிக்கும் வாய்ப்பு பகவானுக்குக் கிட்டியது. இத்தகைய தகவல்களை அறிந்துகொண்டதால், தத்துவ சாஸ்திர பல்கலைக்கழகமாகவே ஆகிவிட்டார் பகவான். வேதங்களை நுணுக்கமாக அறிந்திருந்த காவ்ய கண்ட முனிவர் போன்ற அறிவாளிகளோடு, பிற்காலத்தில் பல விஷயங்களையும் ஒப்புநோக்க இது மிகவும் பயனுள்ளதாக அமைந்தது. காலப்போக்கில் பிற நாட்டு அறிஞர்களும் பிற மதத்தவர்களுமான பால் ப்ரண்டன், ஃப்ராங்க் ஹம்ஃப்ரீஸ், இஸ்லாம் மதக் கோட்பாடுகளில் வல்லுனரான டாக்டர் ஸயீத் போன்றவர்களைப் பகவான் சந்திக்க வேண்டியிருந்தது. இதற்கும், கம்பீரம் சேஷய்யா, பகவானுக்கு உதவியாக இருந்தார். கம்பீரம் சேஷய்யா எழுத்து மூலம் கேட்ட கேள்விகளும், பகவானது பதிலும் பின்னால் வந்த பக்தர்களுக்குக் கிடைப்பதற்கும் அவர் காரணமாக இருந்தார். பகவானுடைய முதல் நூலான '**விசார ஸங்கிரஹம்**' அவரது (தகவல்) குறிப்புகளே. பின்னர் அந்த நூல் 'வினா விடை மூலம் விசாரம்' (Catechism of Enquiry) என்று ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டது. பிறகு அதன் பெயர் Self Enquiry **(ஆத்ம விசாரம்)** என மாற்றப்பட்டது.

* * *

# சிவப்ரகாசம் பிள்ளை



1902இல் பகவானிடம் வந்த சிவப்ரகாசம் பிள்ளையும், கம்பீரம் சேஷய்யாவைப் போன்றே தத்துவசாஸ்திரம் படித்திருந்த ஓர் அரசாங்க அதிகாரியாக இருந்தார். கல்லூரியில் படித்துக்கொண்டிருந்தபோதே, 'நான் யார்?' என்ற விசாரத்தில் தீவிரமாக ஈடுபட்டிருந்தார். பிற்காலத்தில், சிவப்ரகாசம் பிள்ளை, "அந்தக் கேள்வி யதேச்சையாக வந்ததாகவே நான் எண்ணினேன்" என்று கூறியுள்ளார். அவர் விரூபாக்ஷ குகையில் பகவானைச் சந்தித்தார். கம்பீரம் சேஷய்யாவைப் போன்று, பகவானின் முதல் பார்வையே அவரை வசீகரித்துவிட்டது.

தனது குருவையும், கடவுளையும், ஒரே இடத்தில் அவரால் பார்க்க முடிந்தது. தெளிவான சிந்தனையுடையவரும், நடைமுறைக்கு முக்கியத்துவம் கொடுப்பவருமான அவருடைய முதல்கேள்வி, "ஸ்வாமி! நான் யார்?" என்பதுதான். இந்தக் கேள்வியின் விளைவாக, மடை திறந்ததுபோல் வெளிவந்த பகவானின் உபதேசங்கள், இன்றும்கூட, உலகம் முழுவதும் உள்ள பண்பாடுகளைச் செழிக்கச் செய்து கொண்டிருக்கின்றது. பகவானுடைய உபதேசங்கள் நடைமுறைக்கு ஒத்து வரக்கூடியனவா என்பதில் அவர் கவனம் செலுத்தினார். அவர் கேட்ட பதினான்கு கேள்விகளுக்குப் பகவான், மணலிலும் கரும்பலகையிலும் பதில் எழுதிக் கொடுத்தார். அவை பின்னர் அழிக்கப்பட்டன என்றாலும், சிவப்ரகாசம் பிள்ளை, தன் நினைவில் பதிந்த அந்த விடைகளை மீண்டும் எழுதி வைத்தார். அவை:-

***சிவப்ரகாசம் பிள்ளை*** *: 1. நான் யார்?*

***மகரிஷி :*** *ஸப்த தாதுக்களாலாகிய ஸ்தூல தேகம் நானன்று. சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தமெனும் (சப்தம், தொடும்*

*உணர்வு, உருவம், ருசி, மணம்) பஞ்ச விஷயங்களையும் தனித் தனியே அறிகின்ற சுரோத்திரம், துவக்கு, சக்ஷுஸ், ஜிஹ்வை, கிராணமென்கிற (காது, தோல், கண், நாக்கு, மூக்கு) ஞானேந்திரியங்களைந்தும் நானன்று. வசனம், கமனம், தானம், மல விஸர்ஜ்ஜனம், ஆனந்தித்தல் (பேச்சு, நடத்தல், கொடுத்தல், மல விஸர்ஜ்ஜனம், ஆனந்தித்தல்) என்னும் ஐந்து தொழில்களையும் செய்கின்ற வாக்கு, பாதம், பாணி, பாயு, உபஸ்தம் (வாய், கால், கை, ஆசன வாய், ஆண் - பெண் குறி) என்னும் கன்மேந்திரியங்களைந்தும் நானன்று. சுவாஸாதி ஐந்தொழில்களையும் செய்கின்ற பிராணாதி பஞ்ச வாயுக்களும் நானன்று. நினைக்கின்ற மனமும் நானன்று. சர்வ விஷயங்களும் சர்வ தொழில்களுமற்று, விஷய வாசனைகளுடன் மாத்திரம் பொருந்தியிருக்கும் அஞ்ஞானமும் நானன்று.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 2.*** *இவையெல்லாம் நானல்லாவிடில் பின்னர் நான் யார்?*

***மகரிஷி*** *: மேற்சொல்லிய யாவும் நானல்ல வென்று 'நேதி' செய்து (ஒதுக்கிய பின்) தனித்து நிற்கும் அறிவே நான்.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 3.*** *அறிவின் சொரூப மென்ன?*

***மகரிஷி*** *: அறிவின் சொரூபம் சச்சிதானந்தம். (சத்-சித்-ஆனந்தம்)*

***சிவப்ரகாசம் பிள்ளை : 4.*** *சொரூப தரிசனம் எப்போது கிடைக்கும்?*

***மகரிஷி*** *: திருசியமாகிய ஜகம்(காணப்படும் உலகம்) நீங்கிய விடத்துத் திருக்காகிய (காண்பவனாகிய சொருபம்) சொரூப தரிசன முண்டாகும்.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 5.*** *ஜகமுள்ள போதே (உலகம் தோன்றும் போதே) சொரூப தரிசன முண்டாகாதா?*

***மகரிஷி :*** *உண்டாகாது.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 6.*** *ஏன்?*

***மகரிஷி :*** *திருக்கும் திருசியமும், ரஜ்ஜுவும் சர்ப்பமும் (காண்பவனும், காணப்படும் பொருளும் - கயிறையும், பாம்பையும்) போன்றவை. கற்பித சர்ப்பஞானம் போனா லொழிய அதிஷ்டான ரஜ்ஜுஞானம் (இருப்பதான கயிறு என்ற ஞானம்) உண்டாகாதது போல, கற்பிதமான ஜக திருஷ்டி நீங்கினாலொழிய அதிஷ்டான சொரூப தரிசன முண்டாகாது.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 7.*** *திருசிய மாகிய ஜகம் (காணப்படும் உலகம்) எப்போது நீங்கும்?*

***மகரிஷி :*** *சர்வ அறிவிற்கும் சர்வ தொழிற்கும் காரணமாகிய மனம் அடங்கினால் ஜகம் மறையும்.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 8.*** *மனதின் சொரூப மென்ன?*

***மகரிஷி :*** *மனம் என்பது ஆத்ம சொரூபத்திலுள்ள ஓர் அதிசய சக்தி. அது சகல நினைவுகளையும் தோற்றுவிக்கின்றது. நினைவுகளை யெல்லாம் நீக்கிப் பார்க்கின்றபோது தனியாய் மனமென்றோர் பொருளில்லை. ஆகையால் நினைவே மனதின் சொரூபம். நினைவுகளைத் தவிர்த்து ஜகமென்றோர் பொருள் அன்னியமாயில்லை. தூக்கத்தில் நினைவுகளில்லை, ஜகமுமில்லை. ஜாக்ர (விழிப்பு நிலை) சொப்பனங்களில் நினைவுகளும், ஜகமும் உண்டு. சிலந்திப் பூச்சி எப்படித் தன்னிடமிருந்து, வெளியில் நூலைநூற்று மறுபடியும் தன்னுள் இழுத்துக் கொள்ளுகிறதோ, அப்படியே மனமும் தன்னிடத்திலிருந்து ஜகத்தைத் தோற்றுவித்து மறுபடியும் தன்னிடமே ஒடுக்கிக் கொள்ளுகிறது. மனம் ஆத்ம*

*சொரூபத்தினின்று வெளிப்படும் போது ஜகம் தோன்றும். ஆகையால், ஜகம் தோன்றும்போது சொரூபம் தோன்றாது. சொரூபம் தோன்றும் (பிரகாசிக்கும்) போது ஜகம் தோன்றாது. மனதின் சொரூபத்தை விசாரித்துக் கொண்டே போனால் மனம் தானாய் முடியும். 'தான்' என்பது ஆத்மசொரூபமே. மனம் எப்போதும் ஒரு ஸ்தூலத்தை அனுசரித்தே நிற்கும் தனியாய் நிற்காது. மனமே சூக்ஷ்மசரீரமென்றும் ஜீவனென்றும் சொல்லப்படுகிறது.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 9.*** *மனதின் சொரூபத்தை விசாரித்தறியும் மார்க்கம் என்ன?*

***மகரிஷி :*** *இந்த தேகத்தில் நான் என்று கிளம்புவதெதுவோ அஃதே மனமாம். நான் என்கிற நினைவு தேகத்தில் முதலில் எந்த விடத்தில் தோன்றுகிறதென்று விசாரித்தால், ஹ்ருதயத்திலென்று தெரிய வரும். அதுவே மனதின் பிறப்பிடம். நான், நான் என்று கருதிக் கொண்டிருந்தாலும் கூட அவ்விடத்திற் கொண்டு-போய் விட்டுவிடும். மனதில் தோன்றும் நினைவுகளெல்லாவற்றிற்கும் நான் என்னும் நினைவே முதல் நினைவு. இது எழுந்த பிறகே ஏனைய நினைவுகள் எழுகின்றன. தன்மை தோன்றிய பிறகே, முன்னிலை, படர்க்கைகள் தோன்றுகின்றன. தன்மையின்றி முன்னிலை படர்க்கைகளிரா.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 10.*** *மனம் எப்படி யடங்கும்?*

***மகரிஷி :*** *நான் யாரென்னும் விசாரணையினாலேயே மன மடங்கும். நான் யாரென்னும் நினைவு மற்ற நினைவு-களையெல்லாம் அழித்துப் பிணஞ்சுடு தடிபோல் முடிவில் தானுமழியும். பிறகு சொரூபதரிசனம் உண்டாம்.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 11.*** *நான் யாரென்கிற நினைவை சதா காலமும் பிடிக்கும் உபாயம் என்ன?*

***மகரிஷி :*** *பிற எண்ணங்கள் எழுந்தால் அவற்றைப் பூர்த்தி பண்ணுவதற்கு எத்தனியாமல் அவையாருக்கு உண்டாயின? என்று விசாரிக்க வேண்டும். எத்தனை எண்ணங்கள் எழினுமென்ன? ஜாக்கிரதையாய் ஒவ்வோரெண்ணமும் கிளம்பும் போதே "இது யாருக்குண்டாயிற்று?" என்று விசாரித்தால் "எனக்கு" என்று தோன்றும். "நான் யார்" என்று விசாரித்தால் மனம் தன் பிறப்பிடத்திற்குத் திரும்பிவிடும். எழுந்த எண்ணமும் அடங்கி விடும். இப்படிப் பழகப் பழக மனதிற்குத் தன் பிறப்பிடத்தில் தங்கி நிற்கும் சக்தி அதிகரிக்கின்றது. சூக்ஷ்மமான மனம், மூளை இந்திரியங்கள் வாயிலாய் வெளிப்படும்போது, ஸ்தூலமான நாம ரூபங்கள் தோன்றுகின்றன. ஹ்ருதயத்தில் தங்கும்போது நாம ரூபங்கள் மறைகின்றன. மனத்தை வெளிவிடாமல் ஹ்ருதயத்தில் வைத்துக் கொண்டிருப்பதற்குத் தான் அகமுகம் அல்லது அந்தர்முகம் என்று பெயர். ஹ்ருதயத்திலிருந்து வெளியிடு-வதற்குத்தான் பகிர்முக மென்று பெயர். இவ்விதமாக மனம் ஹ்ருதயத்தில் தங்கவே, எல்லா நினைவுகளுக்கும் மூலமான 'நான்' என்பது போய், எப்பொழுதுமுள்ள 'தான்' மாத்திரம் விளங்கும். எதைச் செய்தாலும் நான் என்கிற அகங்கார மற்றுச் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால் எல்லாம் சிவ ஸ்வரூபமாய்த் தோன்றும்.*

***சிவப்ரகாசம் பிள்ளை :12.*** *மன மடங்குவதற்கு வேறு உபாயங்களில்லையா?*

***மகரிஷி :*** *விசாரணையைத் தவிர வேறு தகுந்த உபாயங்களில்லை. மற்ற உபாயங்களினால் அடக்கினால், மனம் அடங்கினாற்போலிருந்து மறுபடியும் கிளம்பிவிடும். பிராணாயாமத்தாலும் மனம் அடங்கும். ஆனால் பிராணனடங்கியிருக்கும் வரையில் மனமும் அடங்கியிருந்து, பிராணன் வெளிப்படும்போது தானும் வெளிப்பட்டு வாசனை*

*வயத்தாய் அலையும். மனத்திற்கும் பிராணனுக்கும் பிறப்பிடமொன்றே. நினைவே மனதின் சொரூபம். நான் என்னும் நினைவே மனதின் முதல் நினைவு. அதுவே அகங்காரம். அகங்காரம் எங்கிருந்து உற்பத்தியோ, அங்கிருந்துதான் மூச்சும் கிளம்புகின்றது. ஆகையால் மனமடங்கும்போது பிராணனும், பிராணனடங்கும்போது மனமும் அடங்கும். ஆனால் சுழுத்தியில் (தூக்கத்தில்) மன மடங்கி யிருந்த போதிலும் பிராணன் அடங்கவில்லை. தேகத்தின் பாதுகாப்பின் நிமித்தமும், தேகமானது மரித்து விட்டதோவென்று பிறர் ஐயுறாவண்ணமும் இவ்வாறு ஈச்வர நியதியால் ஏற்பட்டிருக்கிறது. ஜாக்கிரத்திலும் சமாதியிலும் மன மடங்குகிற போது பிராணன் அடங்குகிறது. பிராணன் மனதின் ஸ்தூல ரூபமெனப்படும். மரணகாலம் வரையில் மனம் பிராணனை உடலில் வைத்துக் கொண்டிருந்து, உடல் மரிக்குங் காலத்தில் அதனைக் கவர்ந்து கொண்டு போகின்றது. ஆகையால் பிராணாயாமம் மனத்தையடக்க சகாயமாகுமேயன்றி மனோநாசம் செய்யாது.*

*பிராணாயாமம் போலவே மூர்த்தித் தியானம், மந்திர ஜபம் ஆகார நியமம் என்பவைகளும் மனத்தை அடக்கும் சகாயங்களே. மூர்த்தித் தியானத்தாலும் மந்திர ஜபத்தாலும் மனம் ஏகாக்கிரத்தை யடைகிறது. மனமானது சதா சலித்துக் கொண்டேயிருக்கும். யானையின் துதிக்கையில் ஒரு சங்கிலியைக் கொடுத்தால் அது எப்படி வேறொன்றையும் பற்றாமல் அதையே பற்றிக் கொண்டு செல்லுமோ, அப்படியே மனதையும் ஏதோ ஒரு நாமம் அல்லது ரூபத்திற் பழக்கினால் அதையே பற்றிக் கொண்டிருக்கும். மனம் அளவிறந்த நினைவுகளாய் விரிகின்ற படியால் ஒவ்வொரு நினைவும் அதிபலவீனமாகப் போகின்றது. நினைவுகள் அடங்க அடங்க ஏகாக்கிரத் தன்மை யடைந்து, அதனாற் பலத்தையடைந்த மனத்திற்கு ஆத்ம விசாரம் சுலபமாய் சித்திக்கும். எல்லா*

*நியமங்களினுஞ் சிறந்த மித சாத்வீக ஆகார நியமத்தால் மனத்தின் சத்வ குணம் விருத்தியாகி ஆத்மவிசாரத்திற்கு சகாயமுண்டாகிறது.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 13.*** *விஷயவாசனைகள் (நினைவுகள்) அளவற்றனவாய்க் கடலில் அலைபோலத் தோன்றுகின்றனவே. அவைகளெல்லாம் எப்போது நீங்கும்?*

***மகரிஷி :*** *சொரூபத் தியானம் கிளம்பக் கிளம்ப நினைவு-களெல்லாம் அழிந்துவிடும்.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 14.*** *தொன்றுதொட்டு வருகின்ற சகல விஷய வாசனைகளும் ஒடுங்கி, சொரூபமாத்திரமாய் இருக்க முடியுமா?*

***மகரிஷி :*** *'முடியுமா, முடியாதா?' வென்கிற சந்தேக நினைவுக்கும் இடங்கொடாமல், சொரூபத் தியானத்தை விடாப்பிடியாய்ப் பிடிக்க வேண்டும். ஒருவன் எவ்வளவு பாபியாயிருந்தாலும், 'நான் பாபியாயிருக்கிறேனே! எப்படிக் கடைத்தேறப் போகிறேன்?' என்றேங்கி அழுது கொண்டிராமல், தான் பாபி என்னுமெண்ணத்தையும் அறவேயொழித்து சொரூபத் தியானத்தில் ஊக்கம் உள்ளவனாக இருந்தால் அவன் நிச்சயமாய் உருப்படுவான். நல்ல மனமென்றும் கெட்ட மனமென்றும் இரண்டு மனங்களில்லை மனம் ஒன்றே. வாசனைகளே சுப மென்றும், அசுபமென்றும் இரண்டு விதம். மனம் சுப வாசனை வயத்தாய் நிற்கும் போது நல்ல மனமென்றும், அசுப வாசனை வயத்தாய் நிற்கும் போது கெட்ட மனமென்றும் சொல்லப்படும்.*

*பிரபஞ்ச விஷயங்களிலும் பிறர் காரியங்களிலும் மனதை விடக்கூடாது. பிறர் எவ்வளவு கெட்டவர்களாயிருந்தாலும், அவர்களிடத்தில் துவேஷம் வைக்கலாகாது. விருப்பு, வெறுப்பு இரண்டும் வெறுக்கத் தக்கன. பிறருக்கு ஒருவன்*

*கொடுப்பதெல்லாம் தனக்கே கொடுத்துக் கொள்ளுகிறான். இவ்வுண்மையை அறிந்தால் எவன் தான் கொடாதொழிவான்? தானெழுந்தால் சகலமும் எழும். தானடங்கினால் சகலமும் அடங்கும். எவ்வளவுக்கெவ்வளவு தாழ்ந்து நடக்கிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு நன்மையுண்டு. மனத்தை யடக்கிக் கொண்டிருந்தால் எங்கேயிருந்தாலும் இருக்கலாம்.*

பிற்காலத்தில் மேலும் பதினான்கு வினாக்களைப் பகவானிடம், சிவப்ரகாசம் பிள்ளை கேட்டார். பகவான் அவற்றிற்கும் பதிலளித்தார். அவரது இருபத்து எட்டு வினாக்களும் விடைகளும் அடங்கியதே, இறைநாட்டமுள்ளவர்களுக்கு மிகவும் தேவையான வழிகாட்டியாகிய, '**நான் யார்?**' என்னும் சிறிய புத்தகம். ஸ்ரீ ரமண மகரிஷியிடமும், படைக்கப்பட்ட அனைத்திலும், ஆதிமுதல் ஊடுருவிப் பரந்து நிற்கும் ஸத்தியப் பொருளே நாம் என்பதை உணரச் செய்கிறது அது. மற்ற பதினான்கு கேள்வி – பதில் கீழே தரப்பட்டுள்ளது.

***சிவப்ரகாசம் பிள்ளை : 15.*** *விசாரணை எதுவரையில் வேண்டும்?*

***மகரிஷி*** *: மனத்தின் கண் எதுவரையில் விஷய வாசனைகளிருக்கின்றனவோ, அதுவரையில்* ***நான் யார்?*** *என்னும் விசாரணையும் வேண்டும். நினைவுகள் தோன்றத் தோன்ற அப்போதைக்கப்போதே அவற்றையெல்லாம் உற்பத்தி ஸ்தானத்திலேயே விசாரணையால் நசிப்பிக்க வேண்டும். ஒருவன் சொரூபத்தை அடையும் வரையில் நிரந்தர சொரூப ஸ்மரணையைக் கைப்பற்றுவானாயின், அதுவொன்றே போதும். கோட்டைக்குள் எதிரிகளுள்ளவரையில் அதிலிருந்து வெளியே வந்து கொண்டிருப்பார்கள்; வரவர அவர்களை எல்லாம் வெட்டிக்கொண்டே இருந்தால் கோட்டை கைவசப்படும்.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 16.*** *சொரூபத்தின் இயல்பு என்ன?*

***மகரிஷி** : யதார்த்தமாயுள்ளது **ஆத்மசொரூப**மொன்றே. **ஜக, ஜீவ, ஈச்வரர்கள்** சிப்பியில் வெள்ளிபோல் அதிற் கற்பனைகள்; இவை மூன்றும் ஏக காலத்தில் தோன்றி, ஏக காலத்தில் மறைகின்றன.*

***நான்** என்கிற நினைவு கிஞ்சித்தும் இல்லாத விடமே சொரூபமாகும். அதுவே **மௌனம்** எனப்படும். **சொரூபமே ஜகம்; சொரூபமே நான்; சொரூபமே ஈச்வரன்; எல்லாம் சிவ சொரூபமே.***

***சிவப்ரகாசம் பிள்ளை : 17.** எல்லாம் ஈசன் செய லன்றோ?*

***மகரிஷி** : இச்சா ஸங்கல்ப யத்தன மின்றி எழுந்த ஆதித்தன் சன்னிதி மாத்திரத்தில் காந்தக்கல் அக்கினியைக் கக்குவதும், தாமரை அலர்வதும், நீர் வற்றுவதும், உலகோர் தத்தங் காரியங்களிற் பிரவிருத்தித்து இயற்றி அடங்குவதும், காந்தத்தின் முன் ஊசி சேஷ்டிப்பதும் போல, ஈசன் சன்னிதான விசேஷ மாத்திரத்தால் நடக்கும் **முத்தொழில்** அல்லது **பஞ்ச கிருத்தியங்கட்** குட்பட்ட ஜீவர்கள் தத்தம் கர்மானுசாரம் சேஷ்டித்தடங்குகின்றனர். அன்றி, அவர் சங்கல்ப ஸஹிதரல்லர்; ஒரு கருமமும் அவரை ஒட்டாது. அது, லோக கர்மங்கள் சூரியனை ஒட்டாததும், ஏனைய சதுர் பூதங்களின் குணா குணங்கள் வியாபகமான ஆகாயத்தை ஒட்டாததும் போலும்.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 18.** பக்தருள் மேலான பக்தர் யார்?*

***மகரிஷி** : எவன் தன்னையே கடவுளாகிய சொரூபத்தினிடத்தில் தியாகம் செய்கிறானோ அவனே சிறந்த பக்திமான். ஆத்ம சிந்தனையைத் தவிர வேறு சிந்தனை கிளம்புவதற்குச் சற்றும் இடங்கொடாமல் ஆத்ம நிஷ்டாபரனாயிருப்பதே தன்னை ஈசனுக்கு அளிப்பதாகும்.*

*ஈசன் பேரில் எவ்வளவு **பார**த்தைப் போட்டாலும் அவ்வளவையும் அவர் வகித்துக் கொள்ளுகிறார். சகல காரியங்களையும் ஒரு பரமேச்வர சக்தி நடத்திக் கொண்டிருக்கிற படியால், நாமும் அதற்கு அடங்கியிராமல், ''இப்படிச் செய்ய வேண்டும் அப்படிச் செய்ய வேண்டும்'' என்று சதா சிந்திப்பதேன்? புகை வண்டி சகல பாரங்களையும் தாங்கிக் கொண்டு போவது தெரிந்திருந்தும் அதிலேறிக் கொண்டு போகும் நாம் நம்முடைய சிறிய மூட்டையையும் அதிற் போட்டுவிட்டுச் சுகமாயிராமல், அதை நமது தலையில் தாங்கிக் கொண்டு ஏன் கஷ்டப்பட வேண்டும்?*

***சிவப்ரகாசம் பிள்ளை : 19.*** *வைராக்கியமாவது எது?*

***மகரிஷி*** *: எவ்வெந் நினைவுகள் உற்பத்தியாகின்றனவோ அவற்றையெல்லாம் ஒன்றுகூட விடாமல் உற்பத்தி ஸ்தானத்திலேயே நசுக்கிப் போடுவதே வைராக்கியமாம். முத்துக் குளிப்போர் தம்மிடையிற் கல்லைக் கட்டிக்கொண்டு மூழ்கிக் கடலடியிற் கிடைக்கும் முத்தை எப்படி எடுக்கிறார்களோ, அப்படியே ஒவ்வொருவனும் வைராக்கியத்துடன் தன்னுள்ளாழ்ந்து மூழ்கி ஆத்ம முத்தை அடையலாம்.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 20.*** *கடவுளாலும் குருவாலும் ஒரு ஜீவனை முக்தனாக்க முடியாதா?*

***மகரிஷி*** *: கடவுளும் குருவும் முக்தியை அடைவதற்கு வழியை காட்டுவார்களே அல்லாமல், தாமாகவே ஜீவர்களை முக்தியிற் சேர்க்கார், கடவுளும் குருவும் உண்மையில் வேறல்லர். புலி வாயிற் பட்டது எவ்வாறு திரும்பாதோ, அவ்வாறே குருவின் அருட்பார்வையிற் பட்டவர்கள் அவரால் ரக்ஷிக்கப் படுவரே அன்றி ஒருக்காலும் கைவிடப்படார்; எனினும், ஒவ்வொருவரும் தம்முடைய முயற்சியினாலேயே*

*கடவுள் அல்லது குரு காட்டிய வழிப்படி தவறாது நடந்து முக்தியடைய வேண்டும். தன்னைத் தன்னுடைய ஞானக் கண்ணால், தானே அறியவேண்டுமே அல்லாமல் பிறரால் எப்படி அறியலாம்? இராமன் என்பவன் தன்னை இராமன் என்று அறிவதற்கு கண்ணாடி வேண்டுமோ?*

***சிவப்ரகாசம் பிள்ளை : 21.*** *முக்தியில் விருப்ப முள்ளவனுக்குத் தத்துவங்களின் விசாரணை அவசியமா?*

***மகரிஷி :*** *குப்பையைக் கூட்டித் தள்ளவேண்டிய ஒருவன் அதை ஆராய்வதால் எப்படிப் பயனில்லையோ, அப்படியே தன்னை அறியவேண்டிய ஒருவன் தன்னை மறைத்துக் கொண்டிருக்கும் தத்துவங்கள் அனைத்தையும் சேர்த்துத் தள்ளிவிடாமல் அவை இத்தனை என்று கணக்கிடுவதாலும், அவற்றின் குணங்களை ஆராய்வதாலும் பயனில்லை. பிரபஞ்சத்தை ஒரு சொப்பனத்தைப் போல் எண்ணிக்கொள்ள வேண்டும்.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 22.*** *நனவிற்கும், கனவிற்கும் பேதமில்லையா?*

***மகரிஷி :*** *நனவு (ஜாக்ரம்) தீர்க்கம், கனவு (சொப்பனம்) க்ஷணிக மென்பது தவிர வேறு பேதமில்லை. ஜாக்ரத்தில் நடக்கும் விவகாரங்களெல்லாம் எவ்வளவு உண்மையாகத் தோன்றுகின்றனவோ, அவ்வளவு உண்மையாகவே சொப்பனத்தில் நடக்கும் விவகாரங்களும் அக்காலத்தில் தோன்றுகின்றன. சொப்பனத்தில் மனம் வேறொரு தேகத்தை எடுத்துக் கொள்கிறது. ஜாக்ரம் சொப்பனம் இரண்டிலும், நினைவுகளும் நாமரூபங்களும் ஏக காலத்தில் நிகழ்கின்றன.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 23.*** *முமுக்ஷுக்களுக்கு நூற்படிப்பால் பிரயோஜனம் உண்டா?*

***மகரிஷி*** *: எந்நூலிலும் முக்தியடைவதற்கு மனத்தை அடக்க வேண்டுமென்று சொல்லப்பட்டுள்ள படியால், மனோ நிக்ரகமே நூல்களின் முடிவான கருத்து என்றறிந்து கொண்டபின்பு நூல்களை அளவின்றிப் படிப்பதாற் பயனில்லை. மனத்தை அடக்குவதற்கு தன்னை யாரென்று தன்னுள் விசாரிக்க வேண்டுமேயல்லாமல், எப்படி நூல்களில் விசாரிப்பது? தன்னைத்தன்னுடைய ஞானக்கண்ணால் தானே அறிய வேண்டும். '**தான்**' பஞ்ச கோசங்களுக்குள் இருப்பது; நூல்களோ அவற்றிற்கு வெளியில் இருப்பவை. ஆகையால், பஞ்ச கோசங்களையும் நீக்கி விசாரிக்கவேண்டிய தன்னை நூல்களில் விசாரிப்பது வீணே. கற்றவை அனைத்தையும் ஒருகாலத்தில் மறக்க வேண்டிவரும்.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 24.*** *சுகமாவது யாது?*

***மகரிஷி*** *: சுகமென்பது, ஆத்மாவின் சொரூபமே; சுகமும் ஆத்மசொரூபமும் வேறன்று. பிரபஞ்சப் பொருள் ஒன்றிலாவது சுகமென்பது கிடையாது. அவைகளிலிருந்து சுகம் கிடைப்பதாக நாம் நமது அவிவேகத்தால் நினைக்கின்றோம். மனம் வெளிவரும் போது துக்கத்தை அனுபவிக்கிறது. உண்மையில் நமது எண்ணங்கள் பூர்த்தியாகும்போதெல்லாம் அது தன்னுடைய யதாஸ்தானத்திற்குத் திரும்பி ஆத்ம சுகத்தையே அனுபவிக்கிறது. அப்படியே, தூக்கம், சமாதி, மூர்ச்சை காலங்களிலும், இச்சித்த பொருள் கிடைக்கிறபோதும், வெறுத்த பொருளுக்கு கேடுண்டாகும்போதும், மனம் அந்தர்முகமாகி ஆத்ம சுகத்தையே அனுபவிக்கிறது. இப்படி மனம் ஆத்மாவை விட்டு வெளியே போவதும் உள்ளே திரும்புவதுமாக ஓய்வின்றி அலைகிறது. மரத்தடியில் நிழல் சுகமாயிருக்கிறது. வெளியில் சூரியவெப்பம் கொடுமையாயிருக்கிறது. வெளியில் அலையும் ஒருவன் நிழலிற் சென்று குளிர்ச்சியடைகிறான். சிறிது நேரத்திற்குப் பின் வெளிக்கிளம்பி வெப்பத்தின் கொடுமைக்கு ஆற்றாது,*

*மறுபடியும் மரத்தடிக்கு வருகின்றான். இவ்வாறு நிழலினின்று வெயிலிற் போவதும், வெயிலினின்று நிழலிற் செல்வதுமாயிருக்கிறான். இப்படிச் செய்கிறவன் அவிவேகி. ஆனால் விவேகியோ நிழலை விட்டு நீங்கான். அப்படியே ஞானியின் மனமும் பிரம்மத்தை விட்டு நீங்குவதில்லை. ஆனால் அஞ்ஞானியின் மனமோ பிரபஞ்சத்தில் உழன்று துக்கப்படுவதும், சிறிது நேரம் பிரம்மத்திற்குத் திரும்பி சுகம் அடைவதுமாயிருக்கிறது. ஜகம் என்பது நினைவே. ஜகம் மறையும் போது, அதாவது நினைவற்றபோது மனம் ஆனந்தத்தை அனுபவிக்கின்றது;*

*ஜகம் தோன்றும் போது அது துக்கத்தை அனுபவிக்கின்றது.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 25.*** *ஞானதிருஷ்டி என்றால் என்ன?*

***மகரிஷி*** *: சும்மா இருப்பதற்குத் தான்* ***ஞானதிருஷ்டி*** *என்று பெயர். சும்மா இருப்பதாவது, மனத்தை ஆத்ம சொரூபத்தில் லயிக்கச் செய்வதே; அன்றி பிறர் கருத்தறிதல், முக்காலம் உணர்தல், தூர தேசத்தில் நடப்பன அறிதல் ஆகிய இவை ஞானதிருஷ்டி ஆகமாட்டா.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 26.*** *நிராசைக்கும் ஞானத்திற்கும் சம்மந்தமென்ன?*

***மகரிஷி*** *: நிராசையே ஞானம். நிராசை வேறு ஞானம் வேறன்று; உண்மையில் இரண்டும் ஒன்றே. நிராசை யென்பது ஒரு பொருளிலும் மனம் செல்லாமலிருப்பது. ஞானம் என்பது ஒரு பொருளும் தோன்றாதிருப்பது என்றால், அன்னியத்தை நாடாதிருத்தல் வைராக்கியம் அல்லது நிராசை; தன்னை விடாதிருத்தல் ஞானம்.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 27.*** *விசாரணைக்கும் தியானத்திற்கும் பேதமென்ன?*

***மகரிஷி*** : *விசாரணையாவது தன்னிடத்திலேயே மனதை வைத்துக்கொண்டிருப்பது. தியானமாவது தன்னை பிரம்ம-மென்றும் சச்சிதானந்தமென்றும் பாவிப்பது.*

***சிவப்ரகாசம் பிள்ளை : 28.*** *முக்தி என்றால் என்ன?*

***மகரிஷி*** : *பந்தத்தில் இருக்கும் தான் யாரென்று விசாரித்துத் தன் யதார்த்த சொரூபத்தைத் தெரிந்து கொள்வதே முக்தி.*

சிவப்ரகாசம் பிள்ளை மேற்கூறிய உபதேசங்களுக்-கெல்லாம் ஒரு உதாரணமாக திகழ்ந்தார். ஆத்மவிசாரத்திற்குப் பின், இறை நாட்டம் உள்ளவர்கள், எவ்வாறு ஆத்மாவில் தங்களை நிலை நிறுத்தவேண்டும் என்பதைக் காட்டிக் கொடுத்தார். பகவானிடம், அவருக்கு மிகுந்த மரியாதையும், அன்பும், மதிப்பும் இருந்தது. பகவான் கூறியவற்றை முழுமையாக மனதில் வாங்கிக்கொண்டு, அதன்படி நடக்கவும் செய்தார். சில சமயங்களில், பக்தர்கள், பகவான் கூறியதைத் தவறாகப் புரிந்துகொண்டு நடப்பதும் உண்டு. உதாரணமாக, பகவான் துறவை வெகுவாகப் புகழ்ந்து கூறியதைச் ஸந்யாஸத்தைப் புகழ்வதாக எடுத்துக்கொண்டார் சிவப்ரகாசம். வீட்டிற்குப் போய்த் தலையை மொட்டையடித்துக் கொண்டார். பகவான் அவரைப் பார்த்தபோது, “ஏன் மொட்டை அடித்துக் கொண்டாய்? தலைமுடியை வளர்த்துக்கொள்” என்று அனுப்பி வைத்தார்.

பகவானின் உபதேசங்களைக் கடைப்பிடிக்கும்போது, வெளி வேஷங்களை அவர் விரும்பவில்லை என்பதைச் சிவப்ரகாசம் பிள்ளை புரிந்து கொண்டார். துறக்க வேண்டியது உலகப்பற்று அல்லது உலக விஷயங்கள் மீதுள்ள பற்று; இதையே மனதால் துறக்க வேண்டும்; வெளியில் எந்த மாற்றமும் தேவையில்லை என்பதை உணர்ந்தார். “வளர்த்தலோர் குடுமி நன்றெனு வகுத்தாய் வரதனே

ரமணமாதேவே" என்று பிள்ளையவர்கள் தனது ரமணதேவமாலையில் இதனைக் குறிப்பிட்டுள்ளார்.

விருபாக்ஷ குகை, ஸ்கந்தாச்ரமம் இவற்றில் அடிக்கடி பகவானுடன் பிள்ளையவர்கள் தங்கியுள்ளார். குருவின் அருகே இருந்ததாலும், அவரது உபதேசங்களைக் கிரஹித்துக் கொண்டதாலும், பிள்ளையிடம் நல்ல ஆன்மீக முன்னேற்றம் ஏற்பட்டது. வேலையை விட்டுவிட்டு முழுமையாக ஆத்ம விசாரத்தில் ஈடுபட எண்ணினார். ஆனால், பகவான் அவருக்கு அனுமதி அளிக்கவில்லை. மூன்று ஆண்டுகளுக்குப் பின்னர், வேலையை விட விரும்புவதாக மீண்டும் கூறியபோது, அலுவலகத்திலும் ஆத்மவிசாரமே செய்வதால், அலுவலகப் பணிகளைக் கவனிக்க இயலவில்லை என்பதையும் தெரிவித்தார். இம்முறை, வேலையை ராஜினாமா செய்ய அனுமதியளித்து, கிராமத்திற்குச் சென்று சாதனைகளில் ஈடுபடுமாறு பகவான் பணித்தார்.

கிராம எல்லைக்கு வெளியே இருந்த பிள்ளையார் கோயிலிலோ அல்லது அடுத்திருந்த காடுகளிலோ, தனிமையில் வாழ முற்பட்டார். இடைவிடாது ஆத்ம விசாரத்தைப் பழகினார். இந்த சமயத்தில் அவரது மனநிலையும், நடத்தையும் திடீரென மாறிவிட்டன. காரணமின்றிச் சிரிக்கத் துவங்கினார். தமிழில் தோத்திரப் பாடல்களை உரக்க ஓதுவார். தன்முன் வரும் எல்லா உருவங்களையும் ஸாஷ்டாங்கமாக விழுந்து வணங்குவார். நீளமாகத் தொங்கிய கோவணம், விபூதி நிறைத்த பை இவைகளுடன் நடந்து கொண்டிருந்தார். அந்த விபூதிப் பையைச் சில ஆண்டுகளுக்கு முன், பகவான் அவரிடம் கொடுத்து, உடம்பில் விபூதியைப் பூசும்படி கூறியிருந்தார் (பகவான், இம்மாதிரி, குறிப்பாக விபூதி பூசுமாறு கூறியதாகக் கேட்டதில்லை.) சிவப்ரகாசம் பிள்ளை உடல் முழுவதும் விபூதி பூசியபடி, கையில் சிறிய கம்பை ஏந்தி, குல

ஆசாரங்களையெல்லாம் மறந்து, மயானத்திற்கும், சமுதாயத்தால் ஒதுக்கப்பட்ட மக்கள் வாழுமிடங்களுக்கும் அடிக்கடி செல்ல ஆரம்பித்தார். இதே கோலத்தில், அருகிலிருந்த கோயில்கள் நிறைந்த நகருக்கு நடந்து போய்வருவார். யார் கொடுத்தாலும் கஞ்சி அல்லது பழைய சோறு இவற்றை வாங்கி உண்டார். தனது கிராமத்திற்குத் திரும்பி வந்த பின்னர், அவர் பழைய மனநிலையை அடைந்தார்.

அதற்குப் பிறகு, ஒரு ஆண்டில், பலமுறை பகவானை வந்து பார்ப்பார். வரும்போதெல்லாம் பதினைந்து தினங்கள் தங்கிச் செல்வார். இந்தக் காலகட்டத்தில், வெளியே இருந்த குரு அவரை அகமுகமாக்கியவாறு இருந்தார். அதே சமயம் உள்ளே இருந்த குரு, மேலும் அதிகமாக விசாரத்தில் ஈடுபடும் பொருட்டு அவரை உள்ளே இழுத்துக் கொண்டிருந்தார். அடிக்கடி பரவச நிலையிலாழ்ந்த சிவப்ரகாசம் பிள்ளை அநேக பாடல்களை இயற்றினார். பகவான் அவற்றை அங்கீகரித்ததோடு, பாராட்டவும் செய்தார். அத்துடன், நான்கு தலைப்புகளில் சிவப்ரகாசம் பிள்ளை எழுதிய பாடல்களிலிருந்து, சிலவற்றை பகவான் ஆச்ரமத் தினசரி பாராயணத்திற்கும் தேர்ந்தெடுத்தார்.

விடிவது முதல்எல் வீழ்ந்திடு வரையில்
வீண்மொழி பேசியே நாட்கள்
கடத்துவன் அல்லால் கடிகைஒன் றேனும்
கருதிலேன் என்னைநான் ஆர்என்று
உடையவா உரைத்தாய் ஒருமொழி பேசில்
உரைபல வளர்ந்திடும் என்றே
நடிப்பனே அலாதுஉன் அடிமையைப் போல்நான்
நடக்கிலேன் ரமணமா தேவே.

**(ஸ்ரீ ரமண தேவமாலை – பாடல் 2)**

உடலினில் எந்த இடத்தினை முதலில்
        உளம்பிடித்து உதிக்கும்நான் என்றே
அடங்கிநீ நோக்கின் இதயம்என்று அறிவாய்
        அவ்விடத்து அவ்அக நினைவை
அடக்கிடு விடாமல் அக்கணத்து எனநீ
        அருளினை அதற்குமா றாக
மடையன்அந் நினைவை வளர்த்திடு கின்றேன்
        மாதவ ரமணசற் குருவே.

(**ஸ்ரீ ரமண சற்குருமாலை** – பாடல் – 8)

சத்திய மாகவே சற்குரு வேநினைச்
        சழக்கனேன் வேண்டு கின்றேன்
எத்துயர் எய்தினும் அதுவும்நின் கருணைஎன்று
        எண்ணிநான் பொறுக்க வும்யார்
சித்திர வதையுமே செய்யினும் அவரையும்
        சீறிநான் வெறுத்தி டாமல்
அத்தனே அதுவும்நின் அருட்செயல் எனமதித்து
        அடங்கவும் அருள வேண்டும்.

(**ஸ்ரீ ரமண விண்ணப்பம்** - பாடல் – 36)

நானார் எனப்பார் அனியம் விடென்று
        நவில்வோன் பாதம் வாழ்கவே
தானாய் விட்டால் துயர்போம் என்னும்
        சாந்தன் பாதம் வாழ்கவே.

(**ஸ்ரீ ரமண பாதமாலை** – பாடல் – 10)

ஒரு பக்தர், “பகவானே! சிவப்ரகாசம் பிள்ளை மிகச் சிறந்த துறவி. உங்கள் உபதேசங்களை உறுதியோடு

கடைப்பிடித்து வந்தார். அவரது பாடல்களைப் படிக்கும்போது, என்நிலை பற்றி என்னவென்று கூறுவது? அவரே அத்தகைய பரிதாபமான நிலையிலிருந்தார் என்றால், எனக்கு என்ன நேரும்?" என்று மிகவும் வருத்தத்துடன் வினவியபோது, பகவான் அழகான பதில் ஒன்றைக் கூறினார். "ஆதிசங்கரரும் மற்றும் பல ஞானியரும், கடவுளைப் புகழ்ந்து பாடும்போது, இதைப்போன்றே, தங்களைத் தாழ்த்திப் பேசுகிறார்கள். முனிவர்கள் முமுக்ஷுக்களுக்கு இவ்வாறுதான் வழிகாட்டு-கிறார்கள்" என்று பகவான் கூறினார்.

ஒருநாள், விஸ்வநாதஸ்வாமி, சிவப்ரகாசம் பிள்ளை வந்திருப்பதை அறிந்து, அவரைத் தனக்குக் காட்டித் தரவேண்டும் என்று பகவானிடம் கேட்டார். பண்டிகை நாளாக இருந்ததாலோ என்னவோ அறையில் கூட்டம் அதிகமாக இருந்தது. பகவான், அறையின் ஒரு கோடியில் அமர்ந்திருந்தவரைச் சுட்டிக்காட்டி, "அங்கே பார். மார்பைக் கைகளால் மறைத்தபடி, யாருக்கும் தெரியாமல் கிராமத்தானைப் போன்று அமர்ந்திருக்கிறாரே, அவர்தான் நம் சிவப்ரகாசம் பிள்ளை. வீட்டில் வளரும் பூனை போல் இங்கு அடக்க ஒடுக்கமாக இருக்கிறார். அவருடைய அலுவலகத்தில் அவரைப் பார்க்கவேண்டும்! அங்கு காட்டுச் சிங்கம் போல் காட்சியளிப்பார். அவருடைய நேர்மை, கடின உழைப்பு, ஸத்தியமான நடத்தை இவற்றின் காரணமாக அனைவரும் மிகவும் மரியாதை செலுத்தி, பயபக்தியோடுதான் அவரிடம் அணுகுவார்கள்" என்று பகவான் அவரை அறிமுகப்படுத்தினார்.

சிவப்ரகாசம் பிள்ளைக்கு வயதாகி, நோய்வாய்ப்-பட்டதால் பிரயாணம் எதுவும் மேற்கொள்ள முடியாத நிலையிலுள்ளார் என்று அறிந்த எனது தந்தை, அதுவரை அவரைப் பார்த்ததில்லை என்பதால், அவரைக் காண விரும்பினார். சிதம்பரத்தின் அருகே இருந்த அவரது

கிராமத்திற்குத் தன்னை அழைத்துச் செல்லும்படி குஞ்சு ஸ்வாமியிடம் கேட்டுக்கொண்டார். கண்டிப்போடு கூடிய, பிள்ளையவர்களின் எளிமையான தோற்றமும், பணிவும் ஒருவரைக் கவரக்கூடியதாக இருந்தது. ஆன்மீக முதிர்ச்சியினால் அவருடைய உடம்பு உருக்கிய தங்கம் போன்று மிளிர்ந்தது.

என் தந்தைக்கு அவரை அறிமுகம் செய்து வைத்த குஞ்சு ஸ்வாமி, மனப்பூர்வமாகவும், மரியாதையோடும், அவரது பணிவு, பாண்டித்யம் இவற்றைப் புகழ்ந்து பேசியதோடு, பகவான் தனக்குக் கொடுத்த உபதேசங்களை வெளிக்கொணர்ந்தவர் என்றும் பாராட்டினார்.

சிவப்ரகாசம் பிள்ளை, குஞ்சு ஸ்வாமியின் கைகளைக் கண்ணில் ஒற்றிக்கொண்டு அன்போடும், பணிவோடும் தன் தலைமீதும் வைத்துக் கொண்டார். கண்ணீர் பெருக, “என் குருநாதனின் புனித உடலைத் தொட்டு ஸேவை செய்யும் பேறு பெற்றவை இந்தக் கரங்கள்” என்று உணர்ச்சி-வசப்பட்டவர், “எனக்கு அந்தப் பேறு கிடைக்கவில்லை. நீங்கள் மிகவும் கொடுத்து வைத்தவர். என்னைவிட எவ்வளவோ பெரியவர்” என நெகிழ்ச்சியுடன் கூறியதாகக் குஞ்சு ஸ்வாமி என்னிடம் தெரிவித்தார். பின்னர், “சான்றோர் தங்களைத் தாழ்த்திக்கொண்டு, பிறரைப் பெருமைக்கு ஆளாக்குகின்றனர்! எல்லோரையும் ஆத்மாவாகவே காணும் அவர்களுக்கு அந்நியர் யார்? எல்லோரும் ஒன்றே; ஆத்மா மட்டுமே” என்று குஞ்சு ஸ்வாமி கூறினார்.

1948இல் சிவப்ரகாசம் பிள்ளை மரண வாயிலில் இருப்பதை அறிந்த பகவான் நீண்ட மௌனத்தில் ஆழ்ந்துவிட்டார். அவர் மறைந்த செய்தி வந்தபோது, சிவப்ரகாசம் சிவனோடு ஒன்றிவிட்டார் என்று பொருள்படும்படி, “சிவப்ரகாசம் சிவ ப்ரகாசமானார்” என்று பகவான் கூறினார்.

ஆம், அந்த அருமையான மனிதர், அருணாசலத்துடன் நிரந்தரமாகக் கலந்துவிட்டார்



# தாய் என்னும் தத்துவம்

'நான் யார்?' என்னும் புத்தகத்தில் "அகங்காரமின்றிச் செயல்படுபவர், ஒவ்வொரு பெண்ணையும் பராசக்தியாக – ப்ரபஞ்சத்தின் தாயாகக் காண்பார்" என்று பகவான் கூறியுள்ளார். அந்த லோகமாதா, தன் மகனை எவ்வாறு பார்த்துக்கொண்டாள் எனக் காண்போம்.

மரணானுபவத்திற்குப் பிறகு, பகவான் மதுரையில், மீனாக்ஷி அம்மன் கோயிலுக்கு அடிக்கடி செல்வார். அன்னை மீனாக்ஷியின் விக்ரஹத்தின் முன்பு மணிக்கணக்காக, அவளது கண்களைப் பார்த்த வண்ணம் அமர்ந்திருப்பார். அவர் கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் வழியும். மீனாக்ஷி என்றாலே 'மீனைப் போன்ற கண்களை உடையவள்' என்பது பொருள். (இந்து சாஸ்திரத்தில் மூன்று வித தீக்ஷைகள் கூறப்பட்டுள்ளன. அதில் ஒன்று, மீன் எவ்வாறு தன் பார்வையாலேயே குஞ்சுகளைப் பொரியும்படி செய்கின்றதோ அது போன்றது. மீனாக்ஷி என்ற பெயரின் உள்ளர்த்தம், 'கண்ணாலேயே தீக்ஷையளிக்கும் தாய்' என்பதாகும்.) கண்களாலேயே தீக்ஷையளித்து, பக்தர்களுக்கு அருளும் சக்தி, தன் மகன் வேங்கடராமனுக்கு, அன்னை மீனாக்ஷி தந்த அபூர்வமான பரிசாகும். பகவானிடம் வந்த எல்லா பக்தர்களுமே, அவருடைய முதல் பார்வையே தங்களை எவ்வாறு அகமுகமாக்கியது என்றும், அதுவரை அனுபவித்திராத ஆனந்தம், அமைதி, மௌனம் இவற்றை எவ்வாறு அனுபவித்தனர் என்றும் கூறியுள்ளனர். இதனால்தான், இறுதிவரை தனது பக்தர்களுக்கு அருள் புரியவேண்டும் என்ற நோக்கோடு, தனது கடைசி நாளிலும்கூட, தரிசனம் செய்ய பக்தர்களுக்கு அனுமதி அளிக்க வேண்டுமென வற்புறுத்தினார்.

மதுரையிலிருந்து திருவண்ணாமலைக்கு வந்தபின், பகவான் இடைவிடாத ஸஹஜ ஸமாதியில் இருந்தார். அருணாசலேச்வரர் கோயிலில், இருண்டு, ஈரமாக இருந்த பாதாளலிங்க குகையில், தொந்தரவு தரும் ஜந்துக்களுக்கு விருந்தாக, அன்ன ஆகாரமின்றி அவர் அமர்ந்திருந்தபோது பராசக்தி அருள்கூர்ந்து, முதன்முதலாக ரத்தினம்மாளை அனுப்பி வைத்தாள்



# ரத்தினம்மாள்



சமுதாயத்தால், இழிவாக எண்ணப்பட்ட இளம் தாஸி – நடன மங்கை – ரத்தினம்மாள். ஒருநாள், விஷமத்-தனமுள்ள சிறுவர்கள் சிலர், பாதாளலிங்க குகைக்குள் கற்களை விட்டெறிவதைக் கண்டார். உள்ளே சென்று பார்த்தபோது, மங்கலான ஒளி வட்டத்தின் நடுவே, ஓர் உருவம் அவர் கண்ணில் பட்டது. அந்த இளந்துறவி தன்னை எப்படி காப்பாற்றிக் கொள்வான் என்ற கவலையால், உணவையும், புதிய துணிகளையும் குகையின் வாயில் அருகே அவர் வைத்துவிட்டுச் சென்றார். ஆனால், பகவான் ஸமாதியில் மூழ்கியிருந்ததால், வைத்த பொருட்கள், வைத்தபடியே இருந்தன.

பின்னர், சேஷாத்ரி ஸ்வாமிகள், பகவானைப் பார்த்து, குகைக்கு வெளியே அவரை கொண்டு வந்தார். அவருக்கு அபிஷேகப் பாலை அளிக்குமாறு கோயில் பூஜாரியிடம் உத்தரவிட்டுச் சென்றார். பூஜாரி, அருணாசலேச்வரர் ஸந்நிதியிலிருந்து பால் எடுத்து வராமல் தனக்குப் பக்கத்தில் இருந்த அன்னை அபீதகுசாம்பாள் ஸந்நிதியிலிருந்து பால் எடுத்து வந்தார். மஞ்சள், சீயக்காய் பொடி, நெய் முதலியவற்றோடு கூடிய அந்த அபிஷேகப் பாலே, அம்பாள் அவருக்கு அளித்த ப்ரஸாதம். புற நினைவற்று ஸமாதியில் இருந்ததால், பூஜாரி, பகவானுடைய வாயைத் திறந்து, ‘தாயின் பாலை’ – உயிரைக் காக்கும் முதல் உணவை – ஊற்றினார். நினைவு வந்தபின், அவர், கோயில் வளாகத்தில் இருந்த இலுப்ப மரத்தடியில் ஸமாதியில் அமர்ந்தார். எப்போதாவதுதான் அவருக்கு புற நினைவு ஏற்பட்டது.



அருணாசலேச்வரர் கோயில்

ஒருநாள், நடன நிகழ்ச்சி ஒன்றிற்காகச் சென்றுகொண்டிருந்த ரத்தினம்மாள், வழியில் பகவான் அமர்ந்திருந்ததைப் பார்த்தார். ‘‘இந்தத் துறவிக்கு நாம் ஏதாவது உணவளிக்கும்வரை, நான் எதுவும் சாப்பிட மாட்டேன்’’ என்று தன் தாயிடம் கூறினார். பகவானை எழுப்ப அவர்கள் செய்த முயற்சி பயனற்றுப் போனதால், வாயைத் திறந்து உணவை ஊட்ட முயன்றனர். சில சமயங்களில், அவர், உணவை விழுங்குவார். மற்ற சமயங்களில் அது வாயில் அப்படியே இருக்கும். மறுதினம் வந்து அவர்கள், வாயைச் சுத்தம் செய்வார்கள். பிற்காலத்தில், ‘‘ரத்தினம்மாள் உருவில் வந்தது அன்னை பராசக்தியே’’ என்று பகவான் கூறியது மட்டுமன்றி, ‘‘அவள் மிகவும் தூயவள்’’ என்றும் சூரி நாகம்மாளிடம் கூறினார். தெய்வத்தன்மையை உணரும் சக்தி

அவளுக்கு இருந்ததால் அவ்வாறு கூறினார். பகவான் வேறு யாரைப் பற்றியும் இவ்வாறு கூறியதில்லை. லோகமாதா அவரைக் காப்பாற்றி வந்தாள். கோயிலில் இருந்து குருமூர்த்தத்திற்குச் செல்லுமுன், “நீ, என் பொருட்டு எதற்கு தூரத்திலுள்ள குருமூர்த்தத்திற்கு வரவேண்டும்?” என்று ரத்தினம்மாளிடம் பகவான் கேட்டார். பகவான் கூறியதை மதித்து அவளும், அவர் கூறியபடி நடந்துகொண்டாள்



## மீனாக்ஷி அம்மாள்

பகவான், குருமூர்த்தத்திற்குச் சென்றபின், மீனாக்ஷி அம்மாள் என்ற ஒரு மாது, அவருக்குத் தொண்டு செய்ய முற்பட்டார். வெளித்தோற்றத்தில் அரக்கியைப் போல் இருந்தபோதும், அவரது மனம், களங்கமற்ற தூய்மை-யோடிருந்தது. தினமும் கிரிவலம் வந்து, வீட்டிற்குச் சென்று, சமைத்துப் பகவானுக்கு உணவு எடுத்து வருவார். வேறு சில பெண்களையும் அவர் அழைத்து வருவார். அவர்கள் அனைவருமே பகவானுக்கு உணவு கொடுக்க விரும்பி, ஏதாவது எடுத்துக்கொண்டு வரவே, அது தேவைக்கு மிகவும் அதிகம் என பகவானுக்குத் தோன்றியது. எதையும் வீணாக்க விரும்பாத அவர், அருகிலிருந்த மாந்தோப்பில் தங்க ஆரம்பித்தார். தோப்பின் சொந்தக்காரர், பகவானையும், பழனி ஸ்வாமியையும் தவிர, வேறு யாரையும் உள்ளே அனுமதிக்காததால், மற்றவர்கள் அங்கு செல்ல இயலாமல் போய்விட்டது.

திருவண்ணாமலைக்கு வந்தபிறகு, 'பகவானுக்கு எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டிய முதல் நபர்' என்ற பெருமை மீனாக்ஷி அம்மாளுக்கே உரியது. பகவான், அந்த நிகழ்ச்சியைக் குறித்துப் பின்வருமாறு கூறியுள்ளார். "குருமூர்த்தத்தில் நான் இருந்தபோது, ஒருநாள், மீனாக்ஷி அம்மாள், ஒரு பாத்திரம் எடுத்துவந்து, அதில் தண்ணீரைக் கொதிக்க வைத்தார். சமைக்கப் போகிறார் என்று எண்ணினேன். அவர் தனது பையிலிருந்து, எண்ணெய், சீயக்காய்ப்பொடி முதலியவற்றை எடுத்து வைத்து, 'ஸ்வாமி, வாங்க, உங்களைக் குளிப்பாட்டப் போகிறேன்' என்றார். வழக்கம்போல் மௌனமாக இருந்த என் கையைப் பிடித்திழுத்து, வலுக்கட்டாயமாக உட்காரவைத்து என்னைக் குளிப்பாட்ட முற்பட்டார். என் தலையில் அவர் கை வைத்தபோது, அதில் கல்லும் மண்ணும் நிறைய இருந்தன"

என்று நகைச்சுவையோடு பகவான் கூறுவார். திருவண்ணாமலைக்கு வந்து ஒன்றரை ஆண்டுகளுக்குப்பின், அவர் ஒழுங்காகக் குளித்தது அன்றுதான். அதுவரை குளிக்காமல் இருந்ததால் உடம்பில் அழுக்கு அப்பியிருந்தது. பராசக்தியால் அனுப்பப்பட்ட மீனாக்ஷி அம்மாள், பகவானை நன்கு சுத்தமாக நீராட்டிவிட்டார்.



குரு மூர்த்தம்

குருமூர்த்தத்தில் இருக்கும்போதே, பகவான், பழனி ஸ்வாமியிடம், பிச்சைக்குப் போகும்போது, இருவரும் தனித்தனியே, அவரவர் வழியில் செல்லவேண்டுமெனக் கூறிவிட்டார். திருவண்ணாமலை வீதியில் ஒரு வீட்டின்முன் நின்றபடி பகவான், கைகளைத் தட்டுவார். அந்த ஓசை கேட்டு, வீட்டு எஜமானி, உணவு கொண்டுவந்து கொடுப்பாள். தினம்தோறும், வீடு வீடாகத் தெருத் தெருவாக, பகவான், உணவுக்காக பிச்சை எடுத்தார். எல்லாப் பெண்களிடமிருந்தும் அவர் உணவைப் பெற்றிருக்கிறார். ஜகன்மாதா, தன் மகனைக் கவனித்துக் கொண்டாள் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

* * *

# தேசூரம்மாள்



பகவான் விரூபாக்ஷ குகையில் இருந்தபோது, தேசூர் என்ற கிராமத்தில் இருந்து அகிலாண்டம்மாள் என்ற பெண்மணி வந்தார். 'அகிலாண்டம்மாள்' என்பது பெரிய பெயராக இருந்ததால், பகவானும், மற்றவர்களும் அவரை தேசூரம்மாள் என்றே அழைத்தனர். 1896ஆம் ஆண்டில், பகவான் ஸமாதியில் ஆழ்ந்திருந்த சமயம் அர்ச்சகர், அவருக்கு வாயில் பால் ஊற்றுவதை அவர் கண்டிருக்கிறார். பகவான் கண்ணைத் திறக்காமல் இருந்ததால், அவரை வணங்கி ஆசிபெறாமல் ஊருக்குத் திரும்பிவிட்டார். அந்த நினைவு பசுமையாக இருந்ததால் ஏழு ஆண்டுகளுக்குப் பின் மீண்டும் திருவண்ணாமலைக்கு வந்தார். மிகுந்த பக்தியுடன் கூடிய அவர், பகவானுக்கும், சேஷாத்ரி ஸ்வாமிகள், போளூரைச் சேர்ந்த ஸ்வாமி விட்டோபா முதலியோருக்கும், மற்ற ஸாதுக்களுக்கும் உணவளிப்பார்.

1903ஆம் ஆண்டில் வந்தபோது, மலை அடிவாரத்தில் தேசூரம்மாள் பூப்பறித்துக் கொண்டிருந்தார். விரூபாக்ஷ குகைக்குக் கீழே இருந்த ஆலமர குகைக்கு, ஒரு கூட்டம் சென்றுகொண்டிருப்பதைப் பார்த்தவுடன், "நீங்கள் அனைவரும் எங்கே போகிறீர்கள்?" என்று வினவினார். "அங்கே ஒரு இளந்துறவி இருக்கிறார். அவர் பேசுவதில்லை; அசைவது கூட இல்லை. ஆனால், அங்கு பேரமைதி நிலவுகிறது. இறையருளும் நிறைந்திருக்கிறது" என்று அவர்கள் பதிலிறுத்தனர். தேசூரம்மாளும் குகைக்குச் சென்று அங்கு பகவான் அமர்ந்திருப்பதைக் கண்டார். பிற்காலத்தில் அந்தத் துறவியைப் பற்றி அம்மையார் கூறும்போது, "அவர் குளிக்காததால் புழுதி படிந்த உடம்போடு காணப்பட்டார் எனினும், அவரது சரீரம் பொன்னைப்போல் ஒளி வீசியது.

எலும்புகள் வெளியே தெரியுமளவுக்கு மெலிந்து காணப்பட்ட அந்தத் துறவியைப் பார்த்தபோது என் இதயம் உருகியது; கண்களில் நீர் ததும்பியது. அப்போது, அந்த பால்யத் துறவி கண்ணைத் திறந்து, என்மீது தன்பார்வையைப் பதித்தார். அந்தக் கணத்திலேயே நான் அவருக்கு அடிமையானேன். 'வாழ்நாள் முழுவதும் இந்த ஞானிக்கு உணவளிக்க வேண்டும்' என்று ப்ரதிக்ஞை செய்துகொண்டேன்'' என்று கூறியுள்ளார். பகவான் விரூபாக்ஷ குகைக்கு சென்றபோது, அவருக்கு, அங்கே உணவளித்தார். பகவான் தனியாகச் சாப்பிடுவது அரிது. அதனால் உடனிருந்த பழனி ஸ்வாமி, பெருமாள் ஸ்வாமி போன்றோருக்கும் தேசூரம்மாள் உணவு எடுத்து வருவார். அதற்கு முன் அவர்கள் பிச்சை எடுத்து உண்பார்கள். அன்னை தேசூரம்மாள் வந்தபிறகு பகவானுக்கு மதிய உணவிற்குப் பஞ்சமேயில்லை. பகவானுடைய சந்நிதி அவரை வெகுவாக ஈர்த்ததால், ஒருநாள் கூடத் தவறாமல், உணவு எடுத்து வருவார்.

பின்னர், எச்சம்மாள், முதலியார் பாட்டி என்ற பெண்மணிகளும் பகவானுக்கு ஆகாரம் கொடுக்கத் துவங்கினர். அதனால், தான் வரவேண்டிய அவசியமில்லை என்று தேசூரம்மாளுக்குத் தோன்றியதால், தேசூரிலேயே தங்கி விட்டார். 1914இல் அங்கு ரமண மையம் ஒன்றை ஆரம்பித்தார். **ரமணானந்த மடாலயம்** என்று அது அழைக்கப்பட்டது. ஆழ்ந்த பக்தி இருந்ததால், அவர், பகவானுடைய உபதேசங்களைக் கடைப்பிடித்தவாறு அங்கேயே இருந்ததோடு, தான் அனுபவித்த பல விஷயங்களைப் பிறருக்கும் எடுத்துரைத்துக் கொண்டிருந்தார்.

விரூபாக்ஷ குகையிலுள்ள பக்தர்கள் யாருக்காவது உடல் நலம் குன்றினால், அவர்களைத் தேசூருக்கு அழைத்துவந்து, சிகிச்சையளித்து கவனித்துக் கொள்வார்.

பூரண குணம் அடைந்தபின், தானே அவர்களை விரூபாக்ஷ குகையில் கொண்டு விடுவார்.

“அருணாசலத்திற்கு தேசூரம்மாள் வந்தபோதெல்லாம், பகவானுக்கு உணவு அளிப்பதோடுகூட எங்களுக்கும் ஆகாரம் தருவார்” என்று குஞ்சு ஸ்வாமி என்னிடம் கூறியுள்ளார். தேசூரம்மாளின் நடவடிக்கைகள் பகவானுக்கு மிகுந்த திருப்தியளித்தன. “பிறருடன் உணவைச் சமமாகப் பகிர்ந்து உண்ணும் ஒரேதுறவி பகவான் மட்டுமே” என்று தேசூரம்மாள் கூறுவதுண்டு. தன்னுடன் இருப்பவர்களைத் தவிர, நாய்கள், குரங்குகள், பக்ஷிகள் முதலியவைகளுக்கும் அவர் சமபங்கு அளிப்பதை அவர் கண்டிருக்கிறார். ‘நொண்டி’ என்ற குரங்கைப் பற்றி ஒருசுவையான நிகழ்ச்சியை அவர் சொல்லியுள்ளார். பகவானுக்கு அருகில்தான் ‘நொண்டி’ எப்போதும் அமரும். ஒருநாள், அவர் பகவானுக்கு உணவு பரிமாறிக் கொண்டிருந்தபோது, ‘நொண்டி’ தேசூரம்மாளைப் பார்த்து பல்லைக் காட்டி உறுமியது. பகவான் ‘நொண்டி’யைக் கடிந்துகொண்டார். “ஏய்! சும்மா இரு. அந்த அம்மாவும் நமக்குச் சொந்தம். நம்ம குடும்பத்தைச் சேர்ந்தவர்தான்” என்று பகவான் கூறியபின், அவரை ஏற்றுக்கொண்டு அமைதியுற்றது.

தனக்கு உணவு அளித்தவர்களுக்கெல்லாம் நன்றி சொல்வதோடு பகவான் நின்றுவிடவில்லை. பந்தங்களில் இருந்து விடுவித்து, முக்தியளிக்க வல்ல தூய ஞானத்தை அவர்களோடு பகிர்ந்து கொண்டார்.

ஒருசமயம், தேசூரம்மாள், ஸ்கந்தாச்ரமம் வந்திருந்த-போது, ஒரு சாது, அவரிடம், “இன்று பௌர்ணமி. தீக்ஷை பெறுவதற்கு உகந்த, சக்தி வாய்ந்த நாள். பகவானோ பூரணஞானி. அதனால், ‘இன்று தீக்ஷை அளிக்கவேண்டும்’ என்று அவரிடம் ப்ரார்த்தித்துக் கொள்” என்று கூறினார்.



ஸ்கந்தாச்ரமத்தில் ஸ்ரீபகவான்

சாதுவால் தூண்டப்பட்ட அந்த அம்மாள், அபூர்வமாகவே தீக்ஷையளிக்கும் பகவானை ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்த உடன் அவர், "தேசூரம்மா! உனக்கு என்ன வேண்டும்?" என வினவினார். "எனக்கு மந்திர தீக்ஷை தரவேண்டும் பகவானே" என்று அவர் கூறியவுடன், "ஓ! மந்திரம் வேண்டுமா?" என பதில் கூறிய பகவான், ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியபடி கீழே அமர்ந்து கொண்டார். " 'உன்னை – (ஆத்மாவை) விடாது இரு' என்று உபதேசித்ததோடு பகவான் போய்விடவில்லை. தனது கூரிய மௌனமான பார்வையால், என்னைக் கிட்டத்தட்ட ஒருமணிநேரத்திற்கு ஊடுருவிப் பார்த்தார். ஆத்ம அனுபவத்தை விடாமல் இருக்கத் தேவையான ஞானத்தை உள்ளத்தில் உணர்த்தவும் செய்தார்" என்று தேசூரம்மாள் கூறியுள்ளார்.

பகவான் மலையிலிருந்து இறங்கி, கீழே ரமணாச்ரமத்திற்கு வந்த பிறகும்கூட அவர் ஆகாரம் கொண்டு வருவதை நிறுத்தவில்லை. "தேசூரம்மா! இங்கேயே வேண்டிய உணவு தாராளமாக இருக்கிறதே!" என்று பகவான் அவரிடம் சொன்னபோது, "நான் உங்களுக்கு உணவளிக்க ஆசைப்படுகிறேன்" என்று பதிலளித்தார். "அப்படியானால், நீ வரும்போது மளிகை சாமான்களை எடுத்து வந்து

சமையலறையில் கொடுத்துவிடு. அவர்கள் சமைத்துத் தருவதை நாம் பகிர்ந்து உண்போம்'' என்று பகவான் கூறினார். அப்போது முதல், வரும்போதெல்லாம் அரிசியோ, பருப்போ எடுத்து வந்து அடுக்களையில் சேர்த்துவிடுவார்.

பகவானின் இறுதி நாட்களில், மரணத்தை எதிர்-பார்த்திருந்த சமயத்தில், தேசூரம்மாளுக்கு தொண்ணூறு வயது ஆகியிருந்தது; மிகவும் பலவீனமாக இருந்தார். இருந்தும், கடைசியாக ஒருமுறை தரிசித்துவிட வேண்டுமென்ற ஆர்வத்தில், தற்போது 'நிர்வாண அறை' என்றழைக்கப்படும் அறையில் வந்து பகவானை பார்க்க முயற்சி செய்தார். ஆச்ரம நிர்வாகம் முழுவதுமே மாறியிருந்ததால், அவரை யாருக்கும் அடையாளமே தெரியவில்லை. அவர், அறையினுள் செல்ல அனுமதி அளிக்கப்படவில்லை. நல்லவேளையாக குஞ்சு ஸ்வாமி, அவரைப் புரிந்துகொண்டு, பகவானிடமும் தகவல் தெரிவித்தார். உடனே பகவான், "தேசூரம்மாவா!'' என்று உரக்கக் கேட்டுவிட்டு, "அவளை இங்குவரச் சொல்லுங்கள். உள்ளே கூட்டி வாருங்கள்'' என்று கூறினார். அறையினுள் வந்து, பகவானுடைய உடல் நிலையைப் பார்த்த தேசூரம்மாள், தாங்கமுடியாத துயரத்தால் அழ ஆரம்பித்தார். பகவான் அவரைச் சமாதானம் செய்வதற்காக, "அழிந்து போகக்கூடிய இந்த தேஹத்துக்காக ஏன் அழுகிறாய்? நான் எப்பொழுதும் உன் பகவான்தானே'' என்றார்.

விவேகத்துடன் கூடிய, பகவானின் அந்தச் சொற்கள் தேசூரம்மாளுக்காக மட்டும் கூறப்பட்டவை அல்ல. 'அன்னை, தந்தை, குரு, தெய்வம் எல்லாமே பகவான்' என்று எண்ணுபவர்களையெல்லாம் கூட எப்போதும் காப்பாற்றுபவர் அவர்தானே!



# எச்சம்மாள்



திருவண்ணாமலைக்கு அருகிலேயே, தன் கணவர், குழந்தைகள் இவர்களுடன் எச்சம்மாள் வாழ்ந்து வந்தார். ஒருநாள் இரவு, அவரது கனவில் இளந்துறவி ஒருவர், கோவணாண்டியாக, மழித்த தலையுடன், அவளுக்குப் புரியாத எதையோ கூறிச் சென்றார். அதன் பிறகு, சில தினங்களுக்குள், எச்சம்மாளின் கணவர், மகன், இரண்டு பெண்களில் ஒருத்தி இவர்கள் இறந்து போனார்கள். சில நாட்களுக்குப்பின், கனவில் மீண்டும் தோன்றிய அதே இளைஞன், ஏதோ ஒரு ஸம்ஸ்கிருத மந்திரத்தைக் கூறிச் சென்றான். அதுவும் அவருக்குப் புரியவில்லை. கனவின் அர்த்தத்தை, எடுத்துரைப்பவர்களிடம் அவர் விளக்கம் கேட்டபோது, “பகவான் உனக்கு அருள் புரிகின்றார்” என்று மட்டுமே சொன்னார்கள். ஒன்றுமே புரியாத நிலையில், எஞ்சியிருந்த ஒரே மகளுடன் தன் சொந்த கிராமத்திற்குச் செல்லத் தீர்மானித்தார். அவர் கிளம்பிப் போகும்போது, “தயவுகூர்ந்து, மலைக்குத் திரும்பி, யாருக்கும் தெரியாமல் வாழ். உன் பிறவிகளை நீ வாழ்ந்து முடித்துவிட்டாய். பாக்கியிருந்த மூன்று ஜன்மங்களும் இத்துடன் முடிந்துவிட்டன” என்று அதே இளைஞன், மூன்றாம் முறையாகக் கனவில் தோன்றிக் கூறி மறைந்தான். இந்த மூன்று கனவுகள் மூலம், தன்னிடம் வருவதற்கு முன்னரே எச்சம்மாளின் மூன்று பிறவிகளை இல்லாமல் செய்துவிட்டார் பகவான்.

பத்து அல்லது பதினோரு வயதே ஆகியிருந்த அவரது இரண்டாவது மகளும், கிராமத்திற்குச் சென்றபோது மரணத்தைத் தழுவினார். எச்சம்மாளால் துயரச் சுமையைத் தாங்கமுடியாமல் தவித்தபோது, அவரது உறவினர்கள் சிலர், தீர்த்த யாத்திரை செய்யுமாறு அறிவுரை அளித்தனர். அவர்

அமைதியைத் தேடி, வட இந்தியாவிற்குப் பயணமானார். அங்கு சாதுக்களைச் சந்தித்து, அவர்களுக்கு ஸேவை செய்தும், உணவு படைத்தும் காலத்தைத் தள்ளினார். அதில் ஒரு சாது, அவருக்கு அஷ்டாங்க யோக தீக்ஷையளித்தார். மந்திரம் ஒன்றையும் கொடுத்து, மூக்கு நுனியில் மனதைக் குவித்துத் தியானிக்கும்படி உபதேசித்தார். என்ன செய்தும், பயனேதும் கிடைக்கவில்லை. துக்கத்தின் சுமை அவர் மனதை வெகுவாக அழுத்தியது. மீண்டும் கிராமத்துக்கு அவர் வந்தபோது, "திருவண்ணாமலையில் ஒரு இளந்துறவி இருப்பதாகவும், அவர் மௌனமாக இருந்தாலும், அவர் அருகிலேயே இருந்து பணிவிடை செய்தால், அவரருளைப் பெற வாய்ப்பு உள்ளது" என்றும் ஒரு உறவினர் கூறவும், மறுநாளே திருவண்ணாமலைக்குப் புறப்பட்டார். 1906ஆம் ஆண்டு, பகவான் விரூபாக்ஷ குகையில் இருந்த சமயம். தன்னைத் தரிசிக்க வந்த எச்சம்மாளை, ஏறத்தாழ ஒருமணி நேரம் கூர்ந்து நோக்கினார். கண்களில் தாரை தாரையாகக் கண்ணீர் ஒழுக, பகவான்முன் நின்றார் எச்சம்மாள். பகவானுடைய கண்களிலும் கண்ணீர் பெருகிற்று. இருவரும் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை என்றாலும், எச்சம்மாள், தன்னுள் எல்லையற்ற சக்தி ஒன்று பரவுவதையும், அந்த இனம் புரியாத சக்தியின் பிடியில், தான் அசையவும் முடியவில்லை என்பதையும் உணர்ந்தார். அதிசயிக்கத்தக்க முறையில் அவரது துயரம் மாயமாக மறைந்தது. பகவானுடைய அருள் தன்னை ஆட்கொண்டதைப் புரிந்து கொண்டபோது, அவருக்குத் தன் வாழ்நாள் முழுவதும் உணவளிக்க வேண்டுமென்ற விரதம் பூண்டார்.

நாள்தோறும் பகவானுக்குப் பணிவிடைகள் செய்தார். ஆயினும், உலகப்பற்று முழுவதுமாக நீங்காத நிலையில், பகவானுடைய அனுமதியோடு, ஒரு பெண்ணைத் தத்தெடுத்து வளர்த்து வந்தார். 'செல்லம்மாள்' என்று அழைக்கப்பட்ட

அந்தப் பெண்ணிடம் பகவானுக்கு உணவு கொடுத்தனுப்புவார் எச்சம்மாள். ஒருநாள், உணவு எடுத்துச் செல்லும்போது வடமொழியில் எழுதப்பட்டிருந்த காகிதத்தைச் செல்லம்மாள் பார்த்தாள். பகவானிடம் அதை எடுத்துச் சென்றாள். உணவு அருந்த வேண்டிய வேளை வந்தபோது, “இல்லை, இல்லை. ஏகாதசி விரதம் அனுஷ்டிப்பதால் ஏகாதசியன்று நான் சாப்பிடமாட்டேன். யாரும் உணவருந்தக் கூடாதென்று என் தாய் கூறியிருக்கிறாள்” என்று உணவு அருந்த மறுத்தாள். அதற்குப் பதிலேதும் கூறாமல், செல்லம்மாளிடம், “கையில் என்ன வைத்திருக்கிறாய்?” என்று பகவான் சாதாரணமாகக் கேட்டார். அவள் காகிதத்தைத் தந்தபோது, அதில், பாகவத ஸ்லோகம் ஒன்று ஸம்ஸ்கிருதத்தில் எழுதப்பட்டிருப்பதைக் கண்டார். அதன் பொருள்: “சாது ஸங்கத்தை விரும்பும் ஒருவருக்கு இத்தகைய ஒழுக்கங்கள் எல்லாம் எதற்காக? குளிர்ந்த தென்றல் காற்று வீசும்போது விசிறியால் என்ன பயன்? ஸத்ஸங்கத்தில் இருக்கும்போது இம்மாதிரியான சடங்குகள் எதையும் கடைப்பிடிக்கத் தேவையில்லை” என்பதாகும். செல்லம்மாளிடம் அந்த ஸ்லோகத்தை விளக்கிக் கூறி, இனிமையாகப் பேசி, பகவான், அவளைச் சாப்பிடச் செய்தார். சிறிது காலத்துக்குப் பின் அவளுக்குத் திருமணம் ஆகி, ஒரு மகனும் பிறந்தான். ரமணன் என்றழைக்கப்பட்ட தனது பேரனை, எச்சம்மாள், பகவான் மடியில் வைத்து, ஆசீர்வதிக்கும்படி கேட்டுக்கொண்டாள். துரதிருஷ்டவசமாகச் செல்லம்மாள், சிறிது காலத்திற்குப் பின் இறைவனடி சேர்ந்தாள். அந்த இழப்பு, எச்சம்மாளைக் கடுமையாகப் பாதித்தபோதும், பகவானுடைய தொடர்பின் காரணமாக, அவரால் மனதைத் திடப்படுத்திக்கொள்ள முடிந்தது.

ஒருநாள் பகவான், “தியானம் மட்டும் பண்ணு” என்று கூறினார். எச்சம்மாள், அஷ்டாங்க யோக முறைப்படி தியானம் செய்து வந்தார். அப்போது, “பகவானே! தியானம்

செய்யும்போது எனக்குப் பலவிதமான ஒளிகள் தெரிகின்றன'' என்று அவர் கூறினார். பகவான், தியானம் செய்யும் முறையை போதித்து, ''கண்ணால் பார்க்கப்படும் எந்த ஒளியும் உனது உண்மையான லக்ஷ்யம் அன்று. உன்னை அறிந்து கொள்வது மட்டுமே உன் குறிக்கோள். வேறெதுவும் அன்று'' என்று வழிகாட்டினார். பின் பகவானின் வழிகாட்டுதலோடு அவர் தியானம் செய்து, ஆத்ம விசாரத்தையும் கடைப்பிடித்தார். அவ்வாறிருந்தும், அவருக்கு வாசனைகளை விடுவது கடினமாகவே இருந்தது. ஒருமுறை, ''லக்ஷம் வில்வ தளங்களால், பகவானது படத்துக்கு அர்ச்சனை செய்வேன்'' என்ற விரதத்தை எடுத்துக் கொண்டார். ஐம்பதாயிரம் இலைகளையே அவரால் சேகரிக்க முடிந்தது. ''லக்ஷம் வில்வ இலைகளால் அர்ச்சிக்க விரும்பினேன். ஐம்பதாயிரம்தான் கிடைத்தது'' என்று தன் குறையை பகவானிடம் தெரிவித்தபோது, ''எல்லா மரங்களிலும் பார்த்தாயா?'' என்று அவர் கேட்டார். ''ஆமாம், பகவானே! எல்லா இடத்திலும் தேடியும் இவ்வளவுதான் கிடைத்தது'' என்று அலுத்துக்கொண்டு அவர் கூறியபோது பகவானின் முகபாவம் கடுமையாக மாறியது. அப்படியானால், தேவையான அளவு உன் சதையைக் கிள்ளிக்கிள்ளியே அர்ச்சனை செய்யலாமே'' என்று கூறினார். பகவான் தன்னைக் கேலி செய்வதாகத்தான் எச்சம்மாள் எண்ணினார். ''என் தேஹத்தை எப்படி கிள்ளிக் கொள்வது? வலிக்குமே பகவானே'' என்று அவள் பதில் கூறியபோது, அவளைப் பகவான் முறைத்துப் பார்த்தார். ''நீ மரத்திலிருந்து இலையைக் கிள்ளும்போது அதற்கு மட்டும் வலிக்காதோ?'' என்று பகவான் கேட்ட உடன், ''அது எனக்கு எப்படித் தெரியும்?'' என்று எச்சம்மாளின் பதில் வந்தது. பகவான் உடனே, ''உன் தேஹத்தைக் கிள்ளிக் கொண்டால் வலிக்கும் என்பதைத் தெரிந்துகொண்ட உன்னால், மரத்தின் இலைகளைக் கிள்ளினால், அதற்கும் வலிக்கும் என்பதை ஏன்

உணர்ந்து கொள்ள முடியவில்லை? நான் சொல்லித்தான் தெரிய வேண்டுமோ?" என்று மனதில் சுருக்கெனத் தைக்கும் விதத்தில் விடையளித்தார். அது எச்சம்மாளை அடியோடு மாற்றிவிட்டது.

பகவான் ரமணாச்ரமத்திற்கு வந்த பிறகும் கூட எச்சம்மாள் பகவானுக்கு உணவு சமைத்துக் கொண்டுவந்து கொடுப்பார். வழக்கம்போல், ஒருநாள் அவர் பகவானுக்கு என்று உணவு எடுத்து வந்தார். அன்று, அவருடைய, அந்த ஸேவை பகவானுக்கு இனி தேவையில்லை என்று ஆச்ரம அலுவலகத்திலிருந்து அறிவிக்கப்பட்டது. மிகுந்த ஏமாற்றத்திற்கு உள்ளான எச்சம்மாள், பகவானிடம் சென்று, "பகவானே! எனக்கோ வயதாகிவிட்டது. உங்களுக்குத் தொண்டு செய்வதற்காக, என்னுடையதென்று இருந்த அனைத்தையும் துறந்துவிட்டேன். பதிலாக எனக்குத் தரும் பரிசு இதுதானா? நீங்களும் அருணாசலத்தைப் போன்று, கல்லாகி விட்டீர்களா என்ன? இனிமேல் திரும்பிப் போவதைத் தவிர நான் வேறு என்ன செய்ய முடியும்?" என்று கூறிவிட்டு, நொந்த உள்ளத்தோடு வீட்டிற்குப் போய்விட்டார். ஆச்ரமத்தில், சாப்பாட்டிற்கான மணி அடிக்கப்பட்டது. பகவான், வழக்கம்போல், சோபாவில் அமர்ந்திருந்தார். அவர், எழுந்து உணவுசாலைக்குச் செல்வார் என எதிர்பார்த்து எல்லோரும் காத்திருந்தார்கள். ஐந்து நிமிடம், பத்து நிமிடம், பதினைந்து நிமிடம் என்று மணி ஓடியதேயன்றி பகவான் அசையவேயில்லை. உண்பதற்குப் போகும் எண்ணமே, அவருக்கு இருந்ததாகத் தோன்றவில்லை. சிரித்தபடி அமர்ந்திருந்த அவரைப் பார்த்த புத்திசாலித் தொண்டன் ஒருவனுக்கு விஷயம் என்னவென்று விளங்கிவிட்டது. அவன் ஓடிச்சென்று அலுவலகத்தில் நிலைமையை எடுத்துரைத்தான். உடனே அங்குள்ளவர்கள், எச்சம்மாள் வீட்டிற்கு ஓடிப்போய் மன்னிக்குமாறு வேண்டினர். அவர்களோடு எச்சம்மாள்

ஆச்ரமத்திற்கு வர மறுக்கவே, “நீங்கள் வராவிட்டால் இன்று பகவான் சாப்பிடவே மாட்டார்” என்று கூறி கெஞ்சினார்கள். அதைக் கேட்டதுதான் தாமதம், அவர் உடனே ஆச்ரமத்திற்கு ஓடோடி வந்துவிட்டார். மற்றொரு தினம், தன்னால் வரமுடியாத நிலையில், வேறு ஒருவரிடம் உணவை அனுப்பி இருந்தார். சமையல் அறையில் இருந்த அதைப் பகவானுக்குப் பரிமாற மறந்துவிட்டனர். சாப்பாட்டுக் கூடத்தில், எல்லோருக்கும் பரிமாறிய பின்னரே பகவானுக்குப் பரிமாறுவது வழக்கம். அதன்பின், உண்ண அனுமதியளிப்பது போன்று பகவான் தலையை அசைத்து சமிக்ஞை செய்வார். அதன் பின்னரே எல்லோரும் உண்ண ஆரம்பிப்பார்கள்.



ஸ்ரீபகவான் - பழைய உணவு சாலையில் மதிய உணவிற்கு பின்

வழக்கம்போல் அன்றும், பகவான் உட்பட அனைவருக்கும் உணவு வழங்கப்பட்டது. வழக்கம்போல் பகவான் தலையை அசைக்காமல், அன்று மௌனமாக அமர்ந்திருந்தார். அவர் அவ்வாறிருந்ததைக் கண்ட அந்த புத்திசாலித் தொண்டன். சமையல்காரர்களிடம், “எச்சம்மாள் அனுப்பியுள்ளதைப் பகவானுக்குப் போட்டீர்களா?” என்று கேட்டார். அவர்கள், “இல்லை, மறந்து போனோம்” என்று

விடையளித்தனர். உடனே அந்த உணவு பரிமாறப்பட்டது. அதன் பின்னரே பகவான் சாப்பிடத் துவங்கினார்.

வாழ்க்கையின் இறுதியில், இரு தினங்களுக்கு எச்சம்மாள் நினைவற்றுக் கிடந்தார். முதல்நாள் அவருக்கு மூச்சுத் திணறல் இருந்தது. அன்று சோபாவில் அமர்ந்திருந்த பகவான், ஐந்து மணி நேரம் ஆழ்ந்த ஸமாதியில் இருந்தார். அவ்வாறு அவர் அமர்ந்திருந்ததை, அதுவரை பார்த்ததில்லை என்று அநேக பக்தர்கள் கூறினர். அதே சமயத்தில்தான் எச்சம்மாள் மூச்சுவிட முடியாமல் திணறிக்கொண்டிருந்தார் என்ற விபரம் பின்னர்தான் தெரிந்தது. அதன் பின்னர் அவர் மயக்க நிலைக்குச் சென்றுவிட்டதாக மருத்துவர்கள் கூறினர். பகவானது அருளால், அதற்கு முன்னரே, அவர் ஆத்மானுபவத்தில் மூழ்கியிருந்தார். இறுதி நாளன்று, சிலபெண்கள் அவரைச் சோதிக்க எண்ணினர். உரத்த குரலில், “பகவானுக்கு இன்னும் சாப்பாடு போய்ச் சேரவில்லை” என்று ஒருத்தி கூறியதுதான் தாமதம்; பேசமுடியாத நிலையிலிருந்த அவர் கண்களாலேயே, “என்னவாயிற்று?” என வினவினார். “இல்லை, இல்லை. விளையாட்டுக்குச் சொன்னோம். சாப்பாடு அனுப்பியாகிவிட்டது” என்ற பதில் அவர்களிடமிருந்து வந்தபோது, அமைதியான புன்னகையோடு உடலை உகுத்தார். செய்தியறிந்த பகவான், “எச்சம்மாள் தன் பாரத்தை முழுவதும் இறக்கிவிட்டாள். என் பாரம்தான் இன்னும் உள்ளது” என்று அழகான விளக்கம் தந்தார்.



# முதலியார் பாட்டி



முதலியார் பாட்டி என்ற அருமையான பெண்மணி, கிராமத்தில், தனது மகன், மருமகள் இவர்களோடு வாழ்ந்துகொண்டு, அங்கிருந்த சாது ஒருவருக்குப் பணிவிடை செய்து வந்தார். சாது இறக்கும் தருவாயில், "உங்களுக்குப் பிறகு நாங்கள் என்ன செய்வது?" என்று அவரிடமே வினவினார். அவர், "அருணாசலத்திற்குச் செல்லுங்கள். அங்கு ஒரு ஞானி இருக்கிறார். அவருக்குத் தொண்டு செய்யுங்கள். உங்கள் வாழ்க்கைப் பயனை நீங்கள் பெறுவீர்கள்" எனக் கூறினார். பகவானிடம் வரும்போதே அவர் வயது முதிர்ந்தவராகத்தான் இருந்தார். 1910ஆம் ஆண்டில் விரூபாக்ஷ குகையில் பகவானைப் பார்த்தார்.

முதல்முறை அவர், முதலியார் பாட்டியை க்ஷண நேரம் நோக்கியபோதே பாட்டிக்கு ஆனந்தமளிக்கும் ஆன்மீக அனுபவம் ஏற்பட்டது. அந்த நொடியிலேயே, வாழ்நாள் முழுவதும் பகவானுக்கு உணவளிக்க உறுதி பூண்டார். இயன்றபோதெல்லாம், கிராமத்திலிருந்து பணமோ, மளிகை சாமான்களோ எடுத்து வருவார். பகவானுக்குத் தொண்டு புரிவதற்காகத் தன் சொத்துக்களை எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக விற்றுவிட்டார். கையில் சொத்து எதுவும் இல்லாமல் ஆனபோது, சந்தையில் எள்ளை வாங்கி, எண்ணெயாக ஆட்டிச் சந்தையிலேயே விற்று, வந்த சொற்பமான லாபத்தையும் பகவானுக்கு சமைப்பதற்குத் தேவையான மளிகை சாமான்கள் வாங்கவே செலவு செய்தார்.

பகவான் ஒருமுறை, "எனக்கு முதலியார் பாட்டியிடமும், இராமநாத ப்ரம்மச்சாரியிடமும்தான் பயம்" என்று கூறினார். அது என்ன பயம்? உண்மையான பயம் அன்று; சுயநலமற்ற

ஸேவைக்கும், பூரண சரணாகதிக்கும், எல்லையில்லா பக்திக்கும் பகவான் அடிமையானார்; அவ்வளவே. இவ்விருவரும் அந்தப் பட்டியலில் இடம் பெற்றிருந்தனர். பாட்டியின் ஆழ்ந்த பக்தியை எடுத்துக்காட்டக்கூடிய பல நிகழ்ச்சிகள் அவரது வாழ்க்கையில் நடந்தன. மலையிலிருந்து இறங்கிக் கீழே ரமணாச்ரமத்துக்குப் பகவான் வந்த பின்னரும்கூட அவருக்குத் தன் கையாலேயே உணவு பரிமாற வேண்டுமென வற்புறுத்துவார். வயதானதால் கண்பார்வை மிகவும் மங்கிப் போயிருந்தது.

ஒருநாள் பகவானுக்குப் பரிமாறும்போது, அவருக்காகப் படைக்கப்பட்டிருந்த இலையைக் காலால் மிதித்துவிட்டார் பாட்டி. அருகிலிருந்த ஒரு தொண்டர் அவரை ஏசினார். “ஏய்! உனக்குக் கண்ணோ தெரியவில்லை. ஏன் வருகிறாய்? பகவானைப் பார்க்க முடியாதபோது, மற்றவர்கள் உயிரை ஏன் வாங்குகிறாய்?” என்று கூறியபோது, பாட்டி, “நான் அவரைப் பார்க்கமுடியவில்லை என்றால் என்ன? அவர் என்னைப் பார்க்கிறார் அவர் அருட்பார்வை என்மீது விழுகிறது; அது ஒன்றே போதும்” எனச் சூடாகப் பதிலிறுத்தார்.

பகவானுக்கு முதல்முறை அறுவை சிகிச்சையானபின், அவர் உடல் நலம் குன்றத் துவங்கியபோது, அவரை முதலியார் பாட்டி காண விரும்பினார். கண்பார்வை முழுவதும் அற்றுப் போன நிலையிலும் பகவானைப் பார்க்க வேண்டுமெனப் பிடிவாதம் பிடித்தார். பாட்டியைக் கூடத்திற்கு அழைத்து வந்தபோது, கண்களைச் சுருக்கி மிகவும் கஷ்டப்பட்டுப் பார்க்க யத்தனித்தார். பகவான் அவரைச் சமாதானம் செய்யும் விதத்தில், “பாட்டி! நான் நன்றாகத்தான் இருக்கிறேன். என் உடம்பும் நன்றாக உள்ளது” என்று கூறியது காதில் விழுந்தபோதும் அவருக்கு, முழு திருப்தி வரவில்லை. அறையின் வாசலில் வந்து நின்றுகொண்டார்.

பகவான் வெளியே வந்தபோது, “பகவானே! நில்லுங்கள்” என்று கூறி அவரைத் தலையிலிருந்து கால்வரை தனது கைகளால் தடவிப் பார்த்தார். முதலியார் பாட்டிக்கு மட்டுமே அவ்வாறு செய்ய பகவான் அனுமதி தந்தார். வேறு எந்தப் பெண்ணுக்கும் தொட அனுமதியில்லை. இதயம் குளிர, மனக்கண்ணால் தொட்டுப் பார்த்தபின், பகவான் அவரிடம், “இப்போது திருப்திதானே?” என்று கேட்டார்.

குறிப்பிடத்தக்க இந்தப் பெண்மணி, ரமணாச்ரமத்திற்கு அருகில், ரமண நகர் என்னும் பகுதியில் தன் கடைசி நாட்களைக் கழித்தார். பாட்டியையும், அவர் உடல் நலத்தையும் கவனித்துக் கொள்ள, பகவான், குஞ்சு ஸ்வாமி, விஸ்வநாதஸ்வாமி, சூரி நாகம்மாள் இவர்களை அனுப்பி வைத்தார். அவர்கள் ரமண நகரில் அவருக்கென ஒரு குடிசையை அமைத்தனர். பகவான் தினமும் அவரைப் பற்றி விசாரிப்பார். 1949ஆம் ஆண்டில் முதலியார் பாட்டிக்கு மிகவும் வயதாகிவிட்டது. அத்துடன் கண்பார்வையும் போய், மருமகளையும் இழந்திருந்தார்.

அந்த நிலையிலும் பகவானுக்குச் சமைப்பதை அவர் நிறுத்தவில்லை. அவரது வாழ்க்கைக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்ட அந்தக் கடைசி நாளிலும் பகவானுக்காகச் சமையல் செய்து, அது அவரிடம் எடுத்துச் செல்லப்பட்டதா என்பதையும் உறுதி செய்துகொண்டார். பகவான், தான் அனுப்பும் உணவை உட்கொண்டபின், தனக்குக் கண்டிப்பாகத் தகவல் தெரிவிக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார். விரும்பிய செய்தி வந்தவுடன் பேரானந்தத்தோடு உயிரை நீத்தார்.

சேஷாத்ரி ஸ்வாமிகள், அன்னை அழகம்மாள் போன்ற, முக்தியடைந்தவர்களுக்கு, முன்னர் பகவான் செய்த விதத்திலேயே முதலியார் பாட்டியையும் பூமியில் புதைத்து ஸமாதி வைக்கவேண்டும் என்று குஞ்சு ஸ்வாமி

முதலியோருக்கு ஏற்கனவே உத்தரவிட்டிருந்தார் பகவான். முன்பொரு நாள் - எச்சம்மாள் இறந்துபோன அன்று – பகவான், "இன்னும், முதலியார் பாட்டி பாக்கி இருக்கிறாள்" என்று குறிப்பிட்டிருந்தார். முதலியார் பாட்டி மறைந்த அன்று, "என் தோள்களில் சுமந்த பெரிய பொறுப்பு அகற்றப்பட்டுவிட்டது" என்று பகவான் உரைத்தார்



மருமகளுடன் முதலியார் பாட்டி

ஜகன்மாதா, அன்னை அழகம்மாள் உருவில் வந்து, பகவானுக்கு உடம்பைத் தந்தார். ரத்தினம்மாள், மீனாக்ஷி அம்மாள், கீரைப்பாட்டி, தேசூரம்மாள், எச்சம்மாள், முதலியார் பாட்டி இவர்கள் அனைவரது உருவிலும் வந்து, பராசக்தி அந்த உடம்பைப் பேணி காத்தாள். பகவானும், தனது நன்றிக்கடனைச் செலுத்தும் விதமாக, அவர்களுக்கெல்லாம்

முக்தியளித்தார். முதலியார் பாட்டி இறைவனடி சேர்ந்த சில மாதங்களிலேயே பகவானும் தன் உடலை நீத்தார்.



# காவ்யகண்ட கணபதி முனி



19-ஆம் நூற்றாண்டின் இறுதி; வங்காளத்தில் உள்ள நவத்வீபம். 14 வயதே ஆன ஒரு சிறுவன் பண்டிதர்கள் கூட்டத்தின் மத்தியில் அமர்ந்திருக்கிறான். கணித மேதைகள், கவிஞர்கள், பாவலர்கள், புகழ்பெற்ற பாடகரும், பாடலாசிரியருமான ஒருவர், ஜோதிடர், மற்றும் பலர் அங்கு உள்ளனர். கணித மேதைகள் ஆறு ஸ்தானம் கொண்ட இரு எண்களைப் பெருக்குமாறு கூறுகின்றனர். ஒரு கவிஞர் ஸம்ஸ்கிருத ஸ்லோகம் ஒன்றின் கடைசி இரு வரிகளை மட்டும் கூறி, அதே சீரில் முதல் இரு வரிகளை இயற்றுமாறு சவால் விடுக்கிறார். இதற்கிடையில் இன்னொரு பண்டிதர், ஒரு கருத்தைக் கூறி, அதைப்பற்றி, நான்கு வரிகள் கொண்ட ஸம்ஸ்கிருத ஸ்லோகத்தை இயற்றும்படி கூறுகிறார். சிக்கலான அமைப்பில் உள்ள கிரஹ நிலை ஒன்றைக் காட்டி, அதனால் விளையும் பலன் யாது என்று ஜோதிடர் வினவுகிறார். பாடகரோ, அதிகமாகப் புழக்கத்தில் இல்லாத ஒரு ராகத்தின் சில ஸ்வரங்களை வாய் மூடியபடி பாடி, இது என்ன ராகம் என்ற கேள்வியை எழுப்புகிறார். மற்றொருவர், மனதிற்குத் தோன்றியவாறு, 1756 ஆம் ஆண்டு பிப்ரவரி 18 ஆம் தேதியன்று என்ன கிழமை எனக் கேட்கிறார். இதெல்லாம் போதாதென்று, கேள்விகள் சரமாரியாக பொழிந்து கொண்டிருக்கும் போதே, சிறுவனின் பின்புறம் ஒருவர் நின்று கொண்டு, அவரால் சிறுவனின் முதுகில் எத்தனை கூழாங்கற்கள் எறியப்பட்டன என்று கணக்கிட்டுக் கூறும்படி சொல்கிறார். பார்வையாளர்களின் சந்தோஷமும் ஆச்சரியமும் கலந்த ஆரவாரப் பாராட்டுக்களுக்கிடையே சிறுவன்

அனைவருக்கும் உடனுக்குடன், சரியான, போற்றத்தக்க விடைகளை அளிக்கிறான்.

காவ்யகண்ட முனி என்று பிற்காலத்தில் அழைக்கப்பட்ட அந்த அதிசய சிறுவன், குறுகிய காலத்திற்குள் பாரததேசம் முழுவதும் பாராட்டுக்களைப் பெற்றான். அவனே பகவான் ரமண மகரிஷிகளின் முக்கிய சீடர்களில் ஒருவரும் ஆனான். இவன் பிறப்பதற்கு முன், குழந்தைகளில்லாத நிலையில் பக்திமானாகிய இவனது தந்தை காசிக்குச் சென்று அங்குள்ள கணபதி ஆலயத்தில் ப்ரார்த்தனை செய்தார். அப்போது கணபதியின் விக்ரஹம் உயிர்பெற்று எழுந்து வந்து தன்னுடன் கலந்துவிடுவதைப் போன்று உணர்ந்தார். அதே சமயத்தில், கிராமத்தில் இருந்த அவரது பத்தினி, அங்கு கோயிலில் இருந்த தேவியின் விக்ரஹம் ஒளிமயமாக மாறித்தன்னுள் புகுவதைக் கண்டார். அந்தத் தம்பதிகளுக்கு விரைவிலேயே ஒரு மகன் பிறந்தான். பகவான் கணேசருக்கு நன்றி செலுத்தும் வகையில் அவனுக்குக் கணபதி என்ற பெயர் சூட்டப்பட்டது.

ஆனால், அவன் பேசாமலே இருந்தது பெற்றோருக்கு மிகுந்த ஏமாற்றமளித்தது. ஐந்து வயது வரை ஊமையாகவும், எந்த உணர்ச்சியையும் வெளிக்காட்டாமலும் இருந்தான். அதைத் தவிர காக்காய் வலிப்பு முதலிய பலவித நோய்களால் துன்புற்றான். எப்படியாவது குணப்படுத்த வேண்டுமென்ற நோக்கத்தில் பண்டைக்கால வழக்கப்படி பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கம்பியால் சூடு போட முற்பட்டனர். அந்த அதிர்ச்சியின் காரணமாக விளைந்த பலன் மிகவும் அதிகமாக இருந்தது. அடங்கிக் கிடந்த அவனது திறமைகளனைத்தும் வெளிக்கிளம்பின. அசாதாரணமான புத்தி சாதுர்யத்துடன் இருந்தான். அவனது நினைவாற்றல், மன ஒருமைப்பாடு, படிப்பவற்றைக் கிரஹிக்கும் தன்மை, வார்த்தை பிசகாமல் வெளிப்படுத்தக்கூடிய தன்மை, இவை பல

மடங்காகப் பெருகின. ஒன்பது வயதிற்குள் ஸம்ஸ்கிருத இலக்கியத்தில் புலமையும் பெற்று, பதினோரு வயதிற்குள் நான்கு வேதங்கள், உபநிஷத்துகள் இவற்றை மனப்பாடமும் செய்தான். பதிநான்கு வயதில் ஸம்ஸ்கிருதத்தில் அவனால் எழுதப்பட்ட நாடகம், இன்றும் கூடச் சிறந்த நாடகங்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது.

பழமையான புனித நூல்களில், ரிஷிகள் தவம் செய்ததாகவும், கடவுள் ப்ரத்யக்ஷமாகி வரங்கள் அளித்தாகவும் கூறப்பட்டுள்ளது. அந்தக் கருத்துக்களால் மிகவும் கவரப்பட்டுத் தானும் கடவுளிடமிருந்து வரங்களைப் பெற வேண்டும் என்ற முயற்சியில் தீவிரமாகக் காவ்யகண்ட கணபதி ஈடுபட்டார். பதினெட்டாம் வயதில் திருமணம் நடந்தது என்றாலும் இறைவனது தரிசனம் பெறவேண்டுமென்ற நாட்டம் அதிகமாயிற்று. நீண்டதொரு தீர்த்தயாத்திரையை மேற்கொண்டு, பல கோயில்களுக்கும், புனித நதிகளுக்கும் சென்று கடுமையான தவத்தில் ஈடுபட்டார். மௌனமாகவும், அசைவற்றும் நீண்ட காலம் கழித்ததோடு, உண்ணாவிரதமும் இருந்தார். சம்பிரதாயப்படி தவத்திற்கான விதிகளைத் தீவிர கவனத்துடன் கடைப்பிடித்தபோதும் கடவுளின் தரிசனம் கிட்டவில்லை.

ஒரு முறைப்படி தவமியற்றிக் கடவுள் தரிசனம் கிடைக்காதபோது, வேறு ஒரு முறையில் அதே தீவிரத்தோடு தவம் செய்ய முற்படுவார். எதுவும் பலன் தராத நிலையில், கடைசி முயற்சியாக, சிவபெருமானுக்குரிய – நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாசம் இவற்றுக்குப் ப்ரதிநிதியாக உள்ள பஞ்சபூத க்ஷேத்திரங்களில் தவமியற்றத் தீர்மானித்தார். ஒருவர், குறிப்பிட்ட வரிசைப்படி க்ஷேத்திரங்களில் தவம் செய்தபின் கடைசியில் அக்னி க்ஷேத்திரமான அருணாசலத்தில் தவமிருந்தால் பலன் கிடைக்கும் என்று கூறப்பட்டுள்ளதால் காவ்ய கண்டர் விதிமுறைப்படித் தவம் செய்து 1904ஆம்

ஆண்டு அருணாசலத்தை அடைந்தார். அருணாசலேச்வரர் கோயிலில் செய்த தவத்திற்கிடையே மலைமேல் சென்று, கண்ணைமூடி ஸமாதியில் ஆழ்ந்திருந்த பகவானைப் பார்த்தார். அவர் தொடர்ந்து மௌனமாக இருந்ததால் ஏமாற்றமடைந்து திரும்பிவிட்டார்.

அருணாசலத்திற்கு அருகேயிருந்த வேலூரில் ஆசிரியர் பணியில் ஈடுபட்டவாறு சாதனைகளையும் தொடர்ந்தார். 1907ஆம் ஆண்டில் உற்சாகமிழந்து, தனது வாழ்க்கை பயனற்றதாகிவிட்டதாக எண்ணினார். சாஸ்திரங்களில் கரைகண்டவராக இருந்ததோடு குண்டலினி சக்தியின் அனுபவம் கிடைத்திருந்தும், சக்தியின் பிறப்பிடமான கடவுளிடம் நிரந்தரமாகத் தங்குவதற்கான வழியை அவரால் கண்டுபிடிக்க இயலவில்லை. “சாஸ்திரங்களின்படி கடவுளை நாடுபவர்கள் செல்ல வேண்டிய கடைசி க்ஷேத்திரமான அருணாசலத்திற்கே நான் மீண்டும் செல்கிறேன் இம்முறையும் நான் கடவுளைக் காண முடியவில்லை என்றால், [‘வேதங்கள், உபநிஷத்துகள், இந்து சாஸ்திரங்கள் எல்லாமே கவிகளின் கற்பனை’ என்று விளம்பரம் செய்வேன்” என்ற தீர்மானத்துடன் மீண்டும் அருணாசலத்திற்கு வந்தார்.]

அருணாசல கிரிவலப் பாதையில் எட்டு முக்கிய திக்குகளிலும் ஒவ்வொரு சிவாலயம் உள்ளது. தனது முழு சக்தியையும் உபயோகித்து, தவம் இயற்ற முடிவு செய்து, தென்மேற்கு திசையில் உள்ள நிருதிலிங்கக் கோயிலுக்குச் சென்றார். அக்காலத்தில் அந்த கோயிலைச் சுற்றிலும் காடுகளாக இருந்தன. ஒரு பெரிய, காய்ந்த மரத்தில் இருந்த பொந்தினுள் அமர்ந்து, உணவு உண்ணாமல், மௌனமாக, கடுமையான தவத்தைத் தொடர்ந்தார். ஐந்து அல்லது ஆறு நாட்கள் தவத்திற்கு பிறகு, பராசக்தி அவருடன் பேசினார்: “ஒரு குரு இல்லாமல், நீ உன்னுடைய குறிக்கோளை அடைய

முடியாது. உன்னுடைய குரு மலையின் மேல் இருக்கிறார். அவருடைய புனிதமான பாதங்களில் சரணடைவாயாக. அவருடைய அருள் உனக்குக் கிடைக்கும். உடனே செல்''.



காவ்யகண்டர் மரப்பொந்திலிருந்து வெளியே தாவிக்குதித்தார். அப்போது மதியம் மணி ஒன்று, சூரிய வெப்பம் மிகக் கடுமையாக இருந்தது. கார்த்திகை தீபத் திருவிழா சமயமானதால், நூற்றுக்கணக்கான மக்கள் மலையைச் சுற்றிக் கூடினர். எங்கும், நிற்காமல் உறுதியோடு மலைமேல் உள்ள விரூபாக்ஷ குகைக்கு ஓடிச்சென்று, பகவான் தனிமையில், குகைக்கு வெளியில் அமர்ந்திருப்பதைக் கண்டார். பகவான் தன்னுடைய அருட்பார்வையை காவ்ய கண்டரின் மீது செலுத்தினார். முன்பு பல பக்தர்களுக்கு ஏற்பட்டதைப்போல மெய்மறந்த நிலையில் நின்ற அவரால் பகவானை விட்டுக் கண்களை அகற்ற முடியவில்லை. மிகவும் புலமை வாய்ந்த பண்டிதரான காவ்ய கண்டர், இதற்கு முன் எந்த மனிதரையும் வணங்கியதில்லை. திடீரென்று அந்த இளந்துறவியின் முன் தான் நெடுஞ்சாண்கிடையாக இருப்பதைக் கண்டார். அவர் பகவானின் இரு கால்களையும் இறுகப் பற்றிக் கொண்டு, அழுதுகொண்டே, ''நான்

படிக்கவேண்டியது அனைத்தையும் படித்து விட்டேன். வேதாந்தம் முழுவதையும் படித்துவிட்டேன் என் மனம் திருப்தி அடையும் அளவுக்கு மந்திரஜபம் செய்துவிட்டேன், அப்படியிருந்தும் 'தவம்' என்றால் என்ன? என்று எனக்குப் புரியவில்லை! ஆகையால் தங்கள் பாதங்களில் தஞ்சம் அடைந்து விட்டேன். தவம் என்றால் என்ன என்பதைப் போதியுங்கள்'' என்றார். ஸம்ஸ்கிருதத்தில் தவம் என்றால், நெறி வழுவாது விரதங்களைக் கடைப்பிடித்து, ஸத்தியத்தை உணர முயற்சி செய்தல் என்பதாகும். ஆனாலும் அதன் ஆழமான பொருளை பகவான் காவ்யகண்டருக்குச சொல்லிக் கொடுத்தார். அவர், தரையிலிருந்து எழும்ப உதவி செய்து, அவரது கண்களை ஊடுருவிப் பார்த்தார். சிறிது நேரம் சென்ற பின், மெதுவாகப் பதிலளித்தார், ''எங்கிருந்து 'நான்' என்ற எண்ணம் எழுகிறதென்பதை ஒருவர் கவனித்தால் மனம் அங்கு அடங்கி-விடும். அதுவே தவம். மந்திர ஜபத்தை, தான் தீவிரமாகப் பழகியதாகக் காவ்ய கண்டர் ஏற்கனவே பகவானிடம் தெரிவித்ததால், குரு அவரிடம், ''ஜபம் செய்யும்போது மந்திர ஒலியின் உற்பத்திஸ்தானம் எது என்று கவனித்தால், மனம் அந்த இடத்தில் அடங்கிவிடும். அதுவே தவம்'' என்றும் விளக்கினார்.

வெளியிடப்பட்ட இந்த ரஹஸ்யத்தைக் கேட்ட காவ்ய கண்டர் மெய் சிலிர்த்தார். நடைமுறையில் ஸத்தியத்துடன் எவ்வாறு தொடர்பு கொள்வது என்பதைக் கடைசியில் அவர் அறிந்து கொண்டார். பகவானின் சன்னிதியில், பல மணி நேரம் அவருள்ளத்தில் ஆனந்த வெள்ளம் அலை அலையாகப் பொங்கியவாறு இருந்தது. கடைசியாகக் கண்ணைத்திறந்து, பகவானின் தொண்டர் பழனிஸ்வாமியிடம், ''துறவியின் பெயர் என்னவென்று கேட்டார். அந்த சமயத்தில் அவர் பிராம்மணஸ்வாமி என்று அழைக்கப்பட்டபோதும், அவரது உண்மையான பெயர் வேங்கடராமன் என்பதைத்

தெரிந்துகொண்டார். அவருடைய பெயரிலிருந்து ‘ரமண’ என்ற பகுதியை எடுத்துக்கொண்ட காவ்ய கண்டர், கடவுளை அத்துறவியிடம் கண்டதால் பகவான் என்றும் சேர்த்துக்-கொண்டார். ஸம்ஸ்கிருதத்தில் பகவான் என்றால் கடவுள் என்று பொருள். சாஸ்திர நூல்கள் எதிலும் விளக்கப்படாத தவம் என்னும் வார்த்தைக்கு பகவானைத் தவிர யாருமே அதுவரை இத்துணை தெளிவாக விளக்கம் கொடுத்ததில்லை என்பதால், காவ்யகண்டருக்கு பகவான் ரிஷியுமானார். ரிஷி என்ற ஸம்ஸ்கிருதச் சொல் ‘**த்ரஷ்டா**’ என்ற சொல்லில் இருந்து வந்தது. த்ரஷ்டா என்றால் - காண்பவன் - அதாவது புறக்கண்ணால் காணாது அகக்கண்ணால் காண்பவன் - ஞானி, என்று அர்த்தம். ரிஷி என்றால், அழிவற்ற ஞானத்தில் உற்பத்தி ஸ்தானமும் மூலப் பொருளுமான ப்ரம்மத்துடன் எப்போதும் தொடர்பு கொண்டிருப்பவர் என்பது பொருள். காவ்யகண்டருக்கு பகவான் வெறும் ரிஷி மட்டுமன்று; ‘பெரிய ரிஷி’ என்ற அர்த்தத்தில் **மகரிஷி** என்றும் பகவானை அழைக்க முற்பட்டார். ஆக காவ்ய கண்டரால் அத்துறவிக்கு **‘பகவான் ஸ்ரீ ரமண மகரிஷி’** என்ற பெயர் சூட்டப்பட்டது. மௌனமான, அமைதியான ஸத்தியத்திடம் கணக்கற்றோர் ஈர்க்கப்பட்டுள்ளனரென்றால், அதற்குக் காரணம், மேற்கூறிய ‘**பகவான் ஸ்ரீ ரமண மகரிஷி**’ என்ற நாம ஸ்மரணமே.

அச்சமயத்தில், சிறந்த, சாஸ்திர புலமை மிக்கவர்களான தெய்வரதா, கபாலி சாஸ்திரி போன்றோர் உட்பட, இருநூறுக்கும் மேற்பட்ட சீடர்களுக்கு குருவாக விளங்கினார் காவ்ய கண்டர். தனது சீடர்களுக்கு அவர் எழுதிய கடிதத்தில் “நான் என் குருவைக் கண்டு கொண்டேன். இனிமேல் நான் குருவன்று. பகவான் ஸ்ரீ ரமண மகரிஷியே நமது குரு” என்று எழுதியிருந்தார். மறுநாள் பகவானிடம் சென்று தன்னைச் சீடனாக ஏற்றுக்கொள்ளும்படி கேட்டுக் கொண்டார். பகவானும், அவருடைய வேண்டுகோளுக்கு இணங்கி, “விரூபாக்ஷ

குகைக்கு அருகிலே இருந்த மாமரத்துக் குகையில் தங்கியிரு'' என அன்புடன் கூறி அருளினார். இருவரும் வெகு அருகிலேயே தங்கியிருந்ததால், குருவும் சீடரும் தினமும் சந்தித்துக்கொள்ளும் வாய்ப்பு அமைந்தது. பகவான் சீடருக்கு அருளைப் பொழிந்து, ஆன்மீக முதிர்ச்சி பெறப் பெரிதும் உதவி செய்தார்.

காவ்ய கண்டரை பகவான் பெரிதும் மதித்ததால், அவரை அழைக்கும் போதும் மரியாதையை வெளிப்படுத்தும் சொற்களையே உபயோகிப்பார். ஒருநாள், அவர் பகவானின் கால்களைப் பிடித்துக்கொண்டு, ''பகவானே! நான் உங்கள் சீடன்; உங்கள் குழந்தை; என்னை இப்படியெல்லாம் மரியாதையாக அழைக்காதீர்கள்'' என்று கெஞ்சிக் கேட்டார். ஆனால் பகவான் தொடர்ந்து, முன்மாதிரியே அழைத்து வந்தார். பின்னர், காவ்யகண்டரின் சீடர்களும், அவரிடம் மிகுந்த பாசம் கொண்டிருந்த அன்பர்களும் அவரை, 'நாயனா' என்று அழைப்பார்கள் என்பது தெரியவந்தது. ஸம்ஸ்கிருதத்தில் அதற்கு 'அப்பா' என்று அர்த்தம். ''உங்களை நானும் இனிமேல் 'நாயனா' என்றே அழைக்கப்போகிறேன்'' என்று பகவான் கூறினார். தெலுங்கில் 'நாயனா' என்றால் 'சீடன்', 'குழந்தை' என்றும் பொருள் படுமென்பதால் காவ்யகண்டரும் அதற்குச் சம்மதித்தார்.

தந்தையின் தன்மையைக் குறிக்கும் அருவமான தெய்வமாகக் கருதப்படுவது சிவன். காவ்யகண்டர் அந்தச் சிவனுடைய தீவிர பக்தராக இருந்தார் என்பதை நாம் கவனிக்க வேண்டும். கடவுளை அன்னையாக - பராசக்தியாக அவர் வழிபட்டதேயில்லை. எப்போது பராசக்தி, அவருக்கு, அவருடைய குருவைக் காண்பித்துக் கொடுத்தாளோ, அப்போதிலிருந்து அவர் தேவியையும் வழிபட ஆரம்பித்தார். அருணாசலேச்வரர் கோயிலின் பின்பாகத்திலுள்ள மலைப்-பகுதியே மலையின் முன் பாகமாகக் கூறப்படுகிறது.

நிருதிலிங்கம் முதல் ஈசான்யலிங்கம் வரையுள்ள, தென்-மேற்கிலிருந்து வடகிழக்குப் பகுதி, பின்பாகம் என்று கூறப்படுகிறது. மலையின் முன் பாகம் தந்தையின் தன்மையைக் குறிப்பதாகவும், பின் பகுதி தாயின் தன்மையைக் குறிப்பதாகவும் சொல்வர். இந்த விஷயம் பலருக்கும் தெரியாது. மனோ ரீதியிலோ, உடல் ரீதியாகவோ, ஆன்மீக நிலையிலோ அல்லது உலக ரீதியாகவோ நிகழும் எல்லா அற்புதங்களுக்கும், வெளிப்படும் அனைத்து சக்திகளுக்கும் பராசக்தியே காரணம் எனப்படுகிறது. பகவானின் பக்தர்களின் வாழ்க்கையை நோக்கும்போது, நிருதி-லிங்கத்திற்கும் ஈசான்ய லிங்கத்திற்கும் இடைப்பட்ட பகுதியிலேயே அவர்களுக்கு அற்புத அனுபவங்களும், திவ்யக் காட்சிகளும் கிட்டியுள்ளன என்பதைக் காண்கிறோம். காவ்யகண்டருக்கும் நிருதிலிங்கத்தின் பக்கத்தில்தான் பராசக்தி அவரது குருவைக் காட்டியருளினாள்.

ஜகன்மாதாவிற்குத் தனது நன்றியைத் தெரிவிக்கும் விதமாக, அவள் பெயரில் ஆயிரம் ஸம்ஸ்கிருத ஸ்லோகங்களை அவர் இயற்ற விரும்பினார். ஸ்ரீ பகவானிடம் சரணடைந்து, அவரது அனுமதியோடு அப்பணியைத் துவங்கினார். ஒருபுனித நாளைத் தேர்ந்தெடுத்து, ஆயிரம் பாடல்களையும் அன்று நிறைவு செய்யவேண்டும் என ஸங்கல்பம் செய்துகொண்டார். துரதிருஷ்டவசமாக உடல் நலம் குன்றியதன் விளைவாக, தானே வைத்துக்கொண்ட கெடுவிற்குள் எழுநூறு ஸ்லோகங்களையே அவரால் முடிக்க முடிந்தது. குறிப்பிட்ட நாளுக்கு முன் தினம் இரவு தனது பிரச்சனையை பகவானிடம் கூறி வேதனைப்பட்டார். “கவலைப்பட வேண்டாம். நான் உங்களுடன் வந்து இருக்கிறேன்” என வாக்களித்து, பகவான் அவருக்கு உற்சாகமூட்டினார்.

காணக்கிடைக்காத காட்சி அது. அமைதியைப் பரப்பியவாறு இளம் குரு அமர்ந்திருந்தார். அவரைவிட மூத்தவரான சீடர், முன் பிரயத்தனமேதும் இன்றி, ஸ்லோகங்களைக் கொட்டும் மழைப் பொழிவு போன்று, சொல்லும்போதே அவருடைய சீடர்கள், ஒரு எண்ணெய் விளக்கை வைத்துக் கொண்டு நள்ளிரவுக்குப் பின்னும் எழுதிக் கொண்டிருந்தனர். மஹா மேதையான காவ்யகண்டர், முதல் ஸ்லோகத்தின் முதல் வரியை, முதல் சீடரிடமும், இரண்டாவது ஸ்லோகத்தின் முதல் வரியை இரண்டாவது சீடரிடமும், மூன்றாவது ஸ்லோகத்தின் முதல் வரியை மூன்றாவது சீடரிடம் கூறி எழுதும்படி செய்தார். தொடர்ந்து, சிறிதும் இடைவெளியின்றி, முதல் பாடலின் இரண்டாவது வரி முதல் சீடரிடமும் இரண்டாவது பாடலின் இரண்டாம் வரியை இரண்டாவது சீடரிடமும், மூன்றாவது பாடலின் இரண்டாம் வரியை மூன்றாவது சீடரிடமும் கூறி எழுத வைத்தார். இதே முறையில் எஞ்சியிருந்த எல்லா ஸ்லோகங்களையும், நள்ளிரவு ஒன்றரை மணிவரை எழுதி ஆயிரம் ஸ்லோகங்களும் நிறைவு செய்யப்பட்டன. அதுவரை கண்ணை மூடியவாறு, கற்சிலை போன்று ஆழ்ந்த மௌனத்தில் மூழ்கியிருந்த பகவான், கண்ணைத் திறந்து, “என்னால் கூறப்பட்ட எல்லாப் பாடல்களையும் எழுதிக் கொண்டுவிட்டீர்களா?” என்று கேட்டவுடன், காவ்யகண்டர் அழுதபடியே பகவானின் பாதங்களில் விழுந்து வணங்கி, “ஆம் பகவானே! அவை அனைத்துமே உங்களால் எழுதப்பட்ட ஸ்லோகங்களே!” என்றார். இந்தச் செய்யுள் திரட்டு ‘உமா ஸஹஸ்ரம்’ என அழைக்கப்படுகிறது. ‘உமா’ என்றால் அன்னை பராசக்தி. ஸஹஸ்ரம் என்றால் ஸம்ஸ்கிருதத்தில் ஆயிரம் என்று பொருள் - ‘உமா ஸஹஸ்ரம்’ என்பது பராசக்தியின் புகழைக் கூறும் ஆயிரம் ஸ்லோகங்களின் திரட்டு. காவ்ய கண்டர் முதல் எழுநூறு செய்யுட்களையும் மீண்டும் மீண்டும் சரி

பார்த்தார். ஆனால், அந்த அற்புதகரமான இரவில், சீடர்கள் எழுதும்படி அவர் கூறிய, பகவானுடைய திவ்ய மொழியாக வந்த பாடல்களைத் திருத்த வேண்டிய அவசியம் ஏற்படவில்லை.

நான் ரமணாச்ரமத்திற்குத் திரும்பி வந்தபின், என் மதிப்புக்குரிய சிலர், காவ்ய கண்டரைப் பற்றித் தரக்-குறைவாகப் பேசுவதைக் கேட்க நேர்ந்தது. அவரால் கூறப்படும் விஷயங்கள் எல்லாம் அவருடைய கற்பனையே என்பது அவர்கள் அபிப்பிராயம். அவர்கள் சொல்வது உண்மையாக இருக்கலாம் என்று எனக்கும் தோன்றவே, பகவானுடைய வசனாம்ருதத்தைப் பதிவு செய்த, பெரிய பண்டிதரான முனகால வேங்கடராமைய்யா அவர்களை அணுகி என் சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்ள எண்ணினேன். அவர் காவ்யகண்டரைப் பார்த்ததில்லை என்பதால், அவரது கருத்து விருப்பு, வெறுப்போடு கூடியதாக இருக்க வழி இல்லை. காவ்ய கண்டரைப் பற்றி இழிவாகக் கூறப்பட்ட பல அத்துமீறல்களையும் அவரிடம் எடுத்துக் கூறி, "அவரை மக்கள் ஏன் இவ்வளவு இகழ்வாகப் பேசுகிறார்கள்?" என்று வினவினேன். "நிறுத்து கணேசா! உனக்கு எப்படி இதெல்லாம் தெரியும்?" என்று சற்று கடிந்துகொள்ளவே, நான், என்னிடம் விஷயத்தைக் கூறியவர்களின் பெயரையெல்லாம் தெரிவித்தேன். "அவர்களது அபிப்பிராயத்தை அவர்கள் கூறியுள்ளனர். நீ அவற்றைக் கேட்டிருக்கிறாய். அதுதான் உண்மை என்று உனக்கு நிச்சயமாகத் தெரியுமா?" என்று என்னிடம் அவர் கேட்டபோது எனக்குச் சற்று குழப்பம் ஏற்பட்டது. "எது உண்மை என்பதை எவ்வாறு தெரிந்து கொள்வது?" என்று நான் அவரிடம் கேட்டேன். "கணேசா! அந்த ரஹஸ்யம் உனக்குத் தெரியாதா? **பகவான் சொல்வதெல்லாம் உண்மை**. மற்றவர் கூறுவதெல்லாம் அவரவர் அபிப்ராயங்கள்" என்று பதிலளித்தார்.

ஆனாலும் எனக்குத் திருப்தி ஏற்படவில்லை. காவ்ய கண்டர் பல ஸங்கல்பங்களை வைத்துக் கொண்டிருப்பவர் என்பதால், ஆத்ம ஸாக்ஷாத்காரத்தைப் பெற்றவரன்று என்ற ஒரு வாதம் இருந்தது. அவரை இழிவாகப் பேசுபவர்கள் இதை அடிக்கடி கூறுவர். அவர்களுடைய இந்த வாதம் சரி என்றே எனக்கும் பட்டது. அதனால் முனகால வேங்கடராமையாவிடம் எடுத்துக் கூறினேன். அதற்கு அவர், “நானும் இந்த விஷயத்தைப் பகவானிடம் கேட்டேன். ‘காவ்ய கண்டர் ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற்றவரன்று’ என, குறிப்பிட்ட ஒரு புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளதே. அது எப்படி?” என்று நான் கேட்டதற்குப் பகவான், “நான் அவ்வாறு கூறவில்லை. என்னிடம் கேள்வி கேட்டவர், அந்த மாதிரியான பதிலை என்னிடமிருந்து எதிர்பார்த்திருக்கலாம்” என்று பதிலுரைத்தார். பின்னர், எனக்கு அவர் அறிவுரை வழங்கினார். “பகவான் கூறியவற்றை அப்படியே ஏற்றுக்கொண்டால் நீ உண்மைக்குப் பக்கத்தில் இருப்பாய். வெறும் அபிப்பிராயங்களுக்கு மதிப்புக் கொடுக்காதே – அவை ஞானிகளைப் பற்றியதானாலும், வேறு யாரைப் பற்றியதாக இருப்பினும், மக்களிடையே பிளவை ஏற்படுத்துவதாக இருந்தால், நிச்சயமாக அவற்றைக் காதில் வாங்கிக் கொள்ளாதே. இறை நாட்டமுள்ளவர்கள், சான்றோர்களையும் ஞானிகளையும் பற்றிக் கூறப்படும் தவறான கருத்துக்களால் எவ்விதத்திலும் பாதிப்படையக் கூடாது. ஆன்மீக முன்னேற்றத்திற்கு மிகவும் தேவையான, நினைவிற்கொள்ள வேண்டிய முதல் விதி இது. இழிவு படுத்துபவர்கள் கூறுவதெல்லாம் வெறும் அபிப்பிராயங்கள் மட்டுமே. அவற்றை நம்பினால் நாம் மனதிற்கு அடிமையாகிவிடுவோம்”

காவ்யகண்டர் மிக உயர்ந்த கொள்கைகளை உடையவர் என்பது உண்மையே. அவை வெறும் ஸங்கல்பங்கள் மாத்திரம் அல்ல; ஸத்ய ஸங்கல்பங்கள்.

ஸங்கல்பம் என்பது ஒன்றை அடையவேண்டும் என்ற உறுதியான எண்ணம், ஸத்திய ஸங்கல்பம் என்பது ஒருவரது விருப்பம் ஏதும் இன்றித் தன்னிச்சையாக எழுவது.

1908ஆம் ஆண்டு, காவ்யகண்டர் பகவானிடம், "நான் யார்?" என்ற ஆத்மவிசாரம், என்னுடைய எல்லாக் குறிக்கோள்களையும் அடைவதற்கு போதுமானதா? அல்லது மந்திர ஜபத்தை அதிகப்படுத்த வேண்டுமா?" என்று கேட்டார். பகவான், "நான் யார்? என்ற ஆத்மவிசாரமே போதுமானது" என்று பதிலிறுத்தார். ஆரம்ப நிலையில் பகவான் அவருக்கு இந்த அறிவுரையைக் கொடுத்த போதிலும், காவ்யகண்டர் மேலும் வாதம் செய்து, "என்னுடைய கொள்கைகளும், குறிக்கோள்களும் என்னாவது?" என்றார். பகவான், "உன்னுடைய முழுச் சுமையையும், கடவுளிடம் ஏற்பித்து-விட்டால் நல்லது. அவர் அதை ஏற்றுக்கொள்வார்; நீ சுயேச்சையாக இருக்கலாம்; அவருடைய வேலையை அவர் செய்வார்" என்று கூறினார்.

முனகால என்னிடம், "மக்கள் இந்த வாக்கியங்களை மட்டும் கூறுகிறார்கள். அதற்குப் பிறகு என்ன நடந்தது என்பதைப் பகவான் என்னிடம் கூறினார். முதலில் காவ்ய கண்டர், பகவான் கூறிய அறிவுரையின் உட்பொருளை கிரகித்துக் கொள்ள முடியவில்லை. சில வருடங்களுக்குப் பின் அவர் பகவானிடம் வந்து, 'பகவான்! என்னுடைய எல்லா ஸங்கல்பங்களையும் தங்களது புனித பாதங்களில் சமர்ப்பிக்கின்றேன்' என்று கூறினார். அவருக்கு பகவானை விடச் சிறந்த கடவுள் வேறு இல்லை" எனக் கூறினார்.

காவ்யகண்டரும், அவரது சீடர்களும் பகவானிடம் கேள்விக் கணைகளைத் தொடுத்தனர். பகவான் அளித்த பதில்கள், உடனடியாகக் குறித்துக் கொள்ளப் படாவிட்டாலும், நாயனா, அவற்றைத் தன் நினைவில் தெளிவாகத் தொகுத்து

வைத்திருந்து பின்னர் அவற்றை செய்யுட்களாக்கி ஒப்பித்தார். இது 'ரமண கீதை'யின் மூன்றாவது அத்தியாயத்தில் உள்ளது என்றோ இது இரண்டாவது அத்தியத்தில் உள்ள 8வது செய்யுள் என்றோ கூறுவார். அவர் 'ரமண கீதை'யை எழுதுவதற்கு முன்னரே அவ்வாறு கூறுவது கேட்டு பக்தர்கள் ஆச்சரியப்படுவார்கள். இறுதியாக, ஒருநாள், ரமண கீதையில் உள்ள முந்நூறு செய்யுட்களையும் ஒரே மூச்சில் எழுதி முடித்தார். வினாக்களையும், அவற்றிற்கான விடைகளையும் எழுதி பகவானிடம் காட்டினார். பகவான் செய்யுட்கள் ஒவ்வொன்றையும் சரி பார்த்துவிட்டு, "நூற்றுக்கு நூறு சரியாக உள்ளது" எனக் கூறினார்.

ரமண கீதையில், பெண்களைப் பற்றிக் கேட்கப்பட்ட ஒரு கேள்விக்குப் பகவான் தந்துள்ள விடை நமது கண்ணைத் திறக்கக் கூடியதாக உள்ளது. 'பெண்கள் ஆண்களுக்குச் சரி சமமானவர்களா?' என்று நாயனா கேட்டதற்கு, "ஆண் என்றால் என்ன? பெண் என்றால் என்ன? அது தேஹத்தைப் பொறுத்தது தானே! ஆத்மாவிற்கு அந்த வித்தியாசங்கள் இல்லை" என பகவான் பதிலிறுத்தார். உடனே காவ்யகண்டர், 'பெண்களால் சாஸ்திரங்களை முழுமையாகக் கற்க இயலுமா?' என்று கேட்டார். "அதில் என்ன சந்தேகம்?" என்பதாக இருந்தது பகவானது பதில். காவ்யகண்டர் தொடர்ந்து, 'அவர்களால் ஆத்மஞானத்தை அடைய முடியுமா? ஞானிகளாக ஆக முடியுமா?' என்று கேட்டார். "நிச்சயமாக முடியும். சிறிதும் சந்தேகமில்லை" என்று குரு பதில் கூறியதோடு, "ஆத்ம ஞானம் ஜீவனுக்குத் தானேயன்றி உடம்பிற்கு அன்று. ஆத்மாவில் ஆண், பெண் என்ற பேதமில்லை" என்றார்.



காவ்யகண்டர் – இளமையில்

1922இல், பகவானின் தாயார் மஹாஸமாதியானபோது, அவருக்குக் கோயில் அமைத்து, அவரைப் பெருமைப்-படுத்தவேண்டும் என்று கூறியது காவ்யகண்டரேயன்றி, பகவான் அவ்வாறு கூறவில்லை. ‘சாஸ்திரங்களின் கூற்றின்-படியும், ரமண கீதையில் தாங்கள் கூறியுள்ளபடியும் அவர் முக்தியடைந்த ஒரு ஜீவன். அவருக்கு ஸமாதிக் கோயில் எழுப்ப வேண்டும்’ என்று கூறியதோடு, அப்பணியைத்தானே முன்னின்று நிர்வாகம் செய்தார் அவர். ஸமாதியின் மேல் கோயில்கட்டி, ‘தாயுமான இறைவன்’ என்று பொருள்படும்-படியாக, ‘மாத்ருபூதேச்வரர்’ என்று லிங்கத்திற்குப் பெயர் சூட்டியதும் அவரே. ரமணாச்ரமத்திற்கு மையமாக விளங்கும் அந்தக் கோயிலைக் கட்டவேண்டும் என்னும் கருத்து காவ்ய கண்டரிடமிருந்தே வந்தது.

காவ்யகண்டர் ஒரு மஹான். அவருடைய கடுந்தவத்தால் அவரது குண்டலினி சக்தி எழுப்பப்பட்டது. சாஸ்திரங்களின்படி எழும்பிய குண்டலினி, ஸஹஸ்ராரத்தை (உச்சந்தலை) அடைந்தால் அந்த சக்தி, தலை வழியாகச் சூரியனை

சென்றடையும் என்பதாகும். தனக்கு அவ்வாறு நேரக்கூடாது என்றும், தான் பகவானுடைய சீடரானதால், பகவான் தன் தலைமீது கையை வைக்கவேண்டும் என்றும் அவர் விரும்பினார். பகவான் தலைமேல் கை வைத்தபோது, குளிர்ந்த சந்திர கிரணங்களாலான மழைப்பொழிவு தரக்கூடிய குளிர்ச்சி இருந்ததால் அந்த சக்தியால் ஏற்பட்ட வேதனை முழுவதுமாக மறைந்தது'' என்று காவ்யகண்டர் பின்னால் தெரிவித்தார். இந்நிகழ்ச்சிக்கு முன்னர் அவருடைய தலைக்குமேல் லேசான நீராவிபோன்ற பொருள் எழும்புவதைக் கண்டதாக உடன் இருந்த பக்தர்கள் கூறியுள்ளார்கள்.

பகவானுடைய அருள், நாயனாவிற்குக் கிடைத்ததை விளக்கக்கூடிய மற்றொரு நிகழ்ச்சியின் அனுபவத்தை, எனது ஆசிரியர் T.K.சுந்தரேச ஐயர், குஞ்சு ஸ்வாமி, விஸ்வநாத ஸ்வாமி ஆகியோர் பெற்றுள்ளனர். ஒரு நாள், சென்னையின் அருகில் இருக்கும் திருவொற்றியூர் என்ற இடத்திலுள்ள பிள்ளையார் கோயிலில் தவமியற்றிக் கொண்டிருந்த காவ்ய கண்டரால், ஒரு ஆன்மீக நிலையில் இருந்து முன்னேறிச் செல்லமுடியாமல் தடங்கல் ஏற்பட்டது. ''காப்பாற்றுங்கள், காப்பாற்றுங்கள்'' என அவர் பகவானிடம் தீவிரமாகப் பிரார்த்தித்தார். அதன் விளைவாகச் சிறிது நேரத்திற்குள் பகவான் தன் முன் தோன்றி, கை வைத்து ஆசீர்வதித்து, ஆன்மீகத் தேக்கத்தை அகற்றியபின் மறைந்துவிட்டதாக உணர்ந்தார். காவ்யகண்டர், நடந்த விஷயத்தை உடனே தனது சீடர்களிடம் தெரிவித்தார். அதே சமயத்தில், நடந்த நிகழ்ச்சியை ஒப்புக்கொள்வது போன்று, விரூபாக்ஷ குகையில் பகவான், ''நான் படுத்திருந்தேன். திடீரென்று என் உடல் ஆகாயத்தில் மிதக்கத் துவங்கியது. 'திருவொற்றியூர்' என்ற சொல் என் காதில் விழுந்தது. முக்கிய வீதியொன்றின் வழியாக நடந்தபோது, கணபதியின் கோயில் ஒன்றைக் கண்டு, உள்ளே சென்றேன். பின்னர் திடீரென்று, மீண்டும் விரூபாக்ஷ

குகை வந்தடைந்தேன்'' என்று கூறினார். உடனே T.K.சுந்தரேச ஐயர், ‘‘பகவானே! இது எவ்வாறு நடந்தது?'' என்று வினவினார். ‘‘நாயனாவின் ஸங்கல்பத்தாலேயே இவ்வாறு நடந்தது. நான் விரும்பி அங்கு செல்லவில்லை. இந்த அனுபவத்தால், சித்தர்கள் ஆகாய வெளியில் எவ்வாறு பிரயாணம் செய்கிறார்கள் என்பதை உணர்ந்துகொண்டேன். எனக்கு ஏற்பட்ட அனுபவமும் அதுவாகத்தான் இருக்கவேண்டும். நாயனாவின் விருப்பத்தால் அது நிகழ்ந்ததே தவிர, என்னுடைய விருப்பத்தால் அன்று'', என பகவான் பதிலளித்தார்.

ஒருநாள், பகவான், நாயனா, T.K.சுந்தரேச ஐயர், மற்றும் சில பக்தர்கள் இவர்களுடன் மலையிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தார். திடீரென நின்றுவிட்ட அவர், ‘‘நாயனா! என்னை உடனே பாருங்கள். சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள், கிரஹங்கள் முதலியவை, என் இடுப்பைச் சுற்றி ஓடிக்கொண்டிருக்கின்றன'' என்றார். பார்த்துக்கொண்டிருந்தவர்களுக்கு அந்தக்காட்சி புலப்படவில்லை எனினும், பகவானுடைய தேஹம் பேரொளியாக ஜ்வலிப்பதைக் கண்டனர். பக்தர்கள் பயபக்தியோடும், வியப்புடனும் ரிஷிகள், உலகத்திற்குத் தலைவனான இறைவனைப் புகழ்ந்து பாடிய புருஷ ஸூக்தம் என்ற ஸ்துதியை ஓதியபடி ஸாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினர். அந்த ஸ்துதியில் சூரியனும் சந்திரனும் ஜகந்நாதனுடைய இரு கண்கள் என்று வர்ணிக்கப்பட்டுள்ளது.

குண்டலினி எழுச்சி, திருவொற்றியூர் நிகழ்ச்சி இவற்றிற்குப் பின், காவ்யகண்டரின் உடம்பில், மின்சாரம் போன்ற ஆன்மீக சக்தி பாயத்துவங்கியது என பகவானே உறுதியாகக் கூறியுள்ளார். இதன் பயனாக, வெறும் தரையில் நடக்கும்போது மின்சாரம் தரும் அதிர்வைப் போன்ற ஒரு உணர்வு ஏற்பட்டதால், அவரால் வெறும் காலோடு தரையில்

நடக்க இயலவில்லை. அதனால் மரப்பாதரக்ஷைகளை அணிய ஆரம்பித்தார் என்றாலும் மரியாதை நிமித்தமாகப் பகவான் முன் அவற்றைக் கழற்றிவிடுவார். பகவான் கருணையோடு, “நாயனா வருகிறார். அவரால் வெறும் காலால் நடக்க முடியாது. மின்சார சக்தி பாயாதவண்ணமாக, அவர் அமர்வதற்கு ஒரு பலகையைப் போடுங்கள். கம்பளிப் போர்வை ஒன்றையும் அவர் நடப்பதற்காகக் கொடுங்கள்” என்று கூறுவார்.

பகவானுக்கும் காவ்யகண்டருக்கும் இடையே இருந்த உறவை நாம் மதிக்கவேண்டும். சீடர்கள் ஒருவரை ஒருவர் எவ்வாறு பார்த்தார்கள் என்பதைவிட, குரு தனது சீடரை எவ்வாறு பார்த்தார் என்பது மிகவும் முக்கியம். ‘ஞானியான பகவான், தனது சீடரான நாயனாவிற்கு மிகுந்த மதிப்பளித்துள்ளார்’ என்பதை மட்டுமே இறை நாட்டமுள்ள-வர்களும் பகவானுடைய பக்தர்களும் கவனத்தில் கொள்ளவேண்டும். அவருக்கு நாம் மிகவும் கடமைப்-பட்டுள்ளோம். முதலாவதாக, பகவானுக்கு, அவரது புகழ் பெற்ற பெயரைக் கொடுத்தவர் காவ்யகண்டர். இரண்டாவதாக, பகவானை முதன் முதலில் பேசத்தூண்டியது அவர்தான். அதற்கு முன், சிவப்ரகாசம் பிள்ளை, கம்பீரம் சேஷய்யா போன்றவர்கள், பகவான் மௌனத்தில் இருப்பதாக எண்ணி, அவரது விடைகளை எழுத்து மூலமே பெற்று வந்தனர். பகவான், காவ்யகண்டருக்கே வாய்மொழியாகப் பதில்களைத் தெரிவித்தார். ஸம்ஸ்கிருதத்தில் ‘ஆர்யா’ சந்தத்தில் ஒரு பாடலை இயற்ற வேண்டுமெனப் பகவானை வற்புறுத்தியதும் அவரே. ஸம்ஸ்கிருதம் பற்றியோ அதன் சந்தங்கள் பற்றியோ தனக்கு அதிகமாகத் தெரியாது எனக் கூறிய பகவானுக்கு ஆர்யா சந்தத்தை விளக்கிக் கூறி மீண்டும் வேண்டுகோள் விடுத்தார். முதல் நாள் இரு ஸ்லோகங்களும், மறு தினம் மூன்று ஸ்லோகங்களுமாக, ஐந்து ஸ்லோகங்கள் கொண்ட

'அருணாசல பஞ்சரத்னம்' என்னும் அருமையான ஸ்துதியை, காவ்ய கண்டரே வியந்து போற்றும் வண்ணம், பகவான் எழுதியருளினார். பகவானுடைய ஸமாதிக்கு முன்னால், இது தினமும் ஓதப்படுகிறது.

**அருணாசல பஞ்சரத்னம்:** (ஸ்ரீ பகவானது தமிழாக்கம்)

அருள்நிறை வான அமுதக் கடலே
விரிகதிரால் யாவும் விழுங்கும் – அருண
கிரிபரமான் மாவே கிளருளப்பூ நன்றாய்
விரிபரிதி யாக விளங்கு. (1)

சித்திரமாம் இ:தெல்லாம் செம்மலையே நின்பாலே
உத்திதமாய் நின்றே ஒடுங்கிடுமால் – நித்தியமும்
நானென்று இதயம் நடித்திடுவையால் உன்பேர்
தானிதயம் என்றிடுவர் தாம் (2)

அகமுகமார் அந்த அமலமதி தன்னால்
அகமிதுதான் எங்கெழுமென்று ஆய்ந்தே – அகவுருவை
நன்கறிந்து முந்நீர் நதிபோலும் ஓயுமே
உன்கண்அரு ணாசலனே ஓர். (3)

வெளிவிடயம் விட்டு விளங்கும் அருணேசா
வளியடக்க நிற்கும் மனத்தால் – உளமதனில்
உன்னைத் தியானித்து யோகி யொளிகாணும்
உன்னில் உயர்வுறுமீது உன். (4)

உன்னிடத்தில் ஒப்புவித்த உள்ளத்தால் எப்பொழுதும்
உன்னைக்கண்டு எல்லாமும் உன்னுருவாய் – அன்னியமில்
அன்புசெயும் அன்னோன் அருணாசலா வெல்கும்
இன்புருவாம் உன்னிலாழ்ந்தே. (5)

அருணகிரி ரமணன் ஆரியத்திற் கண்ட
அருமறையந் தக்கருத்தே யாகும் – அருணா
சலபஞ்சகமணியைத் தண்டமிழ் வெண்பாவால்
உலகுக்கு அளித்தான் உவந்து. (6)



## சாது நடனானந்தா



காவ்யகண்டர் அநேக சக்திகளோடு கூடிய மஹா மேதை என்றால், சாது நடனானந்தரை, 'ஆமையும் முயலும்' என்ற கதையில் வரும் ஆமையோடு ஒப்பிடலாம். பார்வைக்கு, எவ்விதத்திலும் ஆன்மீகத்தில் பெரிய நிலையை அடைவார் என்று கூற முடியாதவராகத் தோன்றினார் என்றாலும், சாதாரண ஆரம்பப் பள்ளி ஆசிரியராக இருந்த அவர், ஆழ்ந்த ஞானத்தோடு விளங்கி, ஆன்ம சாக்ஷாத்காரத்தையும் பெற்றார். ஆன்மீக ஸாதகர்களுக்கு மிகவும் முக்கியமான 'உபதேச மஞ்சரி' (Spiritual Instructions) என்ற நூலை எழுதியவரும் ஆவார்.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், ஸ்வாமி விவேகானந்தர், இவர்களைப் பற்றியும், தமிழ் ஆன்மீக நூல்களையும் நன்கு படித்திருந்தார். ஓர் உண்மையான குருவின் வழிகாட்டுதல் மூலமே ஸத்யம் என்பது என்னவென்று அறிந்துகொள்ள முடியும் என்பதை உணர்ந்திருந்தார். அதனால் தனக்குக் குரு ஒருவர் வேண்டும் என ஏங்கிக் கொண்டிருந்தார். அவருக்கு வழிகாட்டக் கூடிய குரு அருணாசல மலைமேல் ஸ்கந்தாச்ரமத்தில் இருப்பதாக நண்பர்கள் மூலம் அறிந்துகொண்டார். அச்சமயத்தில், நடேச முதலியார் என அழைக்கப்பட்ட அவர், பகவானைப் பார்க்க ஸ்கந்தாச்ரமம் சென்று, பகவானுக்கு அருகிலேயே அமர்ந்து கொண்டார். தமிழ் ஆன்மீக நூல்களை நன்கு அறிந்தவராதலால், குரு பேசுவதற்கு முன்னர் தான் பேசக்கூடாது என்று நினைத்து மௌனமாகவே இருந்தார். யாராவது கேள்வி கேட்டாலொழிய, பகவான் பேசுவது வழக்கமில்லை. மணிக்கணக்காக மௌனமாக இருந்துவிட்டு முதலியார் ஏமாற்றத்துடன் திரும்பினார். "ஒருவேளை, அவர் ஒரு ஞானி இல்லையோ"

என்ற சந்தேகம் எழவும், வேறு ஞானியரிடம் செல்வதெனத் தீர்மானித்தார். பலரைப் பார்த்த பின்னரும் ஏமாற்றமே மிஞ்சியது. அவருடைய நண்பர்கள் அவரைக் கடிந்துகொண்டு, “பகவானை நீ ஏன் விட்டுவிட்டாய்? மீண்டும் அவரிடமே செல்” என வற்புறுத்திக் கூறினர். அவர், பகவான் தன்மீது அருள் பொழிய வேண்டுமெனக் கெஞ்சியபடி பல கடிதங்களை எழுதினார். பதிவுத் தபாலில் கூட ஒரு கடிதம் அனுப்பினார். அதில், “நீங்கள் எனக்கு அருள் புரியவில்லையானால் நான் ஆத்ம சாக்ஷாத்காரம் பெறாமல் இறந்து போவேன். அடுத்த பிறவியில் மீண்டும் வற்புறுத்தி, உங்கள் அருள் வேண்டிப் பிரார்த்திப்பேன். அப்போது, எனக்காக நீங்களும் மீண்டும் பிறக்கவேண்டிய நிலை ஏற்படும். அதற்குப் பதில், இந்தப் பிறவியிலேயே எனக்கு அருள் புரிந்து விடலாமல்லவா!” என எழுதியிருந்தார்.

பகவான் அவருடைய கனவில் தோன்றி, “நான் அருள் பொழிய வேண்டுமென நீ கட்டாயப் படுத்துகிறாய். ஆனால், அதற்கு முன்னர் நீ சிவபெருமானை வழிபட வேண்டும்” என்று கூறினார். அவருடைய சிறிய அறையின் சுவரில் சிவனுடைய படம் ஒன்று இருந்தது. நந்தியின் மீது சிவன் அமர்ந்திருப்பதைப் போன்றிருந்த அதற்குச் சில நாட்கள் பூஜை செய்தார். இருந்தும் அவருக்கு சந்தோஷம் ஏற்படவில்லை. திருவண்ணாமலைக்குச் சென்று அருணாசலேச்வரர் கோயிலில் வழிபட்டார். ஒருவேளை, பகவான் இந்த இடத்திற்குச் செல்லும்படியாகத் தான் கூறியிருப்பார் என்ற எண்ணம் எழுந்தது. அச்சமயத்தில் சிலர் அவருடைய ஆர்வத்திற்குத் தடைபோடும் விதமாக, “நீ அந்த மௌனத் துறவியிடம் செல்லாதே. அவர் உன்னுடன் பேசவே மாட்டார்” என்று கூறினர். என்றாலும் அவர் தனது உறுதியை விடாமல், இறை நாட்டத்தில் தளர்ச்சி ஏற்படாமல், தொடர்ந்து சாதனைகள் செய்துவந்தார். இதனால், உறுதியுடன் கூடிய

உழைப்பே நடனானந்தருடைய கவசம் என்று முருகனார் கூறுவதுண்டு.

இந்தப் பள்ளி ஆசிரியர் நம்பிக்கையை இழக்காமல் மீண்டும் பகவானிடம் சென்று, “பகவானே! உங்களுடைய உயர்ந்த ஞானத்தை நான் அனுபவிக்க விரும்புகிறேன். என் ப்ரார்த்தனையைக் கருணையோடு நிறைவேற்றவேண்டும்” என்று கூறியவுடன், பதினைந்து நிமிடங்களுக்கு, பகவான் அவரைத் தொடர்ந்து நோக்கினார். பகவானிடம் யாராவது கேள்வி கேட்டால், அவர் உடனே பதில் அளிக்கும் வழக்கமில்லை. விடை, நேரிடை அனுபவமாக ஆகவேண்டும் என்பதற்காக கேள்வி எழுப்பியவரை மௌனத்தில் இருத்தித் தயார் செய்த பின்னரே பகவான் விடையளிப்பார். கேள்வியைவிட, அதைக் கேட்பவரிடம் பகவானுக்கு அக்கறை அதிகம். நடனானந்தரை உற்று நோக்கி, “என் முன் நிற்கும் இந்த உடம்பு அருளை நாடுகிறதா அல்லது அதன் உள்ளிருக்கும் உணர்வு அதை வேண்டுகிறதா? உணர்வே அப்படி வேண்டுகிறதென்றால், அது தன்னை உடம்பு என்று கருதிக்கொண்டுதானே வேண்டுகிறது? அவ்வாறென்றால் உணர்வு, தனது இயல்பு என்னவென்பதை முதலில் தெரிந்து கொள்ளட்டும். பின்னர் அது தானாகவே இறைவனையும், அவரது அருளையும் புரிந்துகொள்ளும். இந்த உண்மையை இங்கேயே இப்பொழுதே தெரிந்து கொள்ள முடியும்” என்று பகவான் கூறினார். அதன் விளைவாக நடனானந்தரின் உடலில் பேரின்ப வெள்ளம் அலை அலையாகப் பாய்ந்தது. பலமணி நேரம் அவர் பகவானின் முன் அமர்ந்திருந்தார். பகவானது அருட்பார்வையினால் அவரும் ஆசீர்வதிக்கப்பட்டார்.

“கடுமையான நோன்புகளைக் கடைப்பிடித்த போதிலும், எஞ்சியிருந்த தனது வாசனைகள் முற்றிலுமாக அழியாததால் பகவானது பார்வைகூட எனக்குப் பூரணமான நிறைவைத் தரவில்லை” என்று என்னிடம் நடனானந்தர் கூறியுள்ளார்.

ஒருமுறை, பகவானின் சந்நிதியில் அவர் இருந்தபோது காவ்ய கண்டரும், மற்றும் பல வித்வான்களும், இந்து சாஸ்திர விஷயமாக ஸம்ஸ்கிருதத்தில் உரையாடிக் கொண்டிருந்தனர். அவர்கள் பேசிக் கொண்டிருந்த உயர்ந்த விஷயத்தில் ஒரு வார்த்தைகூட அவருக்கு விளங்காதபோது கண்களிலிருந்து ‘பொல பொல’வென்று கன்னங்களில் நீர் வழிந்தோட, வருத்தத்துடன் மௌனமாக அமர்ந்திருந்தார். அவர் கண்ணைத் திறந்து பார்த்தபோது, பகவானைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் அங்கிருந்து சென்றிருந்தனர். பகவான் கருணையோடு அவரை நோக்கி, “எதற்காக இவ்வளவு விசனப்படுகிறீர்கள்? இந்தப் பிறவியில் ஆத்ம ஞானத்தை அடைய முடியாதவராக நீங்கள் இருக்கிறீர்கள் என்றால் இந்த இடத்திற்கு வந்திருக்கவே மாட்டீர்கள். (இது நமக்கும் பொருந்தும்) எந்த சக்தி உங்களை இங்கு கொண்டு வந்ததோ, அதே சக்தி உங்களுக்கு ஆத்ம சாக்ஷாத்காரத்தையும் தரும். இன்றில்லாவிட்டாலும், என்றாவது ஒரு நாள், தன் பொறுப்பை அது நிச்சயமாக நிறைவேற்றும். நீங்கள் கவலைப்பட எந்த முகாந்தரமும் இல்லை” எனக் கூறினார். பகவானின் இக்கூற்று அவருடைய குறைகளையெல்லாம் நீக்கி அஞ்ஞானத்தையும் போக்கியது. அவரும் ஆத்மஞானியாக விளங்கினார்.

‘தன்னைத் தான்’ உணர்ந்து கொண்டு விட்டதை அறிந்து கொண்ட பின்னர், அவர் யார் கண்ணிலும் படாமல் மறைவாக இருந்தார். தன்னை அவர் உணர்ந்துவிட்டார் என்பதற்கு வெளிப்படையான அடையாளமே, அவர் தன்னை மறைத்துக் கொண்டதுதான். வாழ்க்கை முழுவதும் ஆத்மானுபவத்தில், ஆனந்தத்தில் திளைத்துத் தனிமையிலே வாழ்ந்தார். 1950 இல் பகவானின் மஹாஸமாதிக்குப் பிறகு 1967ஆம் ஆண்டு வரை, நடனானந்தர் உயிரோடுதான் இருக்கிறாரா என்பதுகூட பலருக்கும் தெரியாது. திருவண்ணா-

மலையில் ஒரு குடிலில்தான் வாழ்ந்திருந்தார் என்ற போதும், அவர் எங்கு இருக்கிறார் என்பதை யாரும் அறியவில்லை. பழைய பக்தர்கள் பலரும் எண்ணியபடியே, நானும், அவர் இறைவனடி சேர்ந்துவிட்டார் என்றே கருதினேன்.

நான் ஆச்ரமத்திற்குத் திரும்பி வந்து ஏழு ஆண்டுகள் கடந்துவிட்டன. திடீரென்று ஒருநாள் எனது நண்பர், டோரப் ஃப்ராம்ஜீ (Dorab Framji), "நடனானந்தா உயிரோடு இருக்கிறார் என்பது உனக்குத் தெரியுமா?" என வினவினார். 'உபதேச மஞ்சரி' என்ற அவரது புத்தகம் எனக்கு மிகவும் பிடித்த ஒன்று என்பதால், செய்தியறிந்து மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்தேன். அவரைக் காணச் சென்றேன். மிக எளிமையான மனிதர் என்பதால் அவரது அறையில் ஒருசில கோவணங்களைத் தவிர வேறெதுவும் இருக்கவில்லை. என்னை ஆசீர்வதித்துவிட்டு, "என்ன செய்து கொண்டிருக்கிறாய்? ஆத்ம விசாரம் பழகுகிறாயா?" என்று வினவினார். "என்னால் ஆத்ம விசாரம் செய்ய முடியவில்லை. 'அருணாசல சிவ', 'அருணாசல சிவ' என்று நாமத்தை மட்டும் கூறிக் கொண்டிருக்கிறேன் என பதிலிறுத்தேன். அவரது முகம் கடுங்கோபத்தால் களையிழந்தது. அன்றுதான் அவரை நான் முதன் முறையாகப் பார்க்கிறேன். சாதாரணமாக எங்கு சென்றாலும், யாரும் என்னைக் கடிந்து கொள்ளமாட்டார்கள் என்பதால் அவரது முகபாவம் எனக்கு அதிர்ச்சியைத் தந்தது. அவர் விளையாட்டு, வேடிக்கைகளுக்கெல்லாம் இடம் கொடுக்காத கண்டிப்பான மனிதர். என்னிடம் மிகுந்த கோபத்தோடு, "நீ எத்தனை பெரிய முட்டாள்! பகவானிடம் எதற்காக வந்துள்ளாய் என்று அறிந்துகொள்ளவில்லையா? உன்னை எதற்காகத் தேர்ந்தெடுத்துள்ளார்? அவரைப் போன்றே உன்னையும் ஆக்குவதற்காகத்தான். 'உள்ளது நாற்பதை' படி. ஆத்மவிசாரத்தைப் பழகு. ஆத்மாவாகவே இரு.

அதற்காகத்தான் நீ தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறாய்'' என்று கூறவும் நான் என்னையே மறந்து நின்று கொண்டிருந்தேன்.

புகழுக்கு ஆளாக விரும்பாத அவர், ஆச்ரமத்தில் தங்குவதற்குக் கூட மறுத்தார். ஆஸ்போர்ன் அவர்களின் வீட்டிற்கு அருகிலேயே, டோரப் ஃப்ரேம்ஜீ, அவருக்காக ஒரு எளிமையான வீட்டை ஏற்பாடு செய்தார். 1981ஆம் ஆண்டு வரை, அவர் அந்த வீட்டில் தங்கியிருந்தார். எப்பொழுது வேண்டுமானாலும் அவரைக் காண்பதற்கும், அவரோடு பேசுவதற்கும், அவர் எனக்கு அனுமதி அளித்திருந்தார் என்பது எனது அதிருஷ்டம். நான் வெளியிட இருந்த ஆச்ரம விழா மலர் ஒன்றிற்குக் கட்டுரை எழுதித் தரவேண்டுமெனக் கேட்டு, அவரை மௌனத்தில் இருந்து வெளிக்கொணர முற்பட்டேன். அதற்கு இசைந்து, எழுதியும் கொடுத்தார். துரதிருஷ்டவசமாக அதை நான் கைதவறி எங்கோ வைத்துவிட்டேன். அவரிடம் அதன் பிரதி இருக்கும் என்ற நம்பிக்கையில் அவரிடம் மீண்டும் சென்று, "ஸ்வாமி, தாங்கள் தந்த கட்டுரையைத் தவறவிட்டு விட்டேன். என்னை மன்னித்து விடுங்கள். உங்களிடமுள்ள பிரதியைக் கொடுத்தால், கவனமாகக் குறிப்புக்கள் எடுத்துக் கொண்டு பின், உங்களிடம் சேர்த்து விடுகிறேன்'' எனப் பணிவோடு கேட்டுக் கொண்டேன். நான் சொன்னதைக் கேட்டு, அவர் என்னைப் பார்த்துச் சிரித்தார். "கணேசன்! உன்னைச் சுற்றிலும் நன்கு பார்! எனது சூழ்நிலை, என்னைப் பற்றிய விளக்கத்தைத் தரும். எனது அறையைப் பார். இங்கு புத்தகமோ, துணிமணிகளோ, பாத்திரங்களோ எதுவுமே இல்லை'' என்றார். குழம்பிப்போய், "என்ன சொல்கிறீர்கள் ஸ்வாமி?'' என்று நான் வினவியபோது, "கணேசா! நான் பகவான் மீது பல பாடல்கள் இயற்றினேன் என்னும் விவரம் உனக்குத் தெரிந்திருக்கலாம். அவை அனைத்துமே புத்தகங்களாக வெளிவந்துள்ளன என்றாலும், இங்கு ஏதாவது புத்தகம் உள்ளதா? பகவானைக் கொண்டாடும் வகையில்,

உரைநடையிலோ செய்யுளாகவோ, நான் எதை எழுதினாலும் அவற்றை, அவரது திருப்பாதங்களில் சமர்ப்பித்துவிடுவேன். என்னைப் பொறுத்தவரையில், எனது பணி அதோடு முடிந்துவிட்டது. பகவான் உடலை உகுத்த பின்னர், உன்னைப் போன்றே சிலர், அவர்களுடைய தேவைக்காக, என்னை எழுதித் தருமாறு கேட்டுக்கொள்வார்கள். அதற்கிணங்க எழுதிய பின் அவற்றை, நிர்வாகத்தினரிடம் ஒப்படைத்துவிடுவேன். என் பொறுப்பு அத்துடன் முடிந்தது'' என்று கூறினார். ஆனாலும் எனக்காக அக்கட்டுரையை மீண்டும் எழுதித் தந்தார். அதை 1967ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட ரமண புகைப்பட விழா மலரில் காணலாம்.

பகவானுடைய புகழைப் பரப்புவதில் ஈடுபட்டிருந்த ஒரு குடும்பத்தினரை, நடனானந்தரைக் காண்பதற்காக அழைத்துச் சென்று, அவர்கள் ஈடுபட்டுள்ள அப்பணி பற்றிய விவரங்களை அவரிடம் தெரிவித்தேன். அவருக்குக் கட்டுக்கடங்காத கோபம் வந்துவிட்டது. "பகவானது பெருமையைப் பரப்புவதாக எண்ணிக்கொண்டு நீங்கள் ஏதேதோ அர்த்தமற்ற வார்த்தைகளை உளறுகிறீர்கள். நீங்களே ஸத்திய வஸ்துவாக மாறுவது ஒன்றே அதைச் சாதிக்கக் கூடிய வழி. இங்கேயே, இப்பொழுதே அவரது உபதேசங்களை நடைமுறையில் கொண்டு வாருங்கள். குருநாதனுக்குச் ஸேவை செய்யச் சிறந்த வழி அதுவே. நமது குருவும், அவரது உபதேசங்களும் வெவ்வேறல்ல. குருவேதான் உபதேசங்கள். பகவான் மீதுள்ள உங்கள் பக்தியை வெளிப்படுத்துவதற்குச் சிறந்த வழி அவரது உபதேசங்களை வாழ்க்கையில் கடைப்பிடிப்பதுதான்'' என்று ஆவேசமாகக் கூறினார். அந்தக் குடும்பத்தினர் பயந்து நடுங்கிப்போய், மீண்டும் நடனானந்தரைக் காணச் செல்லவே இல்லை.



நடனானந்தரின் மரண சமயத்தில் சாது ஓம், குஞ்சு ஸ்வாமி இவர்களும், நானும், மற்றும் சில பக்தர்களும் அவர் முன்னால் ப்ரார்த்தனைகள் செய்தோம். பக்தர்களின் மரண சமயத்தில், அவர்கள் அனைவருமே ஒரே மாதிரியாக நடந்துகொண்டனர் என்பதை உணர்ந்தேன். யாருமே அவர்கள் உடம்பைப் பற்றிக் கவலைப்படவில்லை. நடனானந்தரின் உயிர் பிரிவதற்குச் சற்று முன், “ஸ்வாமி! எப்படி-யிருக்கிறீர்கள்?” என்று நான் கேட்டபோது, “நான் சந்தோஷமாக இருக்கிறேன்” என்று பதில் கூறினார். உடல் ரீதியாக மிகுந்த வேதனையை அனுபவித்துக் கொண்டிருந்தார். அவரைப் பார்த்த எல்லா வைத்தியர்களும், அவருடைய நோய் முற்றிப்போன நிலையிலுள்ளதாகக் கூறினர். அவ்வாறிருந்தும் ‘சந்தோஷமாக இருக்கிறேன்’ என்று அவர் கூறியதால், நான் சற்று வியப்படைந்து, “நீங்கள் சந்தோஷம் என்று கூறுவதற்கு அர்த்தமென்ன?” என்று கேட்டேன். “பகவானது படத்தைப் பார். உனக்கு அப்போது புரியும்” என்று அவர் பதில் கொடுத்தார். இவையே அவரது இறுதி வார்த்தைகள். என் கவனத்தைப்

பகவானிடம் திருப்பிவிட்டு, சந்தோஷமாகக் கண்ணை மூடியவாறு உடலை உகுந்தார். டோரப் ஃப்ராம்ஜீயின் வீட்டு எல்லைக்குள் ஞானி நடனானந்தருக்கு ஸமாதி அமைக்கும் பணியில் உதவி செய்யும் பேறு எனக்குக் கிட்டியது.



# மணவாஸி ராமஸ்வாமி ஐயர்



1908ஆம் ஆண்டில், நானும் என் தந்தையும் அருணாசலத்திற்குச் சென்றிருந்தோம். கார்த்திகைத் தீபத்- திருவிழா நடைபெறும் சமயமாக இருந்ததால், ஊரில் கூட்டம் அதிகமாக இருந்தது. 'பிராம்மண ஸ்வாமி' என்றழைக்கப்பட்ட, உலகைத் துறந்த சாது ஒருவர் விரூபாக்ஷ குகையில் இருப்பதறிந்து அவரைக் காண, அங்கு சென்றோம். குகை வாயிலில் இருந்த ஒருவர், எங்களை உள்ளே செல்ல விடாமல் பலமாகத் தடுத்தார். தடுப்பதற்கு அவருக்கு என்ன அதிகாரமுள்ளது என்று நான் வாதித்துக் கொண்டிருந்தபோது, நல்ல வேளையாக அந்த ஸ்வாமியே வெளியில் வந்தார். அவரைப் பார்த்தபோது என் மெய் சிலிர்த்தது. என் உடலை வெகுவாக பாதித்த நோய்களுக்கும், மனக் கவலைகளுக்கும் ஏதாவது பரிஹாரம் உள்ளதா என்று கேட்கும்படி, உள்ளத்தில் ஏதோ ஒன்று தூண்டியது. "நான் மருத்துவருமில்லை; குறி சொல்பவனும் இல்லை" என்று கூறியவாறே அந்த ஸ்வாமி சென்று கொண்டிருந்தார். நானும் விடாமல் அவரைத் தொடர்ந்து, "நீங்கள் பெரிய மஹான் என்பதைக் கேட்டுத்தான் இங்கு வந்தேன். என் வேதனைகளுக்குத் தீர்வு வரக்கூடாதென்பது-தான் என் தலைவிதியோ என்னவோ!" என்று நான் விரக்தியுடன் கூறிய உடன் அவர் நின்றார். "மன உறுதியோடு, எது வந்தாலும் ஏற்றுக்கொள்வது என்னும் மனோபாவத்தை வளர்த்துக்கொள். உன்னை எதுவும் அசைக்க முடியாது" என்று கூறி, வலது கையைத் தூக்கி என்னை அவர் ஆசீர்வதித்தார். அருள் ஒளி அதிலிருந்து கிளம்பி, என்னைச் சூழ்ந்துகொண்டதாக உணர்ந்தேன். 'எதிர்காலத்தில் சவால்களை என்னால் ஏற்க முடியும்' என்ற நம்பிக்கையை அந்த ஆசீர்வாதம் ஊட்டியதோடு, தெய்வீக சக்தி என்னை நிச்சயமாகக்

காப்பாற்றும் என்று நம்பும் உறுதியான மனநிலையையும் தந்தது.

இந்த அனுபவம் பெற்ற சிறந்த பக்தரின் பெயர் மணவாஸி ராமஸ்வாமி ஐயர். பிறவியிலேயே தைரியமாகச் சவால்களை எதிர்கொள்ளும் தன்மையையுடைய அவருடைய வாழ்க்கையில் 'முடியாது' என்ற சொல்லுக்கே இடமில்லை. அவரது இந்த இயற்கையான குணத்திற்கு, முதல் சந்திப்பி-லேயே பகவான் ஊக்கம் தந்தார். ஆன்மீக நாட்டமுள்ள-வர்கள், நோய் உருவில் உடலளவிலும், சந்தேகத்தின் உருவில் மனத்தளவிலும், வாழ்க்கையில் தீவிரமாகத் தாக்கப்படுவர் என்பது நிச்சயம். அதனால் இரு விஷயங்களை முக்கியமாகக் கவனத்தில் கொள்ளவேண்டும்; நேரிடையாகத் தைரியத்துடன் சவால்களை எதிர்கொள்ள வேண்டும். அதே போல், குரு அல்லது கடவுள் என்று அழைக்கப்படும் உன்னதமான சக்தி, நமக்கு வழிகாட்டுவதோடு காக்கவும் செய்யும் என்ற நம்பிக்கையும் வேண்டும்.

ராமஸ்வாமி ஐயருக்கு, அந்த அருணாசல தரிசனம் மிகவும் முக்கியமானதாக இருந்தது. மலையைப் பார்க்கும் நோக்குடன் மட்டுமே அவர் வந்தார். புனித மலையும், கோயில் கோபுரங்களும், சந்தேகத்திற்கே இடமில்லாத ஆன்மீக சக்தியோடு விளங்கிய அந்த ஞானியும் அவர் மனதில் ஆழமாக ஏற்படுத்திய தாக்கத்தின் விளைவாகக் குடும்பத்தோடு அருணாசலத்திற்கு இடம்பெயர்ந்து, நிரந்தரமாக அங்கு வாழ முற்பட்டார். தினமும் மாலையில் பகவானைப் பார்க்க வரும் அவர், இரவில் பகவானுடனேயே தங்கிவிடுவார். அச்சமயத்தில் பகவானுடன் ஓரிருவர் மட்டுமே இருந்ததால், எவ்வித கட்டுப்பாடும் இருக்கவில்லை. இசையில் ஐயருக்கு இருந்த ஆர்வத்தை அறிந்த பகவான், கீர்த்தனங்களை இயற்றுவதிலுள்ள நுணுக்கங்களை அவருக்குக் கற்றுத் தந்தார். அது ஒரு வித்தியாசமான பொம்மலாட்ட நிகழ்ச்சியின்

ஆரம்பமாக இருந்தது. சாதாரணமாகப் பொம்மலாட்டக்காரன் கயிற்றை இழுப்பதற்கேற்ப பொம்மைகள் ஆடும். இங்கு பகவான் கயிற்றை இழுப்பதற்கேற்ப ஐயர் ஆடாமல், சிறப்பாக இசையை வெளிப்படுத்தக்கூடியதும், பகவானையும் அவரது உபதேசங்களையும் போற்றுவதுமான கீர்த்தனைகளை இயற்றுவதிலும் ஈடுபட்டார்.

ஒருநாள் வேலைகளை முடித்துக்கொண்டு வழக்கம்போல் ஐயர் விரூபாக்ஷ குகைக்கு வந்தார். பகவானிடம், “ஏசுநாதர், புத்தர், மற்றும் பல ஞானிகள், பாவிகளைப் பந்தத்திலிருந்து விடுவிப்பதற்காக உலகில் அவதரித்தனர். நானும் அம்மாதிரிக் காப்பாற்றப்படுவேன் என நம்பலாமா?” என்று ஆங்கிலத்தில் கேட்டார். வைத்த கண் வாங்காமல் ஐயரை நோக்கிய பகவான், “ஆம். நிச்சயமாக நம்பலாம்” என ஆங்கிலத்திலேயே மறுமொழி பகர்ந்தார். பகவானுடைய பதிலைக் கேட்ட அவரது உடம்பு உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால்வரை சிலிர்த்தது. உணர்ச்சி வசப்பட்டு, அப்போது அவரிடமிருந்து வெளிப்பட்ட முதல் பாடல்

## திக்கு வேறில்லை பாடல்

### பல்லவி

திக்கு வேறில்லை தீன ரக்ஷகா
ஐயா மெய்யா அருண ரமணய்யா (தி)

### அனுபல்லவி

மொய்க்கும் அடியவர் மோனவண்டினங்களாய்
கண்டு சுவைத்திடும் செண்டு மணப்பூவே! (தி)

### சரணம்

வெய்ய அகங்கார வெப்பமதால் வருந்திப்
பொய் நினைவதனால் மெய் நிலை வழிந்தேன்
அருமருந் தொன்றுண்டு அவனியிலுனதருள்
கொடும் பிணி தனை தீர்க்கும் குருவர க்ருபாகரா
ஆட்டினம் கூடிய காட்டிளம் சிங்கத்தை

நிஜ வடிவு காட்டி நீ என் இனம் என்றாப் போல்
இங்கெனை யாட்கொண்டு என்னையறிவிக்க
தேன் மழை பெய்திடும் திவ்ய வேதியன் நீயே (தி)

என்ற கீர்த்தனம், பகவானுடைய தமிழ் பக்தர்களிடையே இன்றும் பிரபலமாக உள்ளது.

ஒரு நாள் இரவு விரூபாக்ஷ குகையில், பகவான் ஐயரின் மீது அரைமணிக்கு மேலாகத் தன் கவனத்தை ஒருமுகப்படுத்தி செலுத்தியபோது, எரிச்சல் தரக்கூடிய ஒரு சக்திப்ரவாஹம் தனக்குள் பாய்வதை அவர் உணர்ந்தார். உடனே அவரது மனம் அகமுகமாகி, இதயத்தில் அடங்கியது. முதன் முறையாக, பகவான் சாதாரணத் துறவி மட்டுமன்று; ஆன்மீக சக்தியை வலிமையாகப் பிறரிடம் பாய்ச்சக்கூடிய தன்மையுடையவர் என்பதை உணர்ந்தார். இந்த ஆன்மீக அனுபவம், பகவானிடம் அவருக்கிருந்த நம்பிக்கையை மேலும் அதிகரிக்கச் செய்தது. அவருக்கு அஜீரணக் கோளாறு இருந்தது. அதைப் பற்றி பகவானிடம் தெரிவித்தபோது, மீண்டும் அவரை ஒருமுகப்பட்ட நோக்கோடு பகவான் பார்த்தார். உடனே புத்தியில் ஒரு குளிர்ச்சியை அவர் உணர்ந்தார். சில நாட்களுக்குள், விழா நாள் ஒன்றில், எச்சம்மாள் நெய்யில் செய்யப்பட்ட இனிப்புப் பண்டங்களையும், பலவித பலகாரங்களையும் பகவானுக்காக எடுத்து வந்தார். உடன் இருப்பவர்கள் அனைவரோடும் உணவைப் பகிர்ந்து கொள்ளும் பழக்கமுடைய பகவான், ஐயரையும் அழைத்து வரும்படி கூறி, எச்சம்மாளை அனுப்பி வைத்தார். தனது அஜீரணக் கோளாறுக்குப் பயந்து, “என்னால் இத்தனை புஷ்டியான ஆகாரங்களை உண்ணமுடியாது. பகவானிடம், என்னை மன்னிக்குமாறு கூறுங்கள்” என எச்சம்மாளிடம் பதில் அனுப்பினார் அவர். “என்னுடன் இனிப்புகளைப் பகிர்ந்து கொள்ளுங்கள்” என பகவான் அவரை வற்புறுத்தவே, பகவானுக்குக் கீழ்ப்படிந்து, வேறு எதுவும் யோசிக்காமல் அந்த

உணவை ஏற்று உண்டார். அதன்பிறகு அவரது அஜீரணக் கோளாறு முழுமையாகக் குணமாகிவிட்டது. தன்னைக் குணப்படுத்திய பகவானுக்கு அவர் கூற எண்ணிய நன்றி பாடலாக,

பேருதவியை என்னென்று சொல்லல் ஆகும்
ஐயா நின் அருள் தரும்
பேருதவியை என்னென்று சொல்லல் ஆகும்
அரும் அளி, கிளி, அணில், மயில், குரங்கிற்கும்
அழையாமலே இரங்கும் விழைமன நிறைவே நின்
பேருதவியை என்னென்று சொல்லல் ஆகும்
ஐயா நின் அருள் தரும்
பேருதவியை என்னென்று சொல்லல் ஆகும்

என்பதாக வெளிவந்தது. ஊருக்குள் வாழ்ந்து வந்த ஐயரின் குடும்பத்தினர், அவர் பகவானுடன் தினமும் இரவில் தங்குவதை எதிர்த்து வந்தனர். பகவான் அவரது நோயைக் குணப்படுத்திய அதிசய செய்தியறிந்த பின், அவர்களுக்கும் பகவானிடம் நம்பிக்கை வளர்ந்தது.

ஐயர், வட இந்தியாவிலுள்ள பெராம்பூர் என்னுமிடத்-திற்கு மாற்றப்பட்டார். மிகுந்த மன வருத்தத்துடன் அங்கு சென்ற அவருக்குக் கால்களில் வேதனையளிக்கக் கூடிய கொப்பளங்கள் வந்தன. அறுவை சிகிச்சை உட்படப் பலவிதமான சிகிச்சைகளும் பயன் தரவில்லை. தாங்க முடியாத வேதனை இருந்தபோதும் அவர் அலுவலகத்திற்குச் செல்ல வேண்டியிருந்தது. பகவானிடம் தனக்கு உதவி செய்யுமாறு தீவிர ப்ரார்த்தனை செய்தார். மறுதினம் காலையில், யாரோ வாயில் கதவைத் தட்டுவதைக் கேட்டுக் கதவைத் திறந்தபோது, இரண்டு சாதுக்கள் வெளியில் நின்று கொண்டிருந்தனர். “நாங்கள் தீர்த்த யாத்திரையாக அருணாசலத்திலிருந்து வந்துள்ளோம். நாங்கள் கிளம்பும் முன், பெராம்பூரில் உங்களைப் பார்த்துவருமாறு பகவான்

கூறியனுப்பினார்'' என்று தெரிவித்தனர். ஐயர் அவர்களை அன்போடு வரவேற்றார். அவர் கொப்பளங்களால் வேதனை அனுபவிப்பதை உணர்ந்த சாதுக்கள், புளி, ஸாம்பிராணி இவை கொண்டு தயாரிக்கப்பட்ட ஆயர்வேதப் பசையைப் புண்ணில் தடவினார்கள். மறுதினமே ஐயர் பூரணமாகக் குணமடைந்தார். பக்தி பரவசத்தால், அவரிடமிருந்து அப்போது வெளிப்பட்ட, 'சரணாகதி' எனத்துவங்கும் அப்பாடல், இன்றும் பகவானது பக்தர்களுக்கு மிகவும் விருப்பமான ஒன்றாக உள்ளது.

**சரணாகதி பாடல்**

**பல்லவி**

சரணாகதி உன் பர நான்
இனிப்புகத் துணை தான் ஏது
நீ புகலாய் (சரணாகதி)

**அனுபல்லவி**

ஸ்மரணாத் கதிபல அருணாசல நிறை
ரமணா கருணா வருணா (சரணாகதி)

**சரணம்**

தருணம் இதுவன்றோ கருணை நோக்கவே
கால ஹரணம் ஆக்கிடில் ஹா ஹா என் செய்வேன்!
துன்பை நீக்கி இன்பை அளிக்க என் அன்பா
இன்னும் பாராமுகம் என்னால் தாளாதய்யா
ஸ்ரீ வேதியா (சரணாகதி)

நான் ஐயருடன் மிகவும் நெருக்கமாக இருந்தேன். ஒருமுறை, இந்தப் பாடலைக் குறித்து அவர் என்னிடம் பேசினார். "கணேசன்! இந்தப் பாடல் காரணமாக என் நோய் குணமாகவில்லை. ஏற்கனவே நான் குணமடைந்திருந்தேன். நானாகப் பாடவேண்டுமென்று எண்ணி இருந்தால், நோயைக் குணப்படுத்தியதற்கு நன்றி கூறி மட்டுமே பாடியிருப்பேன். ஆனால் பாடலைப் பாருங்கள். 'உனது அருட்பார்வையை என்

மீது செலுத்த இது சரியான தருணமன்றோ? நீ தாமதம் செய்தால் நான் என்ன செய்வேன்? என் அன்பே! என் துயரைத் துடைத்து, ஆனந்தம் அளிப்பாய். நீ பாராமுகமாக இருப்பதை, என்னால் இனியும் தாங்க முடியாது' என்று உள்ளது. இது, அதிசயம் நிகழ்ந்த பின் தானாக வெளிவந்துள்ளது. என்ன அழகு பாருங்கள்!'' என்று கூறித் தொடர்ந்து, மாணிக்கவாசகர், மீரா, துக்காராம் போன்ற பக்தர்களின் பாடல்களை உதாரணமாகக் கூறினார். ''பகவானின் அருளைப் பெற்ற பின்தான், 'இந்த இழிவான நாய்க்கு அருள் புரியவேண்டும்' என அவர்கள் எழுதியுள்ளனர்; அருள் பெறும் முன் எழுதவில்லை'' என்று உரைத்து மேலும் தொடர்ந்தார். அருணாசல பதிகத்தில் 3வது பாடலான

இறையுனை நினையும் எண்ணமே நண்ணா
எனையுனது அருட்கயிற் றாலீர்த்து
இறையுயி ரின்றிக் கொன்றிட நின்றாய்
என்குறை யியற்றனன் ஏழை
இறையினிக் குறையென் குற்றுயிராக்கி
எனைவதைத் திடலெதற்கு இங்ஙன்
இறைவனாம் அருணா சலவெணம் முடித்தே
ஏகனா வாழி நீடூழி

-என்பதனைக் கூறி ''என்னைப் பகவான் ஏற்கனவே கொன்றுவிட்டார். இருப்பினும் இந்தப் பாடலை எழுத வைத்துள்ளார். மாணிக்கவாசகர், 'நான் மஹா பாவி. என்னைக் காக்க வேண்டும்' என எழுதியது எதற்காக? அவரது ப்ரார்த்தனைகளின் பலனாக அவருக்கு ஏற்கனவே இறைவன் அருள் கிட்டிவிட்டது. அக்ஷரமணமாலையில்,

'விட்டிடிற் கட்டமாம் விட்டிடாதுனை உயிர்
விட்டிட அருள் புரி அருணாசலா' (96ஆம் பாடல்)

என்று பகவான் பாடியுள்ளார். இவை ப்ரார்த்தனை-களாகத் தோன்றுகின்றன. எனவே பலருக்கும் இந்த சந்தேகம் எழுந்துள்ளதால், ‘பகவானே! நீங்கள் ஒரு ஞானி. அப்படி இருக்கும்போது, ‘என்னைக் காப்பாற்று. படுகுழியில் விழுமாறு செய்துவிடாதே’ என்றெல்லாம் ஏன் எழுதியுள்ளீர்கள்’ என்று அவரிடம் கேட்டுள்ளனர். அதற்கு பகவான் அளித்த பதில், ‘ப்ரார்த்தனை ஏற்கனவே செய்யப்பட்டுவிட்டது’. பகவான் அருளுக்காக நாம் முதலிலேயே ப்ரார்த்தித்திருக்க வேண்டும். கருணையே உருவானவர் பகவான். ஆதலால் நாம் பின்னர் ப்ரார்த்தனை செய்தாலும், முதலில் அவன் அருளைப் பொழிந்துவிட்டுப் பின்னர் நமது ப்ரார்த்தனையை ஏற்றுக் கொள்கிறான்’’ என பகவான் சொன்னதாக ஐயர் கூறினார்.



மணவாஸி குடும்பத்தினருடன் பகவான்

1922இல், பகவான் ஐயரை மரணத்தில் இருந்து காப்பாற்றியுள்ளார். இந்த அதிசய நிகழ்வை நேரடியாகக் கண்ட கபாலி சாஸ்திரி, அவர் எழுதிய புத்தகத்தில் இவ்வாறு கூறியுள்ளார். “மகரிஷி ஸ்கந்தாச்ரமத்தில் இருந்த சமயம்; நாங்கள் சிலர் அவருடன் கிரிவலத்திற்குச் செல்வது வழக்கம். அன்றும் கிரிவலத்திற்குப் புறப்படும்போது, ராமஸ்வாமி ஐயர் திடீரென உடல் நலம் குன்றிய நிலையில் விரூபாக்ஷ குகையில் உள்ளதாகச் செய்தி கிடைத்தது. பகவான் உடனே மலையிலிருந்து இறங்கி அவர் படுத்துக் கிடந்த இடத்திற்குச் சென்றார். ஐயருடைய இதயம் கடுமையான வேகத்தில் துடித்துக் கொண்டிருந்தது. பகவான் அவர் அருகில் அமர்ந்து, தன் கையை ஐயரின் தலை மேல் வைத்தார். ஐந்து நிமிடங்களில் அவர் எழுந்து சாதாரண நிலைக்கு வந்துவிட்டார். அவர் அருகில் உட்கார்ந்திருந்த பகவானோ ஒரு மணி நேரம் ஆகியும் எழுந்திருக்காமல் அமர்ந்தபடியே இருந்தார். ஸ்கந்தாச்ரமத்தில் இருந்த என் பையில் ஆலிவ் எண்ணெய் வைத்திருந்ததால், ஓடிச்சென்று அதை எடுத்து வந்து பகவானின் தலையில் நன்கு தேய்த்துவிட்டேன். அதன்பின் எல்லோரும் ஸ்கந்தாச்ரமத்திற்குத் திரும்பினோம். ‘என்னவாயிற்று பகவானே?’ என நான் கேட்டதற்கு, ‘ராமஸ்வாமி ஐயர் எழுந்துவிட்டார்; நான் உட்கார்ந்துவிட்டேன். தலையில் எண்ணெய் தேய்க்கப்படுவதை நான் உணர்ந்தேன். அது மிகவும் இதமாக இருந்தது’ என்று மட்டும் கூறினாரே தவிர, தன்னால் அற்புதம் நிகழ்த்தப்பட்டதென்றோ, வேறு விதத்திலோ விளக்கம் தரவில்லை” என கபாலி சாஸ்திரி எழுதியுள்ளார்.

1942ஆம் ஆண்டில், ஐயர் மீண்டும் மரணத்தின் வாயிலிருந்து காப்பாற்றப்பட்டார். ஒருநாள், அவரது மனைவி பகவானிடம் ஓடிவந்து, அவர் வீட்டில் நினைவற்றுக் கிடப்பதாகவும், காப்பாற்ற வேண்டுமென்றும் ப்ரார்த்தித்தாள்.

அந்த நொடியிலேயே ஐயர் விழித்து எழுந்துகொண்டார். பல ஆண்டுகளுக்குப் பிறகு இந்நிகழ்ச்சி பற்றிக் கேட்ட என்னால் அதை நம்பமுடியவில்லை. அதனால் நேரில் ஐயரைக் கண்டு, "நீங்கள் மரண வாயிலில் இருக்கும் போதெல்லாம் பகவான் உங்களைக் காப்பாற்றியதாகக் கூறுகிறார்களே! அது எவ்வாறு சாத்தியமாகும்?" என்று கேட்டேன். "என்ன செய்வது கணேசா! அதுதான் நடந்தது. பகவான் என்னை மட்டும் மரணத்திலிருந்து காப்பாற்றவில்லை. உண்மையான பக்தர்கள் பலரை மரணத்தின் பிடியிலிருந்து விடுவித்துள்ளார்" என்று கூறி ஒரு பட்டியலே தந்தார் - ஐயரின் மகள், அவரது நண்பர் சுப்ரமண்ய சாஸ்திரியின் மகள், ஜகதீச சாஸ்திரி, பகவானது சொந்தத் தங்கையின் கணவர், மற்றும் எனக்குத் தெரியாத சிலர் - பகவானின் அருளுக்குப் பாத்திரமாகியுள்ளனர்.

ஐயருக்கு ஐந்து பெண்களும் ஒரு மகனும் இருந்தனர். அவருடைய குடும்பத்தின் மீது பகவான் மிகுந்த அக்கறை காட்டினார். குடும்பத்தில் உள்ள அங்கத்தினர் ஒவ்வொருவரும் பகவானிடம் முழுமையான பக்தி கொண்டிருந்தனர். நான் ஆச்ரமத்திற்கு வந்த பின்னர், அவர்களைப் பற்றியும், பகவானுக்கும் அவர்களுக்கும் இருந்த தொடர்பு குறித்தும் மேலும் அறிய விரும்பினேன். 'மௌண்டன் பாத்' பத்திரிகைக்-காக, மும்பையில் இருந்த, ஐயரின் மகள் ஒருவரைப் பேட்டி காணச் சென்றிருந்தேன். லலிதா வெங்கடராமன் என அழைக்கப்பட்ட அவர் ப்ரபலமான பாடகி. பகவான் விரூபாக்ஷ குகையில் இருந்த நாள் முதல், அவர்கள் ஒவ்வொருவருக்கும் பகவானுடன் எத்தகைய தனித்தன்மை வாய்ந்த உறவு இருந்தது என்பது குறித்து என்னிடம் பல விஷயம் கூறினார். அவர்கள் அனைவருமே பகவானைக் கடவுளாகத்தான் பார்த்தனர். குடும்பம் முழுவதும் அருணாசலத்தை விட்டு வேறு எங்காவது செல்ல வேண்டியிருந்தால், அனைவரும் பகவான் முன்னர் நின்றுகொண்டு, 'சரணாகதி' என்ற பாடலைக்

கோஷ்டி கானமாக இசைப்பார்கள். இதன் காரணமாக மேற்கூறிய பாடல், இருபது ஆண்டுகளாகப் பகவான் முன் அடிக்கடி பாடப்பட்டு வந்தது'' என்று இந்தத் தகவல்களைத் தெரிவித்த லலிதா வெங்கடராமன், ''உண்மையைச் சொன்னால், சரணாகதி ராமஸ்வாமி ஐயர் அல்லது சரணாகதி தாத்தா என்ற பெயராலேயே எனது தந்தை எல்லோராலும் அழைக்கப்பட்டார். எனது கணவர் வட இந்தியாவில் பணியாற்றி வந்ததால், எனது திருமணத்திற்குப் பின், நான் அருணாசலத்திற்கு எப்பொழுதாவதுதான் வரமுடிந்தது. நான் ஆச்ரமத்திற்கு சென்ற போதெல்லாம் பகவான் முன் வீணையை இசைத்து பாடவும் செய்வேன். பகவானும் சிரித்தபடி அனுபவித்துக் கேட்பார். ஒரு சமயம், நீண்ட இடைவெளிக்குப்பின் நான் ஆச்ரமத்திற்குள் நுழைந்தபோது, 'அதோ பார்! இன்று காலையில்தான் இவள் குரலை வானொலியில் கேட்டோம். இப்போது நேரிலேயே வந்து நிற்கிறாள்!' என அங்கு கூடியிருந்தவர்களிடம் பகவான் தெரிவித்தார். நான் பகவான் பெயரில் பாடியிருந்த இரு பாடல்களை ஒலிப்பதிவு செய்திருந்தனர். அவற்றில் ஒன்றை அன்று ஒலிபரப்பி இருப்பார்கள் என நினைக்கிறேன்'' எனக் கூறினார்.

தொடர்ந்து பேசிய அவர், ''குழந்தைப் பருவத்தில், விரூபாக்ஷ குகையில் நான் பகவானோடு விளையாடி இருக்கிறேன். இருந்தாலும், எனது தமக்கை ராஜம், குழந்தையாக இருந்தபோது பகவான் அவளைச் செல்லமாக நடத்துவார். அவளுக்கு தலை பின்னி விடுவார். அவளது விளையாட்டுப் பொருட்களை வைத்துக்கொண்டு இருவரும் விளையாடுவார்கள். என் தமக்கைக்கு பகவானை மிகவும் பிடிக்கும். அதனால், வீட்டில், ருசியாகவோ, விசேஷமாகவோ உண்பதற்கு ஏதாவது தனக்குக் கிடைத்தால், உடனே அதை எடுத்துக்கொண்டு, பகவானோடு பகிர்ந்துகொள்ள, விரூபாக்ஷ

குகைக்கு ஓடிவிடுவாள். ஒருமுறை, பிரத்தியேகமான ரகத்தைச் சேர்ந்த நெல் கிடைத்தது. வீட்டிலேயே அதைக் குத்தி அரிசியாக்கினார்கள். அந்த ரக தவிடு இனிப்பாகவும், ருசியாகவும் இருப்பதோடு ஆரோக்யத்துக்கும் உகந்தது என்று நெல்லைக் குத்திய பெண் கூறியவுடன், என் தமக்கை கை நிறையத் தவிட்டை அள்ளிக் கொண்டு, பகவானிடம் கொடுப்பதற்கு ஓடிவிட்டாள். அகால நேரத்தில் ராஜத்தைக் கண்ட பகவான், “எனக்கு ஏதாவது எடுத்து வந்திருக்கிறாயா?” என்று கேட்டார். பின் இருவருமாக அவள் கொண்டு வந்திருந்த தவிட்டை உண்டனர். வேறு சில பொருட்களையும் உடன் சேர்த்து உண்டால், அது மேலும் ருசியாக இருக்குமென்று பகவான் அவளிடம் கூறினார். பகவானிடம் அவளுக்குச் சலுகைகள் அதிகம். தான் கடவுளோடு இருப்பதை அவள் எப்போதும் உணர்ந்திருந்தாள். வாழ்க்கையில் ஒவ்வொரு நொடியிலும் பகவானை அவள் வழிபட்டு வந்தாள்” என்று கூறிச் சற்று நிறுத்தினார்.

சிறிய இடைவெளிக்குப் பின், “என் தமக்கை ராஜம் அழகாகச் சித்திரங்கள் வரைவாள். முறைப்படி சித்திரக்-கலையை யாரிடமும் அவள் கற்கவோ அல்லது கலைப்பள்ளிகளில் பயிலவோ இல்லை என்றபோதும், அவளது சித்திரங்கள் உயிரோட்டத்துடனும், வாழ்க்கையைப் பிரதிபலிப்பவையாகவும் இருந்தன. பெரியவளான பின்பு தெய்வங்களின் படங்களை அவள் வரைந்து பகவானிடம் காட்டுவாள். அவர், அவற்றை மிகவும் பாராட்டுவார். ஒருமுறை, மணமான பெண்களால் வணங்கப்படுபவளும், அன்னை என்ற தத்துவத்தைக் குறிப்பவளுமான அம்பாள் வரலக்ஷ்மியின் படத்தை ராஜம் வரைந்திருந்தாள். சிறப்பாக இருந்த அப்படத்தை அச்சிட்டு அனைவருக்கும் வழங்குமாறு ஆலோசனையளித்தார் பகவான். ராஜம் எப்படியோ தேவையான பணத்தை வசூலித்துப் படத்தை அச்சிடவும்

செய்தாள். 1940–50ஆம் ஆண்டுகளில் ஆசாரத்தோடு வாழ்ந்த பல பிராம்மணர்களின் பூஜை அறையை அப்படம் அலங்கரித்தது” என்றார். பின்னர், தனது பூஜை அறைக்கு என்னை அழைத்துச் சென்று, அங்கிருந்த, ராஜம் தீட்டிய இரு சித்திரங்களை லலிதா வெங்கடராமன் எனக்குக் காட்டினார். அவற்றில் ஒன்று மதுரை மீனாக்ஷி அம்மனுடையது; மற்றொன்று பரம பக்தரான தியாகராஜ ஸ்வாமிகளுடையதும் ஆகும். அப்போது, நான் ஏற்கனவே ஸ்கந்தாச்ரமத்தில் பார்த்திருந்த, மயில் மீது அமர்ந்திருந்த பகவானின் படத்தைப் பற்றிய நினைவு எழுந்தது. அதன் அடியிலும் ‘ராஜம்’ என்று கையெழுத்து இருந்தது.



வரலக்ஷ்மி அம்மன் சித்திரம்

வாழ்நாள் முழுவதும் ஆர்வத்தோடு கூடிய ஒரு பக்தராக இருந்தார் ஐயர். பகவான் என்ற பெயர் காதில் விழுந்த உடனேயே, அவரது கண்களில் ‘பொல பொல’-வென்று கண்ணீர் பெருகத் துவங்கிவிடும். 1922-ஆம் ஆண்டு, அன்னை அழகம்மாள், ஸ்கந்தாச்ரமத்தில் முக்தியடைந்த சமயம், அங்கு இருக்கும் பேறு ஐயருக்குக் கிடைத்தது. பகவான் அன்னைக்கு முக்தி நல்கும் வகையாக, தனது புனிதக் கரங்களை அவர் தலையிலும் மார்பிலும் வைத்தபடி இருந்த சமயத்தில் ஐயர் ராம நாமத்தை ஓதியவாறு இருந்தார்.

பகவானின் அருட்செயலை நேரிடையாகக் கண்டவர் ஐயர். அன்னை அழகம்மாளின் சடலத்தைச் சுமந்துகொண்டு, மலையிலிருந்து, கீழே தற்போதுள்ள ஸமாதிக்கு எடுத்து வந்தவர்களுள் ஐயரும் ஒருவர். பத்தாவது நாள் ஸமாதியின் மேல் லிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டது. புத்தர், ஏசுநாதர், ஆதி சங்கரர் இவர்களின் அன்னையரைவிடப் பெருமை வாய்ந்தவர் அழகம்மாள் என்ற பொருளில் அன்னையைப் போற்றி ஸம்ஸ்கிருத ஸ்லோகம் ஒன்றை, காவ்ய கண்டர் அப்போது இயற்றினார். ஒரு மூலையில் அமர்ந்து மிகுந்த கவனத்துடன் அதைச் செவிமடுத்த ஐயரை அழைத்து, தமிழில் ஒரு கீர்த்தனத்தைப் பாடுமாறு பகவான் தூண்டினார். அவர் துயரில் மூழ்கியிருந்த போதும் பகவானுக்குக் கீழ்ப்படிந்து பாடலை இயற்ற முற்பட்டார். தானாகவே இதயத்தில் உதித்த அதை ஒரு காகிதத்தில் எழுதிப் பகவானிடம் சேர்த்தார் ஐயர். பகவான், அந்த கீர்த்தனத்தைப் பாடும்படி கூறினார். பாடும்போது, அப்பாடல் எத்துணை அழகாக அமைந்துள்ளது என்பதைக் கண்டு ஆச்சரியம் அடைந்தார் ஐயர்.

1950இல், பகவான் ப்ரம்ம நிர்வாணம் அடைந்த சமயத்தில், பகவானுடைய ஜோதி, ஒளிமயமான எரி நக்ஷத்திரம் போன்று வானில் நகர்ந்து அருணாசலத்துடன் கலப்பதை ஐயர் கண்டார். கி.வா.ஜகந்நாதன் போன்று,

அவரைப் பெரிதும் மதித்தவர்கள், ஐயரை உயர்ந்த ஞானியின் ஸ்தானத்தில் வைத்துப் பூஜித்தனர். 1960இல், தமிழ் நாட்டில் பெரிய எழுத்தாளராக விளங்கியவர் கி.வா.ஜகந்நாதன்.

ஐயர் உடல் நலமின்றி ஆச்ரமத்திற்கு எதிரில் இருந்த வீட்டில் இருந்த போது, அவரைக் காணத் தன்னை அழைத்துச் செல்லுமாறு என்னிடம் கூறினார். ஐயரைப் பார்த்த அந்த க்ஷணத்திலேயே இரு கைகளையும் தன் தலைமேல் கூப்பியவாறு, 'ஈச்வரா ஈச்வரா' என உணர்ச்சி பொங்கக் கூறியவாறு, கண்களில் நீர் பெருக அவரைச் சுற்றிச் சுற்றி வலம் வந்தார். பிறகு இதயத்தில் தானாக எழுந்த செய்யுட்களால் ஐயரைப் புகழ்ந்து பாடினார். அது ஒரு அற்புதமான காட்சி!

பக்தர்கள் பரவச நிலையில் உணர்ச்சி பொங்கக் கண்ணீர் பெருக்குவார்கள் என்பதை அதுவரை கேட்க மட்டும்தான் செய்திருந்தேன். அன்று நேரிலேயே காணும் பேறு கிட்டியது. திரும்பி வரும் வழியில் கி.வா.ஜகந்நாதன் என்னை ஆசீர்வதித்து, "கணேசன்! ஐயரைப் பூஜியுங்கள்; அவரது ஆசிகளைப் பெறுங்கள். வெகு சாதாரணமாகத் தோன்றும் ஆத்மஞானி அவர். அவரது ஆசிகளைப் பெறுவதற்கான இந்த வாய்ப்பை நழுவ விடாதீர்கள். அது உங்களை ஆன்மீகப் பாதையில் வெகுதூரம் அழைத்துச் சென்றுவிடும்" என்று கூறினார். அந்த அறிவுரைகளின் பயனாக, ஐயரின் ஆசீர்வாதங்களைப் பெற்ற பாக்கியசாலியாக நான் இருந்தேன்.

சென்னையில், மிகவும் அமைதியான முறையில் ஐயர் உடலை உகுத்தார். மார்பில் கைகளை வைத்து, விழிகளின் ஓரத்திலிருந்து கண்ணீர் வழிய அவர் இருந்த நிலை, பகவானை இதயத்தில் கண்டுகொண்டிருக்கிறார் என்பதைக் கூறாமல் கூறியது. அவரது மூச்சு மெதுவாக அடங்கியது.

மணவாஸி ராமஸ்வாமி ஐயர் அருணாசலத்துடன் நிரந்தரமாக இரண்டறக் கலந்தார்.






மயில் மேல் பகவான் அமர்ந்திருக்கும் சித்திரம் –
ராஜம் வரைந்தது



விரூபாக்ஷி குகையில் பகவான்

# ஃப்ராங்க் ஹம்ஃப்ரீஸ்



ஒருமுறை, பகவானைப் பார்ப்பதற்காக ஒருவர் விரூபாக்ஷ குகைக்கு வந்தார். ஒரு வாரம் மட்டும் தங்கி இருந்தார். அந்தக் காலக் கட்டத்தில், ஸ்ரீ பகவானைப் புகழ்ந்து நான்கு பாடல்களை இயற்றிப் பாடினார். அவர் தன்னுடைய பெயர் வெங்கட்ராம ஐயர் என்றும், தான் திருவண்ணாமலைக்கு பக்கத்தில் உள்ள சத்தியமங்கலம் என்ற சிறு கிராமத்தில் இருந்து வருவதாகவும் கூறினார். பின்னால், 'ரமண ஸத்குரு' என்ற பெயர் பெற்ற, தனது ஐந்தாவது பாடலை அனுப்பினார். பகவான் அந்த ஐந்து பாடல்களைப் படித்தபோது அவைகளின் சிறப்பில் ஆழ்ந்தார். அப்போதிலிருந்து, தமிழ் மொழி பேசும் பகவானின் பக்தர்கள், அந்தப் பாடல்களைப் பாடிக் கொண்டிருக்கின்றார்கள். பகவானின் பழைய பக்தர்கள், சத்திய-மங்கலத்திற்குச் சென்று, வெங்கட்ராமய்யரைச் சந்திக்க முயன்ற போது, அந்தக் கிராமத்தில் இருந்த எவருக்கும் அவரைப் பற்றி தெரியாமல் இருந்தது விந்தையாக இருந்தது! இதைப்பற்றி பின்னால் பக்தர்கள் உரையாடிக் கொண்டிருக்கும்-போது, தேவராஜ முதலியார், "விரூபாக்ஷ குகையில் இருக்கும்போது, பகவான், அருணாசலத்தைப் போற்றி ஐந்து பாடல்களை எழுதியுள்ளார்" என்று கருத்து உரைத்தார். அதற்கு முருகனார், "அப்பன் அருணாசலம் அதற்குத் தன்னுடைய நன்றியைத் தெரிவிக்கும் பொருட்டு, 'வெங்கட்ராமய்யர்' எனும் மனித உருவில் வந்து, ஐந்து பாடல்களைப் பகவான் மேல் பாடினார் என்று கூறினார்.

'ரமண ஸத்குரு'வில் உள்ள ஒரு செய்யுள், 'பகவான் கோடிக்கணக்கான மக்கள் விடுதலைப் பெறுவதற்காகத் தன்னுடைய 'ஞானம்' என்னும் கொடியை ஏற்றியுள்ளார் என்று பறைசாற்றுகிறது. 'கோடிக்கணக்கு' என்றால் என்ன? ஒன்று என்ற எண்ணைத் தொடர்ந்து பல பூஜ்ஜியங்களைக் கொண்ட ஒரு இலக்கமாகும். இருப்பு இல்லாத

அத்தனைப் பூஜ்ஜியங்களையும் நீக்கினால் இருப்பது ஒன்று என்ற எண் மட்டுமே. அதேபோன்று, கோடிக்கணக்கில் உள்ள ஒவ்வொரு தனிமனிதனின் அகங்காரத்தையும் நீக்கினால் மீதம் இருப்பது 'ஒன்று' மட்டும்தான். அந்த 'ஒன்றே' அருணாசலம்; அந்த ஒன்றே பகவான் ரமணர்; அந்த ஒன்றே ஒவ்வொரு தனி ஜீவனும் ஆகும். நாம் நினைக்கும், ராம் ரஹிம், ரோனால்டு என்ற பேதங்கள் அல்ல. நாம் எல்லோரும் எல்லாவற்றிற்கும் மூலமான தெய்வத் தன்மையே என்பதை நினைவுபடுத்தவே பகவான் அவதாரம் செய்தார். அவர் ஒருவரையும் ஆண், பெண் அல்லது மிருகங்களாக இருந்தாலும், தன் கருணை வட்டத்திலிருந்து விலக்கவில்லை. இதுவரை அவருடைய பக்தர்கள் அனைவரும் இந்துசமயத்தைச் சேர்ந்தவர்களாகவே இருந்தனர். அவருடைய போதனைகள் நாடுகள், சமயங்கள் என்ற வேற்றுமைகளைக் கடந்து பரவ வேண்டிய காலம் வந்துவிட்டது. உலகத்தின் எல்லா மூலைகளிலிருந்தும் அவரை நாடி வந்த ஆயிரக்கணக்கானவர்களின் நம்பிக்கைகளைக் குலைக்காமல் அது பரவவும் செய்தது.

ஃப்ராங்க் ஹம்ஃப்ரீஸ் என்பவர் ஆங்கிலேய காவல் துறையைச் சேர்ந்த இளவயது அதிகாரி. அவர் ஒரு கத்தோலிக்க கிறிஸ்தவர். இங்கிலாந்திலிருந்து மாற்றல் செய்யப்பட்டு, தற்போது மும்பை என்றழைக்கப்படும் பம்பாய்க்கு, மிகுந்த காய்ச்சலுடன் வந்து, அங்கு மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டார்.

மனோரீதியான சித்துக்களைப் பெற்றிருந்த அவர், மருத்துவமனையில் அதிக வலியினால் அவதிப்படும் சமயத்தில், அதிலிருந்து விடுபடுவதற்காக அந்த சக்திகளை உபயோகப்படுத்துவார். அப்போது தன்னுடைய ஸூக்ஷ்ம உடலில், அவர் மாற்றம் செய்யப்பட்டிருந்த திருவண்ணாமலைக்கு அருகிலுள்ள வேலூர் என்னும் நகருக்குச் சென்று, அவ்விடத்துக்குரிய தெலுங்கு மொழியை அவருக்கு கற்றுத் தருவதற்காக, நியமிக்கப்பட்ட தெலுங்கு ஆசிரியர் நரசிம்மையா என்பவரைப் பார்த்தார். பின்னால் வேலூரை

அடைந்தபொழுது, நரசிம்மய்யா தன்னை அவரது தெலுங்கு ஆசிரியர் என்று அறிமுகப்படுத்திக் கொண்டபோது, 'எனக்குத் தெரியும்' என்று கூறினார். ஆச்சரியமடைந்த ஆசிரியர், 'எப்படித் தெரியும்?' என்று கேட்டபோது, 'நீங்கள் பம்பாய்க்கு வராவிட்டாலும், நான் நுண்ணுடலில் பயணம் செய்து உங்களைச் சந்தித்தேன்' என்று கூறினார் ஹம்.ஃப்ரீஸ். நரசிம்மய்யா பல ஆங்கிலேயர்களுக்கு ஆசிரியராக இருந்திருக்கிறார். அவர்களில் பலருக்கும் ஆன்மீக நாட்டம் இருக்கவில்லை. ஹம்.ஃப்ரீஸ் இயற்கைக்கு மாறான அறிவு உடையவர் என்று எண்ணினார் ஆசிரியர்.

பின்பு, ஹம்.ஃப்ரீஸ், நரசிம்மைய்யாவிடம், 'நான் இந்து சோதிடத்தை ஆங்கிலத்தில், படிக்க விரும்புகிறேன். உங்களால் எனக்கு உதவி செய்ய முடியுமா?' என்று கேட்டுக்கொண்டார். நரசிம்மையா இது மற்றுமொரு அறிவு மாறாட்டத்திற்கான அறிகுறி என அனுமானித்து அதற்கு முக்கியத்துவம் தரவில்லை. இதை உணர்ந்து கொண்ட ஹம்.ஃப்ரீஸ், தொடர்ந்து, "இங்கு யாராவது சிறந்த மஹான்கள் இருக்கின்றனரா?" என்றார். இந்தக் கடைசிக் கேள்வி நரசிம்மையாவைத் திடுக்கிடச் செய்தது. நரசிம்மய்யா ஹம்.ஃப்ரீஸ்ஸைச் சோதிக்க நினைத்தார். பதில் ஏதும் சொல்லாமல் சென்றுவிட்டார். மறுதினம், பல சாதுக்கள், சந்நியாசிகள் இவர்களின் புகைப்படங்களை எடுத்துக்கொண்டு ஹம்.ஃப்ரீஸ்ஸின் அறைக்குச் சென்றார். அங்கு யாரும் இல்லாததால், அங்கு இருந்த மேசையின் மீது அவற்றை வைத்துவிட்டுச் சென்றுவிட்டார். அவர் திரும்பி வந்து பார்த்தபோது, ஹம்.ஃப்ரீஸ்ஸும் திரும்பி வந்துவிட்டார். அந்தப் புகைப்பட குவியலிலிருந்து ஒன்றை எடுத்து, "நரசிம்மய்யா, இவர் உங்கள் குரு இல்லையா?" என்று கேட்டார். அவர் குறிப்பிட்டுக் கூறியது காவ்யகண்ட கணபதி முனியின் புகைப்படம். உண்மையில் காவ்யகண்டர்தான் நரசிம்மய்யாவின் குரு. சிலிர்ப்படைந்த நரசிம்மய்யா, ஹம்.ஃப்ரீஸ் கூறுவதில் உண்மை உள்ளது, இல்லாவிடில் இத்தகைய

ஆச்சரியப்படக்கூடிய பல ஒத்த நிகழ்வுகள் இருக்காது என்று முடிவு செய்தார். ஹம்.ப்ரீஸ், 'நேற்று இரவு உனது குரு எனது கனவில் வந்தார். என் படுக்கையில் என் அருகில் அமர்ந்து என்னால் புரிந்துகொள்ள முடியாத மொழியில் ஏதோ கூறினார்' என்று வெளிப்படுத்தினார். நரசிம்மய்யா இதனால் திருப்தி அடைந்தார்.

துரதிருஷ்டவசமாக ஹம்.ப்ரீஸ் தன் உடல்நலம் குன்றியதால் மலைவாசஸ்தலமாகிய ஊட்டிக்கு அழைத்துச் செல்லப்பட்டு, அங்கு சில மாதங்கள் தங்கினார். திரும்பி வந்தவுடன், நரசிம்மய்யாவிடம், 'நேற்று இரவு எனக்கு ஒரு கனவு வந்தது. நான் சொல்லப்போகும் வார்த்தைகளை நீங்கள் நம்பமாட்டீர்கள் என்பதால், நான் பார்த்ததை வரையப் போகிறேன்' என்றார். பின் அவர் ஒரு மலை, அதன்மேல் ஒரு குகை, அதன் அருகில் ஒரு சிறிய அருவியையும் அங்கு ஒரு சாது நிற்பதையும் வரைந்தார். அது விரூபாக்ஷ குகை, ரமண மகரிஷி இவர்களைக் குறிப்பிடுவதாக இருந்தது. நரசிம்மய்யா வாயடைத்துப் போனார். ''இவர் என் குருவின் குரு'' என்றார். ஹம்.ப்ரீஸ்ஸிடம் முழுவதும் திருப்தி அடைந்து, அவரை பகவானிடம் அழைத்துச் செல்ல விரும்பினார். அப்போது வேலூரில் இருந்த காவ்யகண்ட கணபதி முனிக்கு அவரை முதலில் அறிமுகம் செய்து வைத்தார். காவ்யகண்டர், இருபத்தியோரு வயதே நிரம்பிய, அந்த உயர் பதவியிலிருந்த ஆங்கிலேய போலீஸ் அதிகாரியைப் பார்த்து ஆச்சரிய-மடைந்தார். காவ்யகண்டர் பங்கேற்க வேண்டிய 'தியஸா.பிகல் ஸொஸைட்டி' மாநாடு திருவண்ணாமலையில் நடக்கவிருந்தது. அதனால் மூவரும் திருவண்ணாமலை சென்றனர்.

திருவண்ணாமலையை அடைந்தவுடன் ஹம்.ப்ரீஸ் மிகவும் அமைதியற்றுக் காணப்பட்டார். தான் கனவில் பார்த்த அந்த சாதுவைப் பார்க்க ஆசைப்பட்டார். மூவரும் விரூபாக்ஷ குகைக்குச் சென்று பகவான் முன் அமர்ந்தனர். பகவானின் பார்வை ஹம்.ப்ரீஸ்ஸின் மேல் நீண்ட நேரம் பதிந்திருந்தது. பகவானுடனான தன்னுடைய முதல் சந்திப்பைப் பற்றி ஹம்.ப்ரீஸ் பதிவு செய்துள்ளதாவது:

“நாங்கள் மூவரும் மதியம் 2 மணிக்கு மலைமேல் ஏறி, பகவானைப் பார்க்கச் சென்றோம். விரூபாக்ஷக் குகையை அடைந்து பகவானுடைய காலடியில் அமர்ந்தோம். ஆனால் எதுவும் பேசவில்லை. அங்கு நாங்கள் நீண்ட நேரம் அமர்ந்திருந்தோம். எனக்கு வெளியே நான் வந்துவிட்டதாக உணர்ந்தேன். ஆழ்ந்த சிந்தனையில், மாறுபடாத நிலையிலிருந்த அவரது கண்களையே அரைமணி நேரத்திற்கு உற்று நோக்கியபடி இருந்தேன். இந்த உடல், புனித ஆவியின் திருக்கோயில் என்பதை உணர்ந்தேன். எதிரே இருந்த உடம்பு குருவன்று என்பதை உணரமுடிந்தது. அது இறைவனின் ஒரு கருவி என்றும், அசைவற்று அமர்ந்திருக்கும் ஒரு சவ சரீரம் என்பதையும், அதன் உள்ளிருந்து இறைவனின் சக்தி பேரொளியாகப் பரவுகிறது என்பதையும் என்னால் உணர முடிந்தது. என் உணர்வுகளை விவரிக்கச் சொற்கள் இல்லை. மகரிஷியின் பெருந்தன்மை, மென்மை, தன்னடக்கம், நம்பிக்கையினால் ஏற்பட்ட அமைதியான பலம் இவற்றை வர்ணிக்க இயலாது. அவரது புன்னகைக்கு இணையாகக் கூறுவதற்கு எதுவுமில்லை. அவரது ஸந்நிதியில் ஒருவருக்கு ஏற்படும் மாற்றம் மிகவும் வியப்பிற்குரியது”

இதுவே அந்த இளைஞருக்கு, பகவானிடம் ஏற்பட்ட முதல் அனுபவம். பிறகு பகவானிடம் சில கேள்விகள் கேட்குமாறு காவ்யகண்ட முனி அவருக்கு யோசனை கூறினார். ஆர்வமும், உலகத்திற்கு ஸேவை செய்ய வேண்டும் என்ற விருப்பமும் கொண்ட, துடிப்புள்ள இளைஞரான ஹம்.ஃப்ரீஸ் உடனடியாக அதற்கு ஒப்புக்கொண்டார். அவருடைய முதல் கேள்வி, “பகவானே! நான் உலகத்திற்கு உதவ முடியுமா?” என்பதாகும். அதற்கு பகவான், “உனக்கு நீ உதவி செய்து கொண்டால் அதுவே உலகிற்கு உதவுவதாகும்” என்று பதிலிறுத்தார். அதற்கு ஹம்.ஃப்ரீஸ், ‘நான் உலகிற்கு உதவ ஆவலாக உள்ளேன். என்னால் உதவி செய்ய முடியாதா?’ என்றார். அதற்கு பகவான், “ஆம். உனக்கு உதவி செய்து கொள்வதே, உலகிற்கு உதவி செய்வதாகும். நீ உலகத்தில் இருக்கிறாய். நீயே உலகம் ஆவாய். நீ உலகத்தினின்று மாறுபட்டவன்

அன்று, உலகம் உன்னிலிருந்து வேறானதும் அன்று'' என்று உரைத்தார். ஹம்ஃப்ரீஸ், சிறிது இடைவெளிக்குப் பிறகு, 'குருவே! ஸ்ரீ கிருஷ்ணரையும், குழந்தை ஏசுநாதரைப் போன்றும் என்னால் அற்புதங்கள் நிகழ்த்த முடியுமா?' என்று வினவினார். அதற்கு பகவான், "அவர்களில் யாராவது அந்த அற்புதங்களை நிகழ்த்தும்போது தாங்களே அவற்றை நிகழ்த்தியதாக உணர்ந்தனரா?'' என்று கேட்க, அதற்கு ஹம்ஃப்ரீஸ், 'இல்லை' என்று பகவானது கூற்றை ஏற்றுக்கொண்டார். சித்திகளில் மயங்குவதும், என்னால் அனைத்தும் செய்யப்படுகின்றன என்ற எண்ணமும் தவிர்க்கப்பட வேண்டியவை என்பதை முதன் முறையாக அவருக்குக் கூறாமல் கூறி விளக்கினார் பகவான்.

அவரால் வேலூரில் நீண்ட நாட்கள் தங்க முடியவில்லை. அவரால் முடியும் போதெல்லாம் கடுமையான கோடை வெயிலையும் பொருட்படுத்தாது, தன்னுடைய மோட்டார் சைக்கிளில், பகவானைத் தரிசிக்க விரூபாக்ஷ குகைக்கு அடிக்கடி வருவார். அவர் விரூபாக்ஷ குகையை அடைந்தவுடன் பகவான் அவரிடம் கேட்கும் முதல் கேள்வி, "நீ சாப்பிட்டு விட்டாயா? உனக்கு பசிக்கவில்லையா?'' என்பதுதான். ஹம்ஃப்ரீஸ் எப்போதும் சாப்பிடாமல் வருவதால் பசியுடன் இருப்பார். பகவான் அவருக்கு உணவு கொடுப்பதற்கு உடனே ஏற்பாடு செய்துவிட்டு, மேலை நாட்டவர்கள் உணவை ஸ்பூனால் சாப்பிடுவார்கள் என்பதால், தேங்காய் ஓட்டை வைத்து, ஹம்ஃப்ரீஸ்ஸுக்கு சாப்பிடுவதற்கு சிறிய ஸ்பூனை வடிவமைத்துக் கொடுத்தார். இது ஹம்ஃப்ரீஸ்ஸை இன்னும் வியப்பில் ஆழ்த்தியது. ஒருமுறை சாப்பிட்டு முடித்த பின்னரும் ஹம்ஃப்ரீஸ்ஸுக்குப் பசி தீரவில்லை. பகவான், "நீ இன்னும் பசியோடு இருக்கின்றாய் அல்லவா?'' என்று கேட்டுவிட்டு, இன்னும் அதிக உணவை அவருக்குக் கொடுக்கச் சொன்னார். சாப்பாட்டிற்குப் பிறகு உஷ்ணம் அதிகமாக இருந்ததால் அந்த ஆங்கிலேயருக்கு மிகவும் தாகமாக இருந்தது. ஆங்கிலேயருக்கே உரிய நாகரீகத்தை அனுசரித்த,

ஹம்.ஃப்ரீஸ்ஸால் எதுவும் கேட்க இயலவில்லை. இதைக் குறிப்பால் உணர்ந்த பகவான், பக்தர் ஒருவரைப் பார்த்து, ‘‘அவர் மிகவும் தாகமாக இருக்கிறார். எலுமிச்சம் பழச்சாறு கொடுங்கள்’’ என்று கூறினார். இவற்றையெல்லாம் கண்ணுற்ற ஹம்.ஃப்ரீஸ் பகவானின் அன்பை, ‘ஆன்மீக குரு’ என்ற நிலையில் மட்டுமின்றி பேணிக்காக்கும் தாயின் அன்பாகவும் உணர்ந்தார். பல நேரங்களில் சிறு குழந்தைகள், ஒன்றும் பேசாமலும், விளையாடாமலும், விருபாக்ஷ குகையில் அமைதியாக உட்கார்ந்திருப்பதைப் பார்த்தார். அது அவரைப் பிரமிக்க வைத்தது. சாதாரணமாக அத்துணை நேரத்திற்கு அமைதியுடனும் சாந்தமாகவும் குழந்தைகள் உட்கார்ந்திருப்பதை அவர் பார்த்ததில்லை. உண்மை என்னவென்றால் அந்த குழந்தைகளாலும் பகவானுடைய ‘ஆன்மீக மௌன’த்தை உணர்ந்து கொண்டு அதற்கேற்றவாறு பிரதிபலிக்க முடிந்தது என்பதுதான்.

ஹம்.ஃப்ரீஸ்ஸுக்கு சித்திகளில் ஈர்ப்பு அதிகம் இருந்ததை உணர்ந்த பகவான், அவரை அதினின்று வெளியே கொண்டு வந்து, அவற்றை பழக வேண்டாமென்று அறிவுறுத்தினார். ‘‘சித்திகளை விட மேலான சக்தியை நோக்கிச் செல்’’ என்று அறிவுறுத்தினார். ‘‘உன்னுடைய குறிக்கோள் இதைவிட உயர்ந்ததாக இருக்கவேண்டும். அது மட்டுமின்றி ஒப்புவமையற்றதாக இருக்க வேண்டும். நீதான் ‘சத்தியம்’ என்று உணர்வதுதான் அந்த நிலை. இந்த சித்திகள் அனைத்தும் உன்னைத் தவறான பாதையில் அழைத்துச் செல்லும். அவற்றை விட்டுவிடு’’ என்று அறிவுறுத்திய பகவான், ஹம்.ஃப்ரீஸ் அந்த சித்திகளின் பிடியிலிருந்து விடுபட மிகவும் உதவியாக இருந்தார். ஹம்.ஃப்ரீஸ் மிகவும் உறுதியான சித்தம் உடைய மனிதர். அந்த சக்திகளைப் பெற்றுக் கொள்வதற்கு தகுதி அடைந்ததைப் போல், அவற்றில் இருந்து விடுபடுவதற்கும் பகவான் அளித்த அறிவுரைகளை உறுதியாக நடைமுறைப்படுத்தினார். ஹம்.ஃப்ரீஸ் அவற்றை முழுவதுமாக கைவிட்டபிறகு, பகவான் ஆத்மவிசாரம், சரணாகதி

முதலியவற்றை அவருக்குப் புகட்டி, அவரைத் 'தன்'னிலேயே லயிக்கும் பாதையைக் காட்டி, அகமுகமாக்கினார்.

அவருடைய குருவாகிய ரமண பகவானைப் பற்றி ஒரு கடிதத்தில் எழுதிய குறிப்புகளை இங்கிலாந்தில் இருந்த தனது நண்பனுக்கு அனுப்பினார். கடிதத்தில் பின்வருமாறு பதிவு செய்துள்ளார். அவை இண்டர்நேஷனல் ஸைகிக் கெசட்'டில் பிரசுரிக்கப் பட்டுள்ளது. "நாம் காணும் அதிசயங்கள் வினோதமானதும், வியப்பிற்கு உரியதும் ஆகும். அதைவிட அதிசயமானது என்னவென்றால், நாம் காணும் அதிசயங்களுக்கும், காண்பது என்ற செயலுக்கும் காரணமாக இருப்பது அந்த ஒரேயொரு எல்லையற்ற சக்தியே என்பதை, நாம் உணராதது தான். உன்னுடைய கவனத்தை மாற்றத்திற்குட்பட்ட பிறப்பு, இறப்பு, உலகம் ஆகிய இவற்றில் நிலைநிறுத்தாதே. பார்வையையோ, பார்க்கப்படும் பொருளையோ பற்றி கூட எண்ணாதே. எது அனைத்திற்கும் காரணமோ, எது பார்க்கிறதோ, அதன்மேல் கவனம் முழுமையாகத் திரும்ப வேண்டும். முதலில் அது இயலாததாகத் தோன்றினாலும், சிறிது சிறிதாக, அதனால் விளையும் பயனை உணர முடியும். பல ஆண்டுகள் படிப்பதும், நித்ய சாதனைகள் புரிவதும் அவசியம். ஏனென்றால், ஒரு குரு அவ்விதத்தில் தான் உருவாகிறார். தினமும் உனக்கென்று கால்மணி நேரம் ஒதுக்கிக்கொள். எது பார்க்கிறதோ அதன் மீது உனது மனதை அசையாமல் நிலை நிறுத்து. அது உன்னுள்ளேயே இருக்கிறது. அது ஒரு குறிப்பிட்ட பொருள் என்றோ, அதில் மனதைச் சுலபமாக நிலை நிறுத்த முடியும் என்றோ எண்ணாதே.

அது அப்படிப்பட்டது அன்று. அந்த நுட்பத்தை உணர்வதற்கு பல ஆண்டுகள் ஆனாலும், இந்த ஒருமுகப்படுத்தும் செயலால் நான்கு அல்லது ஐந்து மாத காலத்தில் நல்ல பலன் கிடைக்கும். புலன்களுக்கு அப்பாற்பட்டதைக் காணும் திறன், மன அமைதி, துன்பங்கள் ஏற்படும் போது அதைக் கையாளும் திறன், நம்மை சுற்றியுள்ள அனைத்து சக்திகள் ஆகிய எல்லாவற்றையும் இயக்குவது

அந்த உணர்வுகளுக்கு அப்பாற்பட்ட சக்தியே ஆகும். பகவான் அவருடைய ஆத்மார்த்த சீடர்களுக்கு அளித்த உபதேசங்களை அதே வார்த்தைகளில் உனக்கு கொடுத்துள்ளேன். இந்தத் தருணத்தில் இருந்து, உன்னுடைய தியான நிலையில் எண்ணம் முழுவதும், பார்க்கும் செயலிலோ அல்லது பார்க்கப்படும் பொருளிலோ நிற்காமல், பார்ப்பவனிடம் மட்டுமே அசையாமல் நிற்க வேண்டும்.''

எவ்வளவு சக்தி வாய்ந்த போதனைகள்!

இளைஞரான ஹம்.ஃப்ரீஸ், இத்தகைய உபதேசங்களைப் பெறுவதற்கு எவ்வளவு பாக்கியம் செய்திருக்க வேண்டும்! ஹம்.ஃப்ரீஸ், இதயத்தில் நிலை நின்ற பின்னரே எல்லாவற்றையும் அடைந்திருக்கின்றார். பின் அவரது அலுவலக வேலைகளை கவனித்தபடியே தியானத்தில் ஈடுபடுவதற்கு மிகவும் கஷ்டப்பட்டார். அவர் பகவானிடம் இதைப் பற்றி கேட்டபோது, இன்னும் சில காலம் அப்படியே இருக்க வேண்டும் என பகவான் அறிவுறுத்தினார். ஒருவர் எப்போது பக்குவமான நிலையை அடைந்துள்ளார் என்பதை குருவால் மட்டுமே அறிந்து கொள்ள முடியும். ஹம்.ஃப்ரீஸ், இன்னும் சில காலம் பகவானால் பக்குவப்படுத்தப்பட வேண்டிய நிலையில் இருந்தார்.

சில மாதங்களுக்குப் பிறகு மீண்டும் பகவானிடம் வந்தார். இந்த முறை பகவான் அவரைப் பார்த்து, "இப்போது நீ போகலாம்", என்று கூறினார். 'நான் திரும்பிச் சென்றபோது சிறந்த, ஆழ்ந்த கத்தோலிக்கராகவே சென்றேன்' என்று பதிவு செய்துள்ளார். அவர் மனதிற்குள் எவ்வித போராட்டமும் இல்லை.

சில காலத்திற்குப் பின், உலக பொருட்களின் மீது இருந்த பற்றை நீக்கி, ஆச்ரமத்தில் சேர்ந்து துறவறம் மேற்கொண்டார். எப்போது ஒருவர் இதயத்தில், நிலைத்து-விட்டாரோ அப்போது அங்கு இந்துவோ, கிறிஸ்துவரோ, இஸ்லாமியரோ இல்லை, ஆணும் இல்லை, பெண்ணும் இல்லை. இருப்பு ஒன்று மட்டுமே உள்ளது. ஏசுநாதர்

அவருடைய சீடர் எப்படி இருக்க வேண்டும் என விரும்பினாரோ அவ்வாறு இருப்பு மட்டுமாகவே ஹம்.ஃப்ரீஸ் இருந்தார்.



# மஸ்தான் ஸ்வாமி



மஸ்தான் ஸ்வாமி, ஒரு உண்மையான தீவிர இஸ்லாமியர். மதக் கோட்பாடுகள், சடங்குகள், ஒழுக்கங்கள் இவற்றைக் கடுமையாகக் கடைப்பிடித்த அவரது பெற்றோர், தங்களது மகனையும் அவ்வாறே வளர்த்தனர். எட்டு வயதிலேயே ஸமாதி என்றால் என்ன-வென்று அறியாமலே, அவர் அந்நிலையை அனுபவித்தார். குழந்தைப் பிராயத்தில் இருந்து, இயற்கையாகவே அவரால் மக்களிடமும், பொருட்களிடமும் பற்றின்றி இருக்க முடிந்தது. இந்த விசேஷமான பக்தர், இஸ்லாமியக் கட்டளைகளை உறுதியாகக் கடைப்பிடித்ததோடு, அல்லா, முகமது நபி இவர்களிடம் ஆழ்ந்த பக்தியோடும் இருந்தார். இயற்கையாக ஸமாதி நிலையில் அவருக்கு இருந்த ஈர்ப்பு அவரைத் தமிழ்மொழியைக் கற்கவும், அதில் தேர்ச்சி பெறவும் தூண்டியது. கைவல்ய நவநீதம், வாஸிஷ்டம் போன்ற நூல்களை விரைவிலேயே படிக்கவும் துவங்கினார். 19-ஆம் நூற்றாண்டில், வேதாந்தத்தை அடிப்படையாகக் கொண்டு, ஸூ∴பி மஹான் குணங்குடி மஸ்தான் எழுதிய பாடல்கள் அவரிடம் பலமான தாக்கத்தை ஏற்படுத்தின. மொஹரம் போன்ற முஸ்லீம் பண்டிகைகளில் அவர் பங்கேற்ற போதிலும், அவருடைய இதயமும், மனமும், ஆத்மாவிலும், ஸமாதி நிலையிலும், தாயுமானவரின் பாடல்களைப் படிப்பதிலுமே லயித்தது. (தாயுமானவர் பாடல்கள் மெய்ப்பொருள் பற்றி மட்டுமே கூறுவதால், பகவான் அவற்றை மிகவும் பாராட்டிப் பேசுவார். மற்ற ஞானியர், சிவனையும் மற்றும் பல தெய்வங்களைப் பற்றியும் பாடியுள்ளனர். தாயுமானவர் மௌனத்தில் லயிப்பதையே முக்கியமாக உபதேசித்துள்ளார். மஸ்தான் ஸ்வாமிக்கு அது கைவந்த கலை.)

1914-ல் மஸ்தான் ஸ்வாமி, திருவண்ணாமலையிலிருந்து நாற்பது மைல் தொலைவில் இருந்த, தேசூரம்மாளின் ஊரான தேசூரில் வாழ்ந்து வந்தார். அந்த ஊரில் ஆன்மீகப் பைத்தியங்களாக அவர்கள் இருவரும் இருந்ததோடு, தங்கள் அனுபவங்களைப் பகிர்ந்துகொண்டதால் நண்பர்களாக இருந்தனர். ஒருநாள் “மஸ்தான் ஸ்வாமி, நீங்கள் என் குரு நாதனைக் கட்டாயம் தரிசிக்க வேண்டும்” என்று கூறிய தேசூரம்மாள், பகவானைத் தரிசிக்க, விரூபாக்ஷ குகைக்கு அவரை அழைத்து வந்தார். தீவிர இஸ்லாமியரான மஸ்தான் பகவானை, தான் முதன் முதலாக சந்தித்ததைப் பற்றிக் கூறும் போது “பாறை போல் அசைவற்று அமர்ந்திருந்த அவருடைய பார்வை, அருளையும், கருணையையும், உறுதியான ஞானத்தையும் வெளிப்படுத்துவதாக இருந்தது. நான் அவரருகில் நின்று கொண்டிருந்தேன். என்னைப் பார்த்த பார்வையாலே, முதல் சந்திப்பிலேயே என் இதயக் கதவைத் திறந்து, அவருடைய நிலையிலேயே என்னையும் இருத்தினார். ஒரே ஒரு பார்வைதான்; முழுமையாக அகமுகமாகி, அமைதி-யோடும், களைப்பேதும் இன்றியும், எட்டு மணி நேரம் அவர் முன் நின்று கொண்டிருந்தேன். விரூபாக்ஷ குகையில் இருந்த அந்த நாட்களில், அவரது கருணை பொங்கும் பார்வை ஒன்றினால் மட்டுமே நம் இதயத்தைத் திறந்து, நம்மை முற்றிலுமாக மாற்றிவிடுவார். அவரைப் போன்றே நம்மையும் ஆக்கிவிடுவார் என்பதால், அங்கு எந்தக் கேள்விக்கும் அவசியமில்லாமல் இருந்தது!” என்று கூறினார்.

மஸ்தான், எத்தனை ஆச்சரியமான மனிதர்! முதல் சந்திப்பிலேயே பகவானைத் தனது குருவாக ஏற்றுக் கொண்டு விட்டார். குருவிற்கான தகுதிகள், அடையாளங்கள் இவை குறித்து, அவர் ஏற்கனவே படித்திருந்தார். தன் முன் மனித உருவில் அமர்ந்திருந்தவர் குரு மட்டுமன்று; கடவுளும் கூட என்பதை அவரால் உணரமுடிந்தது. திரும்பி வந்த பின், அவர்

மனதில் ஒரு போராட்டம் எழுந்ததை உணர்ந்தார். அதுவரை அல்லாவைக் கடவுளாகவும், குருவாக நபிகள் நாயகத்தையும் கொண்டிருந்தார். இப்போது உயிரோடு வாழும் குருவான ரமண மகரிஷியைக் கண்ணுற்ற பின் “என் குருநாதரான முகமது நபிக்குத் துரோகம் செய்கிறேனோ?” என்ற கேள்வி மனதில் எழுந்தது. பகவானுடைய ஸாந்நித்தியம் அவருள் நிறைந்திருந்த போதும், தீவிர முஸ்லிம் மரபில் வளர்ந்தவராதலால் “என் குரு நபிகள் நாயகம் உடலோடு இல்லாத காரணத்தால் அவரை நான் ஒதுக்குகிறேனோ?” என்ற உணர்ச்சி அவருக்குள் எழும்பியது.

நல்லவேளையாக, பகவானிடம் நேரிடையாகவே இந்த விஷயத்தை எடுத்துக் கூறி “என்னுடைய பிரச்சனை இதுதான். தயவு செய்து என்னைக் காப்பாற்றுங்கள்” என்று வேண்டினார். பகவான் சிறிது நேரம் அவரை உற்று நோக்கினார். பகவான் எப்போதுமே, கேள்வியைவிடக் கேட்பவருக்கே அதிகம் மதிப்புத் தருவார். கருணை பொங்கும் கண்களால் மஸ்தானை நோக்கி “நீ இந்த உடம்பைப் பகவான் என எண்ணுகிறாயா? நபிகள் இறந்து விட்டாரா? புத்தரும், ஏசுவும் மரித்து விட்டனரா? இப்போதும், பல்லாயிரக்கணக்கானவர்களுக்கு அவர்கள் வழி காட்டவில்லையா? இதயத்துள் இப்போதும் அவர்கள் வாழ்ந்து கொண்டிருப்பது ஸத்தியமில்லையா? ஒருவருடைய இதயத்தில் வாழும் குருவே, வாழ்ந்து கொண்டிருக்கும் குரு. ‘குறிப்பிட்ட காலத்திலோ தேசத்திலோ பிறந்து உடலோடு வாழ்பவரே உயிரோடு வாழும் குரு என்று கொள்ளக் கூடாது. குரு, நிரந்தரமாக உன் இதயத்தில் வாழ்கிறார். இதயமே அல்லா; இதயமே ஏசுநாதர்; இதயமே புத்தர்; இதயமே பகவான். இதயத்துள் மூழ்கி, இதயத்தில், இதயமாகவே வாழ்” என்று பதிலளித்தார்.

மேற்கூறிய விஷயங்களை விஸ்வநாதஸ்வாமிதான் என்னிடம் கூறினார். என்னால் உடனே அவற்றைப் புரிந்து

கொள்ள முடியவில்லை என்பதால், விளக்கிக் கூறுமாறு அவரைக் கேட்டுக் கொண்டேன். “குரு காலத்திற்கு அப்பாற்-பட்டவர். காலத்துடன் அவரை இணைத்துப் பேசும்போது, பிறப்பு, இறப்பு வாழ்க்கை எல்லாம் வந்துவிடுகிறது. குரு தத்துவம் மட்டுமே உள்ளது. அதுவே நம் ஒவ்வொருவரின் இதயமும் ஆகும்.” என்று அவர் கூறிய போது “ஸ்வாமி நீங்கள் எப்படி இவ்வாறு கூறுகிறீர்கள்?” என்று நான் கேட்டேன். அதற்கு மறுமொழியாக “லாகூரிலிருந்து ஒரு பக்தர் வந்திருந்தார். திருவண்ணாமலை, லாகூரில் இருந்து ஆயிரம் மைல் தூரத்திலுள்ளது. 1930 – 40 ஆம் ஆண்டுகளில் தொலைதூரப் பயணமென்பது இந்தியாவில் ஸாத்தியமில்லாத ஒன்று. அவர் ஒரு மாதம் ஆச்ரமத்தில் தங்கிவிட்டுத் திரும்பும் வேளையில் ‘பகவானே! உங்களைப் பிரிந்து நான் எவ்வாறு செல்வேன்?’ என்று கூறி அழத்துவங்கினார். பகவான் ‘நீ எங்கே செல்லப் போகிறாய்? பகவானை விட்டு உன்னால் விலகிச் செல்ல இயலுமா? பகவான் எப்போதும் உன்னுடனே தான் இருக்கிறார். உனக்குள்ளேயே தான் அவர் இருக்கிறார். உண்மையைச் சொன்னால் நீயேதான் பகவான்’, என்று பதிலளித்தார். எத்தனை அழகான பதில் என்பதைக் கவனி, ‘நீயே தான் பகவான்’ என்று பகவான் சொல்லும் போது, கணேசனோ, விஸ்வநாதஸ்வாமியோ எப்படி பகவானாக இருக்க முடியும்? விஸ்வநாதனுக்குள்ளும், கணேசனுக்குள்ளும் இருக்கும் ‘நான் இருக்கிறேன்’ என்ற உணர்வையே ‘பகவான்’ என்று அவர் குறிப்பிடுகிறார். உயிரோடுள்ள குரு என்பது இதயத்தில் எப்போதும் உள்ள ‘நான் இருக்கிறேன்’ என்ற உணர்வே. உன்னுள்ளும் என்னுள்ளும், எல்லோரிடத்திலும் உள்ள அந்த உணர்வே, அருணாசல ரமணன், கடவுள், ஆத்மா, இதயம், அல்லா, ஏசு, புத்தர் - அதற்கு எந்தப் பெயரை வேண்டுமானாலும் நாம் வைக்கலாம்” என்று கூறி முடித்தார்.

மஸ்தான் ஸ்வாமி, பன்முகத் தன்மை கொண்ட ஒருவர். நெசவாளியாக இருந்த அவரைப் ‘பகவானின் கபீர்’ என்று கூறுவர். கபீருக்கு, அவர் குருவின் மீதிருந்த பக்தியைப் போன்றே மஸ்தானுக்குத் தன் குருவிடம் இருந்தது. மஸ்தான் தவறாது பகவானிடம் வந்து போகத் துவங்கினார். நெசவைத் தொழிலாகச் செய்யாமல், பகவானுக்குக் கௌபீனமோ, துண்டுகளோ தேவைப்பட்டால் மட்டுமே நெய்தார். உண்மையான துறவியாக இருந்ததால் திருமணமும் செய்து கொள்ளவில்லை. தனது கிராமத்துத் தெருக்களில் பிச்சை-யெடுத்து உண்டார். திருவண்ணாமலைக்கு வரும்போது, அநேகமாகத் தேசூரம்மாளுடன் வருவார். தேசூரம்மாளிடம் பணவசதி இருந்ததால் பகவானுக்கு உணவளிக்கத் தேவை-யான அரிசி, பருப்பு முதலியவற்றை எடுத்துவருவார். அவர் கொண்டு வரும் மளிகை சாமான் மூட்டைகளை மஸ்தான் ஸ்வாமி, வெகுதூரத்திலிருந்த தேசூரிலிருந்து மகிழ்ச்சியோடு சுமந்து கொண்டு நடந்து வருவார். குருவைக் காணப்போகிறோம் என்ற நினைவு மேலோங்கி இருந்ததால் அவருக்கு அது சுமையாகவே தோன்றவில்லை. அருணாசலத்திலும் அவர் பிச்சை எடுப்பதுண்டு.

மஸ்தான் ஸ்வாமி, பகவானுடன் பலமுறை சம்பாஷணைகளில் ஈடுபட்டுள்ளார். ஒருநாள் அவ்வாறு பேசிக்-கொண்டிருந்ததை நினைவு கூறும்போது “ஒருமுறை பகவானைக் காண வரும் வழியில் அவரது அருளை வேண்டிப் ப்ரார்த்தித்தவாறு வந்தேன். விரூபாக்ஷ குகைக்கு வந்தவுடன் “உனக்கு ஸகுண உபாஸனையில் விருப்பமா? அல்லது நிர்குண உபாஸனையை விரும்புகிறாயா?” என்று அவர் வினவினார். நான் நிர்குண உபாஸனை செய்யவே ஆசைப்படுவதாகக் கூறிய போது அழகான அறிவுரை ஒன்றை பகவான் அளித்தார்.” ‘மனதை இதயத்தில் நிலை நிறுத்து. உன் கவனத்தை, எண்ணங்கள் உதிக்குமிடத்தில் நிலை

நிறுத்தினால், மனம் அடங்கி உண்மைப் பொருள் ஒளிரும்.' இதையொத்த உபதேசங்களை வேறு புத்தகங்களில் நான் படித்திருந்த போதும், என் குருவின் புனித வாய்மொழியாக வந்த அந்த ஞானோபதேசம் என் இதயத்தைத் துளைத்துச் சென்று எனக்குரிய வழியாக நிலைபெற்று நின்றதால், இந்த சந்திப்பிற்குப் பின் இவ்விஷயத்தில் எந்த சந்தேகமும் எழவில்லை. உண்மையை உரைத்தால், சந்தேகங்களே தோன்றவில்லை என்றுதான் கூற வேண்டும்.'' என்று மஸ்தான் ஸ்வாமிகள் கூறினார். பகவான் இவ்வாறாக, இதயத்தில் நிலைத்து நிற்பதற்கு, மஸ்தான் ஸ்வாமிக்குத் துணை புரிந்தார்.

பல சமயங்களில் பகவானோடு மஸ்தான் கிரிவலம் சென்றுள்ளார். ஒருமுறை மஸ்தான், தெய்வீக பரவச நிலையிலிருந்த பொழுது, ஸு∴பி ஞானி குணங்குடி மஸ்தானுடைய பாடல்களைப் பாடும்படி பகவான் கூறினார். ''என் குருவின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காகப் பாடியதால் நான் உரத்த குரலில் பாடினேன்'' என்று மஸ்தான் கூறினார். அவர் கூறிய சுவையான மற்றொரு நிகழ்ச்சி, பகவானையும் பெரிய தங்க நிற கீரிப்பிள்ளையையும் பற்றியதாகும். சாதாரணமாக, கீரிப்பிள்ளைகள் சாம்பல் நிறத்தில்தான் இருக்கும் என்பதோடு, ஜன சந்தடியுள்ள இடங்களுக்கு அவை வராது. இந்தக் கீரி இயற்கைக்கு மாறாகப் பொன்னிறத்தில் இருந்தது வியப்பைத் தந்தது. கார்த்திகை தீபத் திருவிழா நடை பெற்றுக் கொண்டிருந்த சமயம். நூற்றுக்கணக்கானவர்கள் மலை மீது ஏறிக் கொண்டிருந்தனர். கூட்டத்தினுள் இந்தக் கீரி புகுந்து, ஓடி விருபாக்ஷ குகைக்குள் சென்றது. அங்கு மூலை முடுக்குகளில் எதையோ தேடிப்பார்த்தது. அந்த சமயத்தில் பழனிஸ்வாமி அங்கு இருக்கவில்லை. அருகிலுள்ள ஓர் ஓடையில் குளிக்கச் சென்றிருந்தார். உள்ளே பகவானைக் காணாததால், கீரி

வெளியில் பழனிஸ்வாமி இருந்த இடத்திற்கு வந்து, அவரது கால்களை நக்கியது. பின்னர் அது ஸ்கந்தாச்ரமத்தை நோக்கி ஏறத்துவங்கியது. பகவான் அந்த சமயத்தில் ஸ்கந்தாச்ரமத்தில் தான் இருந்தார். கீரிப்பிள்ளை அங்கு சென்றவுடன், தாவிக்குதித்து பகவானின் மடி மீதமர்ந்து அவரையே பார்த்துக்கொண்டிருந்தது. பகவான் அதை அன்போடு தடவிக் கொடுத்து, அவரது அருட்பார்வையையும் அதன் மீது பொழிந்தார். ஆச்ரமத்தில் கூட்டம் அதிகமாக இருந்தது. ஆனால் பகவானின் தொண்டர்களில் மஸ்தான் ஸ்வாமி மட்டுமே அங்கு இருந்தார். கீரிப்பிள்ளைக்கு ஆபத்து வராமலும், அது மயில்களுக்கு ஊறு விளைவிக்காதவாறும் மஸ்தான் கவனித்துக் கொண்டார். அது சென்றவிடமெல்லாம் மஸ்தானும் அதைத் தொடர்ந்தார். சிறிது நேரத்திற்குப் பின் அது எங்கோ மறைந்து விட்டது. ஆச்ரம நிர்வாகி, பெருமாள் ஸ்வாமி வந்த போது, அவரிடம் நடந்த விஷயத்தை மஸ்தான் தெரிவித்தார். “நீ அந்தக் கீரியைப் பிடித்து இங்கேயே கட்டிப் போட்டிருக்க வேண்டும்” என அவர் கூறிய போது, பகவான் சிரித்துக் கொண்டே, “உங்களால் அவரைப் பிடிக்க முடியுமா? உங்களால் அவரைக் கட்டிப் போட முடியுமா என்ன? அவர் ஒரு சித்த புருஷர். அருணாசலத்தில் நிறைய சித்த புருஷர்கள் வசிக்கிறார்கள். அவர்களில் ஒருவர் இந்த இடத்தில் சிறிது நேரம் இருக்க விரும்பி, இங்கே வந்துள்ளார்” என்று பகவான் கூறியதாக மஸ்தான் தெரிவித்தார்.

ஆச்ரமத்துக்கு அருகில், பலா மரங்கள் நிறைந்திருந்த ‘பலாக்கொத்து’ என்னுமிடத்தில், பகவான் வாழ்ந்த காலத்தில், தீவிரமாக சாதனையில் ஈடுபட்டிருந்தவர்கள் சிலர் அங்கு வசித்து வந்தனர். சில சமயங்களில், வேறு ஊர்களுக்குச் சென்று பிச்சை எடுக்கவும், பகவானது புகழைப் பாடவும் அவர்கள் விரும்புவார்கள். அவ்வாறு போவதற்கு முன் பகவானிடம் அதற்கு அனுமதி கேட்பார்கள். “எங்கே

போகிறீர்கள்? எங்கு தங்குவீர்கள்?'' என்று பகவான் கேட்பார். ''பகவானே! எங்களுக்கு அந்தக் கவலை இல்லை. துறவியரைப் போல் தங்க இடமின்றியும் பிச்சை எடுத்து உண்டும் வாழ்வோம்'' என்று அவர்கள் கூறியதைக் கேட்ட பகவானுக்குத் திருப்தி ஏற்படவில்லை. அவர்கள் தொடர்ந்து ''நாங்கள் செல்லுமிடம் பற்றிய விவரத்தை மஸ்தான் ஸ்வாமியிடம் தெரிவித்து விட்டுச் செல்கிறோம்'' எனக் கூறிய பின்பே மகிழ்ச்சி அடைவார். ஏனென்றால் மஸ்தான் ஸ்வாமி அவர்கள் பின்னாலேயே சென்று, உணவளிக்கவோ அல்லது அவர்களுக்காகப் பிச்சை எடுக்கவோ செய்து அவர்களுக்கு ஓய்வளிப்பார் என்பது பகவானுக்குத் தெரியும். போளூர், தேசூர், செங்கம், செஞ்சி போன்று, முப்பது நாற்பது மைல்களுக்குள் இருக்கும் இடங்களுக்கே அவர்கள் செல்வார்கள். மஸ்தான் ஸ்வாமி அவர்களுக்குப் பின்னாலோ, முன்னாலோ சென்று, அவர்களது தேவைகளைப் பூர்த்தி செய்து, பணிவிடை செய்வார். ''நான் பக்தர்களுடைய பக்தன்'' என்று மனப்பூர்வமாகக் கூறுவார். ''மஸ்தான் ஸ்வாமி! நீங்கள் எங்களுக்குச் சிறப்பாகத் தொண்டு செய்கிறீர்கள். நாங்கள் என்ன கைம்மாறு செய்வது?'' என அவர்கள் கேட்கும் போது ''எனக்காக நீங்கள் ஒரு காரியம் செய்யலாம். நான் இல்லாத சமயங்களில், பகவான் பேசுவதில் ஒரு வார்த்தைக் கூட விடாமல் என்னிடம் தெரிவிக்க வேண்டும்'' என்பார் அவர். அந்த பக்தர் பதிலுக்கு எதிர்பார்த்த பரிசு அது ஒன்று மட்டுமே. மிகுந்த தன்னடக்கத்தோடு இருந்தவர் மஸ்தான். குஞ்சு ஸ்வாமி, விஸ்வநாத ஸ்வாமி இவர்களைத் தவிர மற்ற பக்தர்களுக்கு மஸ்தானை யாரென்றே தெரியாது. அவர் யாருக்கும் தெரியாமலேயே வாழ விரும்பினார். பணிவு, பக்தி என்னும் சொற்களுக்கு இலக்கணமாக இருந்தார் மஸ்தான்.

ஒருமுறை ரமணாச்ரமத்தில் பழைய ஹாலில் திருட்டு நடந்தது. பகவான், மஸ்தான் ஸ்வாமி இவர்களுடன் மற்றும்

சிலர் அங்கு இருந்தனர். மஸ்தான் ஸ்வாமி எந்த உணர்ச்சியையும் வெளிப்படுத்தவில்லை. வேறு ஒரு சாது கடப்பாரையால் திருடர்களைத் தாக்கவும் முற்பட்டார். பகவான் அவரைத் தடுத்து, “நாமெல்லாம் சாதுக்கள். நமது கடமை பேசாமல் இருப்பதுதான். திருடர்களின் கடமை திருடுவது. நாம் நம்முடைய தர்மத்தைக் கடைப்பிடிப்போம். அவர்கள், அவர்களுடைய கடமையைச் செய்யட்டும்.” என்று கூறினார்.

மஸ்தான் ஸ்வாமிக்கு உடல் நலம் குன்றிய போது, யாருக்கும் தொந்தரவு தர விரும்பாமல், தனது கிராமத்தை விட்டு, வேறு ஒரு கிராமத்திற்குச் சென்றுவிட்டார். பகவான் பொதுவாகத் தனது வரம்பை மீறிப் பிறரிடம் அக்கறை காட்டமாட்டார். ஆனால் மஸ்தான் விஷயத்தில், அவர் தேசூரம்மாளை அழைத்து “மஸ்தான் எங்கு சென்றாலும், அவருடன் இருந்து, அவரைக் கவனித்துக் கொள்” என்றார். வேறு எந்த பக்தருக்காகவும், பகவான் இம்மாதிரியான கட்டளையைப் பிறப்பித்ததாக எனக்குத் தெரியவில்லை. மஸ்தான் ஸ்வாமியின் கடைசி நாட்கள் அற்புதமானவையாக இருந்தன. அவர் உடலை உகுத்த பின் தேசூரம்மாள் பகவானிடம் அதைப் பற்றிக் கூறினார். “கடைசி நாட்களில் சித்தஸ்வாதீனமில்லாமல் அவர் இருப்பதாக நாங்கள் எண்ணினோம். அவர் ‘நந்தி இறங்கி வந்துவிட்டார். பூத-கணங்கள் நடனமாடியவாறு, வாருங்கள் மஸ்தான்! எங்களிடம் வந்து விடுங்கள் என்று அழைத்தன” என்று கூறினார். ஜன்னி கண்டுவிட்டதால், ஒருவேளை பிதற்றுகிறாரோ என்று தோன்றியது. ஆனால் கடைசி நிமிஷத்தில் அவர் எழுந்து நின்றார். அவர் இருந்த பலவீன நிலையில், அவர் எழுந்து நிற்பதென்பது இயலாத காரியம். எழுந்து நின்றவர், கண்களில் நீர் பொங்க ‘அபீதகுசாம்பாள் என்னை வரவேற்க வந்து விட்டாள். தேசூரம்மாள்! நான் செல்கிறேன்’, என்று கூறியவாறு கீழே விழுந்து உயிர் நீத்தார்.”

இந்தச் செய்தி பகவானிடம் கூறப்பட்ட போது “அன்னை பராசக்தியே அவரைக் கூட்டிச் செல்ல வந்திருக்கலாம். மஸ்தான் கூறிய வர்ணனைகளும் புராணங்களில் கூறப்பட்ட சிவலோக வர்ணனையும் ஒத்திருந்தன. மஸ்தான் ஸ்வாமி மிகவும் எளிமையான பக்தர். மறைமுகமான ஆன்மீக அனுபவங்கள் என்ற சொத்து அவரிடம் இருந்தது” என்று பகவான் குறிப்பிட்டார். மஸ்தானைப் பெருமைப்படுத்திக் கூறியதோடு, தேசூரம்மாளுக்கும் நன்றி தெரிவித்து “உனது கவனிப்போடும், கண்காணிப்போடும் மஸ்தான் உடலை உகுத்தது மிகவும் நல்லதாயிற்று” எனப் பகவான் கூறினார். அதற்குப் பின்னும் நிறுத்தாமல் 2500 ஆண்டுகள் பழமையான திருமந்திரம் என்ற தமிழ் நூலை எடுத்து வந்தார். அதில் முக்தியடைந்தவர்களின் உடலை எவ்வாறு அடக்கம் செய்ய வேண்டுமென்று கூறப்பட்டுள்ளது. அந்தப் பகுதிகளைக் குறித்துக் கொடுத்து, ஸமாதியை எவ்வாறு வடிவமைக்க வேண்டுமென்றும் வரைந்து காட்டி, விபூதி, கற்பூரம், மற்றும் சில பொருட்கள் இடப்பட்டு ஸமாதி கட்டப்பட வேண்டும் என்று தெளிவான அறிவுரைகளையும் வழங்கினார். அதன்படி ஸமாதியும் கட்டப்பட்டது.

கொட்டும் மழையிலும் கிராம மக்கள் அனைவரும் அன்று அங்கு வந்திருந்தனர். உள்ளூர் கோயிலில் இருந்து இறைவனின் வீதி உலாவிற்கு உபயோகப் படுத்தப்படும் எளிமையான தேரை, இஸ்லாமியரான மஸ்தான் ஸ்வாமியின் சடலத்தை எடுத்துச் செல்வதற்கு வழங்கினர்.

பெருந்தன்மையான இச்செயலை, பெருவாரியான இந்துக்கள் உணர்ந்து கொள்ளக்கூடும். சரமாரியாகப் பெய்த மழையால் ஊரே வெள்ளக் காடாக மாறியது. இடுப்பளவு தண்ணீரில் சென்று, மந்திரங்கள் ஓதியவாறு, பகவானுடைய அறிவுரைப்படி கட்டப்பட்ட ஸமாதியினுள், மஸ்தான் ஸ்வாமியின் உடலை வைத்தனர். அந்த ஸமாதியின் முன்

ப்ரார்த்தனை செய்பவர்களின் விருப்பங்கள் நிறைவேற்றப்படுவதாகக் கூறப்படுகிறது. பகவானது பக்தர்களில் சிறந்த ஒருவருக்கு நாமும் நமது வணக்கத்தைத் தெரிவிப்போம். மிகவும் எளிமையான மஸ்தான் ஸ்வாமியை பகவான், ஒரு உன்னதமான நிலைக்கு எடுத்துச் சென்றுவிட்டார். தன்னிடம் வந்த பக்தர்களுக்குள் மஸ்தானே மிகவும் பக்குவம் அடைந்தவர் என்று பகவான் கூறினார். ஒரே பார்வையில் பழம் பழுத்து விழுந்தது. சம்பந்தம் என்ற மஸ்தான் ஸ்வாமியின் சீடரிடம் இருந்த குறிப்புகள் மூலமே மேற்கூறப்பட்ட விஷயங்கள் சேகரிக்கப்பட்டன. ஸ்வாமியைப் பற்றி சம்பந்தம் ஒரு பாடலை இயற்றியுள்ளார்:

‘ஓ மஸ்தான்! தேசூரில் வாழ்ந்து, முக்தி நிலையை அடைந்த நீங்கள் என்றும் தூய்மையும் புனிதமுமான துறவி. உலகப்பற்று சிறிதுமின்றி, குழந்தையுள்ளத்தோடு எங்கும் சஞ்சரித்தவர். பகவானுடைய அருளைப் பெற்ற, விலைமதிக்க முடியாத ரத்தினம். நிறைவான உங்களைப் புகழ்ந்து, திருப்பாதங்களில் பணிகிறோம்.’

மஸ்தான் ஸ்வாமி மூலமாக ‘வாழ்ந்து கொண்டிருக்கும் குரு’ என்பதன் இலக்கணத்தை நாம் புரிந்து கொள்ள முடியும். மஸ்தான் ஸ்வாமி மூன்று முறை உயர்ந்த ஆத்மாவின் ஒளிக்கீற்றை அனுபவித்துள்ளார் என்று நாம் பார்த்தோம். ஒவ்வோரு முறையும் அவருக்கு சந்தேகங்கள் எழும்பின. அவரது இந்த அனுபவங்களில் இருந்து – ‘ஆன்மீக சாதனைகள் செய்யும் போது ஒருபோதும் அதைரியப்படாதே’ என்ற பாடத்தை நாம் கற்றுக் கொள்ள வேண்டியுள்ளது. தன் முயற்சி, தன்னையறிதல் இரண்டும் ஒருவரின் அனுபவங்களாகும். ஆனால் தன்னை அறிதல் என்பது எப்போதும் நடந்து கொண்டிருக்கும் ஒரு செயலாகும். மஸ்தான் ஸ்வாமி இதற்கு ஒரு எடுத்துக்காட்டு ஆவார்.



அருள்மிகு அண்ணாமலையார் – உண்ணாமுலை அம்மன்

பகவான் மஸ்தான் ஸ்வாமியை ‘உனக்கு சகுண உபாஸனையில் விருப்பமா? அல்லது நிர்குண உபாஸனையை விரும்புகிறாயா? என்று கேட்டபோது, அவர் ஆத்மானுபவ சாதனையில் மூன்றாவது நிலையை அடைந்தார். மஸ்தான் ஸ்வாமி அருவ வழிபாட்டைத் தேர்ந்தெடுத்த போதிலும், அபீதகுசாம்பாள் அவரை அழைத்துச் செல்ல வருவார் என்பதை பகவான் ஏற்கனவே அறிந்திருந்தார். பகவான் வழிபாட்டு முறையைத் தேர்ந்தெடுக்கக் கூறியபோது மஸ்தான் ஸ்வாமி அருவ வழிபாட்டைத் தேர்ந்தெடுத்த போதிலும் இறுதியில் அவரது முக்தி – உருவத்தின் மூலமே கிட்டியது. அவ்வாறென்றால் அதற்கு ஒரே ஒரு காரணம் தான் உள்ளது. கடவுள் ஒருவரே எதையும் நிச்சயிப்பவர். நமக்கு முயற்சி செய்வதற்கு மட்டுமே சுதந்திரம் உள்ளது. அது

நிறைவேறுவது கடவுளின் கையில் தான் உள்ளது. நடப்பது எதுவானாலும் நமக்கு நன்மையையே தரும்.





# விளாச்சேரி ரங்க ஐயர்



பன்முகம் கொண்டது அன்பு. மிகவும் உயர்ந்த அது, பல கோணங்களில் வெளிப்படுத்தப்படுகிறது. ஒரு ஞானி அன்பின் களஞ்சியம். அவருடைய எல்லாச் செயல்களிலும், கட்டுப்பாடற்ற அந்த அன்பின் அநேக பரிணாமங்கள் பிரதிபலிப்பதாக உள்ளன. பகவான், அவரது பக்தர்களிடம் கொண்டிருந்த உறவின் மூலம், அற்புதமான அந்த அன்பின் வெவ்வேறு தன்மைகளை நமக்குக் காட்டியுள்ளார். விளாச்சேரி ரங்கய்யர் மூலம், குரு, நட்பெனும் தன்மையை நமக்கு வெளிப்படுத்தியுள்ளார்.

சமமாகப் பகிர்ந்து கொள்ளுதல், பொறுப்பு ஏற்றுக்கொள்ளுதல், கொடுத்த வாக்கைக் காப்பாற்றுதல் என்பது போன்ற உதார குணங்கள், குழந்தைப் பருவத்தில் இருந்தே பகவானிடம் வெளிப்பட்டன.

குறுநடை பயிலும் பருவத்திலேயே, விளையாடிவிட்டுத் தன் நண்பர்களை, தன் அன்னையிடம் முலைப்பால் அருந்த அழைத்து வருவார். சாதாரணமாகக் குழந்தைகள், பொறாமையினால் தாய்ப்பாலைப் பகிர்ந்து கொள்ள மாட்டார்கள். பகவானோ வரம்பு மீறிச் சென்று, தனது நண்பர்களை, “வாருங்கள் நாம் பால் குடிப்போம்” என்று கூறி வீட்டிற்கு அழைத்து வருவார். நட்பினால் ஏற்படும் பந்தமும், பகிர்ந்து உண்ணும் குணமும், எத்தனை வலிமையாக உள்ளன!

பகவானின் நட்பைப் பெற்ற, பக்கத்து வீட்டு மீனாக்ஷிக்கு வயது ஒன்றரை. சில ஆண்டுகளுக்குப் பின் திருமணம் செய்து கொண்ட அவளுக்கு மணவாழ்க்கை நல்லமுறையில் அமையவில்லை என்றாலும் பகவானை இடையறாது ப்ரார்த்தித்து வந்தாள். வர இயலாத காரணத்தால், அவள்

பகவானை நேரில் காண வரவேயில்லை. 1940இல் முதுமை காரணமாக அவள் படுத்த படுக்கையாக இருந்தபோது, நாயனாவிற்குக் காட்சியளித்தது போல், திடீரெனத் தோன்றி, அவர் மீனாக்ஷியின் அருகில் அமர்ந்து, அவளைத் தொட்டார். நினைவிழந்த நிலையில் இருந்த அவள், பகவான் தொட்டவுடன் மீண்டும் உணர்வு பெற்று, “பகவானே! என் ப்ரபோ! ரமணா! எனக்கு அருள்புரிய வந்துள்ளீர்களா!” என்று நன்றியோடு உரக்கக் கத்தினாள். அவையே அவளது கடைசி வார்த்தைகள். நட்பிற்கு உயர்ந்த உதாரணம். குழந்தைப் பருவத்தில் தாய்ப்பாலைப் பகிர்ந்து கொண்ட அவ்விருவரும் பின்னர் சந்தித்துக் கொள்ளவே இல்லை. பகவான் உண்மையான நட்புடன் இருந்து, மீனாக்ஷியை அவளது கடைசிக் காலம் வரை நினைவு வைத்துக் கொண்டிருந்தார்.

லக்ஷ்மி என்ற அதிருஷ்டசாலிப் பெண் இரண்டு வயதில், பகவானுடன் தாய்ப்பால் அருந்தியவள். பின்னர் விதவையாகி விட்ட அவள், வேதனையிலும் துயரத்திலும் மூழ்கி வாழ்ந்து வந்தாள். இதற்குள் பகவானுடைய புகழும், மதிப்பும் எங்கும் பரவியிருந்தது. ஒருநாள், ஆச்ரம கூடத்தில் (Hall) பக்தர்களும், பண்டிதர்களும் சூழ பகவான் அமர்ந்திருந்தார். இளைத்துக் கறுத்துப் போய்த் தனது அறுபதாவது வயதில், இருநூறு பேருடன் சேர்ந்து பகவான் முன் நின்று கொண்டு, “என்னைப் பகவானுக்கு அடையாளம் தெரிகிறதோ?” என்று தயக்கத்தோடு கேட்டார். லக்ஷ்மி அம்மாள், “ஏன் தெரியாது? நீ லக்ஷ்மி தானே? நாமிருவரும் ஒன்றாகப் பால் குடித்தோமல்லவா?” எனக் கூறி, அறுபது ஆண்டுகளுக்குப் பின், தன் பால்ய சிநேகிதியை அடையாளம் கண்டு கொண்டதை வெளிப்படுத்தினார்.

ஞானமே உருவான பகவான் வைரத்தைப் போன்றவர். எந்தக் கோணத்தில் பார்த்தாலும் அதன் தெளிவான தன்மையை நாம் காணமுடியும் என்பதால்தான் அதற்கு

மதிப்புத் தருகிறோம். பகவானின் வாழ்க்கை, உபதேசங்கள் இவற்றில் எந்தப் பக்கம் புரட்டினாலும், அதே போன்ற தெளிவு சுடர்விட்டுப் பிரகாசிக்கின்றது. பகவானுடைய உபதேசங்களில் அதிக கவனம் செலுத்துபவர்கள், அவருடைய நட்பின் தன்மையைக் கவனிக்காமல் விட்டுவிடுகிறார்கள். பக்தர்களாக இருந்த அவரது நண்பர்களுக்கும் அவருக்குமிடையே இருந்த உறவு பல விஷயங்களை நமக்கு வெளிப்படுத்துகிறது. அவர்கள், பகவானை ஞானியாகப் பார்த்த அதே சமயம் பகவான் அவர்களைப் பால்ய நண்பர்களாகவே கண்டார். அம்மாதிரியான இரு பக்த நண்பர்களுக்கு இரு விஷயங்கள் பொதுவாக இருந்தது. குடும்பப் பற்றோடு, உலகக் கடமைகளில் ஆழமாக மூழ்கி இருந்தனர். இவர்களோடு பகவான் கொண்டிருந்த உறவு நம் உள்ளுணர்வைத் தட்டி எழுப்புவதாக உள்ளது. உலக வாழ்க்கையை உதறித் தள்ளி, ஆன்மீக வாழ்க்கையை ஏற்குமாறு பகவான் அவர்களிடம் கூறவில்லை. பதிலாக, அவர்கள் சென்ற வழியிலேயே அவர்களோடு சென்றார். அவர்களுக்கு அவ்வாழ்க்கையில் வெறுப்பு ஏற்பட்டு உலக பந்தங்களால் தளர்ந்து போன நிலையில்தான் தன்பால் மெதுவாக ஈர்த்துக் கொண்டார். அவரது நண்பர்கள் குடும்பப் பிரச்சனைகளோடுதான் அவரிடம் வந்தனர். மிகவும் லோகா-யதமான அவற்றைக் கவனமாகக் கேட்டு, உண்மையான நண்பனைப் போன்று, அவர் அவற்றிற்குத் தீர்வு காணவும் செய்தார். வெறும் ஆலோசனை மட்டும் கூறாமல், தனது சொந்தப் பிரச்சனையை எவ்வாறு தீர்க்க முற்படுவாரோ அது போன்று, அவர்களுடைய துயரங்களைத் துடைக்கும் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டார்.

பகவான் பிறந்த ஊரான திருச்சுழியில், ரங்கன் என்று அழைக்கப்பட்ட விளாச்சேரி ரங்கய்யர் வாழ்ந்து வந்தார். பகவானும் அவரும் ஒரே வகுப்பில் படித்தவர்கள்; பால்ய நண்பர்களும் கூட. பகவானுடைய குடும்பமும் ரங்கனுடைய

குடும்பமும் ஒரே சமயத்தில் மதுரைக்கு இடம் பெயர்ந்தது. பகவான் அருணாசலத்திற்கு ஓடிப்போகும் வரை தொடர்ந்து நெருங்கிய நண்பர்களாக இருந்தனர். 1903ஆம் ஆண்டில், பகவான் அருணாசலத்தில் இருக்கும் விஷயம், ரங்கனுக்கு முதன் முதலில் தெரிய வந்தது. எனினும் குடும்பப் பொறுப்புக்கள் காரணமாக, அவரால் உடனே அங்கு சென்று, பகவானைக் காண முடியவில்லை. பல ஆண்டுகளுக்குப் பின், விருபாக்ஷ குகையில் பகவான் இருந்த போது, எப்படியோ வந்து பார்த்தார். பகவான், நண்பன் என்ற முறையில், அவருடைய தோளில் ஒரு குத்துக் கொடுத்து, அன்புடன் வரவேற்றார். முதலில், பகவானைத் தனது நண்பனாக மட்டுமே ரங்கனால் பார்க்க முடிந்தது. “டேய் வேங்கட்ராமா! நீ மதுரையை விட்டுக் கிளம்புவதற்கு முன் தினம் கூட நாமிருவரும் கால்பந்து விளையாடிக் கொண்டிருந்தோம். நாம் நெருங்கிய நண்பர்களாக இருந்தும், என்னிடம் கூட, நீ மதுரையை விட்டு ஓடிப்போகப் போவதாக ஏன் கூறவில்லை?” என்று கேட்டார் ரங்கன். “ரங்கா! நான் என்ன, மூட்டை கட்டிக்கொண்டு புறப்படும் சாதாரணப் பயணியைப் போன்றா இங்கு வந்தேன்? ஏதோ ஒரு மிக உயர்ந்த சக்தியே அன்று என்னை அருணாசலத்திற்கு இழுந்து வந்துள்ளது. ஸம்பிரதாயமான வழக்கங்களுக்கெல்லாம் எங்கே இடமிருந்தது?” என்று பகவான் கூறி ரங்கனைக் கூர்ந்து நோக்கினார். உடனே ரங்கனும், தன்னுடன் படித்தவனோ, நண்பனோ, கால்பந்து ஆடுபவனும் குஸ்தி இடுபவனும் தன்னுடன் நீச்சல் பழகியவனுமான வேங்கடராமனோ இல்லை தன்முன் நிற்பவன், என்பதைப் புரிந்து கொண்டார். அந்தக் காலத்தில் பார்த்தவர்கள் அவரை ஆறடி உயரத்தில், மிகுந்த பலமுள்ள உடம்போடு கூடிய ஒரு ஆளாகவே நினைவில் வைத்திருந்தனர். சாதாரண பிராம்மணப் பையன்களை விட அவர் வாட்ட சாட்டமாகவே இருந்தார். பதினாறாவது வயதில், ‘நான்’ என்ற அஹங்காரத்தின் மரணத்தை அனுபவிக்கும்

வரை, தலைவலி, வயிற்று நோவு போன்ற எவ்வித நோயும் அவரை அண்டியதில்லை. அத்தனை ஆரோக்கியமான உடம்பு அவருடையது. அவ்வாறிருந்தும் பாதாள லிங்க குகையில் அவருக்கு ஏற்பட்ட அனுபவத்திற்குப் பின், கவனிப்பு இல்லாமல் போனதால் உடம்பு மிகவும் பழுதடைந்து தேய்ந்து போய் விட்டது. இந்த மாற்றத்தை ரங்கனும் கவனித்தார். இக்கால கட்டத்தில், பழங்கால சரித்திரங்கள் கூறும் ஒரு மஹானைப் போன்று ஆகிவிட்ட அவரைக் காணக் கூட்டமும் சேரத் துவங்கியது. அப்படியிருந்த போதும், ரங்கன் விரூபாக்ஷ குகைக்கு வந்தபோது, பழைய மாதிரியே பகவான் அவரிடம் அன்புடன் பழகினார். அவர்களது உறவு மிகவும் சுவையானது. முற்றும் உணர்ந்த ஒரு ஞானிக்கும், அஞ்ஞான நிலையில், ஆன்மீக நாட்டம் கூட இன்றி, துக்கமான குடும்பச் சுழலில் மூழ்கியிருந்த ஒருவருக்கும் இடையே இருந்த நட்பு அது. ஆனால் பகவானிடம் அவருக்கு அளவு கடந்த அன்பு இருந்தது. அவரது நட்பின் ஆழத்தை மதித்த பகவான், ரங்கனது படுக்கையில் அவரருகே அமர்ந்து கொள்வார். குடும்பப் பிரச்சனைகளின் சுமைதாங்காமல் அவர் உருண்டும், பிரண்டும் கொண்டிருப்பதைப் பார்த்தால், அவரை மெதுவாகத் தட்டிக் கொடுத்து, “டேய்! ரங்கா உனக்கு மன உளைச்சல் தருவது எது?” என்று கேட்பார். ஒருநாள், தனது கஷ்டங்கள் அனைத்தையும் ரங்கன் பகவானிடம் கூறினார். “நீ இங்கு வந்திருக்கும் சமயத்தில், குடும்பத்திற்கு வாழத் தேவையானவற்றைக் கொடுத்துவிட்டு வந்தாயா?” என்று பகவான் கேட்டார். குடும்பத் தேவைகளைச் சமாளிக்க முடியாமல் இருந்ததால், தர்ம சங்கடமான அந்நிலையில் ரங்கன் மௌனமாகவே இருந்தார். “உனக்குப் பணப்பிரச்சனை ஏதோ இருக்கிறது” என்று ஊகித்துக் கொண்ட பகவான், “பத்தாயிரம் ரூபாய் இருந்தால் போதுமா?” என ரங்கனைக் கேட்டார். அந்த நாட்களில், பத்தாயிரம் ரூபாய் என்பது மிகப்

பெரிய தொகை. பகவான் பண விஷயமாகப் பேசியது ரங்கனுக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது. “பத்தாயிரம் ரூபாய் இருந்தால், உன் பிரச்சனைகள் எல்லாமே தீர்ந்துவிடுமா?” என்று தொடர்ந்து கேட்டார். அப்போதும் ரங்கன் பதிலளிக்கவில்லை. சில தினங்களுக்குப் பின், பகவானிடம் விடைபெற்றுச் சென்னைக்கு சென்றார். அங்கு, ‘லாரி’, ‘பஸ்’ போன்ற வாகனங்களை விற்கும் வேலையில் எப்படியோ சேர்ந்தார். அதற்குக் கமிஷன் தொகையாக அவருக்குக் கிடைத்தது பத்தாயிரம் ரூபாய்!

ஒருநாள், அவரது மகனைப் பாம்பு கடித்துவிட்டது. அவன் இறந்து போனதாகவே மக்கள் நம்பினர். பகவான், தனக்கு விபூதி ப்ரஸாதம் கொடுத்தது ரங்கனுக்கு நினைவிற்கு வந்தது. (ரங்கன், ப்ரஸாதம் வேண்டும் என்று பகவானிடம் கேட்டிருக்கலாம். அவரைத் திருப்தி செய்வதற்காகப் பகவானும் விபூதியை அவரிடம் தந்திருக்கலாம். சாதாரணமாக, தன்னிச்சையாகப் பகவான் யாருக்கும் ப்ரஸாதம் எதையும் கொடுப்பதில்லை.) துயரத்தில் மூழ்கியிருந்த தனது மனைவி, உறவினர் இவர்களிடம், “கவலை வேண்டாம். என் நண்பன், பகவான் இருக்கிறார். பார்த்துக்கொள்வார்” என்று கூறி, ‘ரமணா, ரமணா, ரமணா’ என்று ஜபித்தவாறு விபூதியை எடுத்துத் தன் மகனின் உடம்பில் ரங்கன் பூசிவிட்டார். அந்தப் பையன் சுய நினைவோடு எழுந்துவிட்டான். மற்றொரு நிகழ்ச்சி: ரங்கனது மூத்த மகளுக்குச் சித்த ஸ்வாதீனமில்லாமல் போனபோது, அவளது கணவர், ‘தன்னால் அவளைப் பார்த்துக் கொள்ள முடியாது’ என்று கூறி, அவரிடமே ஒப்படைத்துவிட்டார். ரங்கனுடைய பிரச்சனைகள் அனைத்துக்குமே ஒரே ஒரு தீர்வுதான். அது பகவானே! அவர் பகவானுக்குக் கடிதம் எழுதினார். விரைவிலேயே ஆச்ரமத்திலிருந்து பதிலும் வந்தது. “உங்கள் கடிதம் பகவானிடம் காட்டப்பட்டது. அதை அவர் நீண்ட நேரம் தன்

கையிலேயே வைத்திருந்தார். பின் ‘அவள் குணமடைந்து விடுவாள்’ என்று பதில் எழுதுமாறு எங்களிடம் கூறினார்’’ என்று எழுதப்பட்டிருந்தது. இன்னொரு சமயம் அவரது மற்றொரு மகள் கிணற்றில் விழுந்துவிட்டாள். அவள் இறந்து போய்விட்டதாக எண்ணி எல்லோரும் அழ ஆரம்பித்துவிட்டனர். தனது நண்பரிடம் முழு நம்பிக்கை வைத்திருந்த ரங்கன் மட்டும் கலங்கவில்லை. அவரிடம், ‘அம்ருத ஸஞ்ஜீவனி’யாகிய பகவானின் விபூதி இருந்தது. அதைத் தன் மகள் மீது பூசவும் அவள் பழைய நிலையை அடைந்துவிட்டாள்.

ஒருமுறை, ரமணாச்ரமத்தில் பகவான் இருந்தபோது, ரங்கனின் மனைவி செல்லம்மாள் அவரைக் காண வந்தாள். அப்போது ஆச்ரமத்தில் இருந்த அனைவரும் கிரிவலம் செல்லப் புறப்பட்டனர். அவர்களோடு செல்லம்மாளும் ‘ஹாலுக்கு’ வெளியே சென்றார். ஆனால் பழைய ஹாலைச் சில முறை வலம் வந்து சிறிது நேரத்திற்குள் திரும்பி வந்தார். வியப்பிலாழ்ந்த பகவான், “நீ மட்டும் எப்படி இவ்வளவு சீக்கிரமாகத் திரும்பினாய்?’’ என்று அவரைக் கேட்டார். “இல்லை பகவானே! அவர்களெல்லாம் கிரிவலத்திற்குச் சென்றுள்ளனர். எனக்கு முதுகில் பிரச்சனை இருப்பதால் நான் அவர்களுடன் செல்ல முடியவில்லை. அதனால் அதற்குப் பதிலாக உங்களைப் பிரதக்ஷிணம் செய்ய எண்ணி திரும்பி வந்துவிட்டேன்’’ என்று கூறினார். ஆச்ரம வைத்தியரான M.R.கிருஷ்ணமூர்த்தி அய்யரிடம் செல்லம்மாளுக்கு ஊசி போடுமாறு பகவான் அனுப்பினார். டாக்டர், ஊசி போட்டபின், விருந்தினர் இல்லத்தில் சற்று ஓய்வு எடுத்துக் கொண்டு செல்லுமாறு கூறியிருந்தார். பகவான் ஸந்நிதியிலிருந்து சிறிது நேரம் கூட விலகியிருக்க விரும்பாத அவர் ஓய்வெடுக்காமல், தன் கணவரைக் கவலையில் ஆழ்த்தி, உடனே மெதுவாக ஹாலுக்கு வந்துவிட்டார். பகவான் கையை உயர்த்தி அவரை ஆசீர்வதித்தபோது, அவரது முதுகு வலி போன இடம்

தெரியவில்லை. மீண்டும் தொந்தரவு தரவும் இல்லை. பகவான் வேறு யார் பொருட்டும் இம்மாதிரிக் காரியங்களை – அதாவது பணத்தைப் பற்றிப் பேசுவது, விபூதி தருவது, கையைத் தூக்கி ஆசீர்வதிப்பது போன்றவற்றைச் செய்ததில்லை. உண்மையான ஒரு நண்பனின் பொருட்டு அந்த நிலைக்கு இறங்கி வந்து அருள் செய்தார். நட்பு என்பது யாது? அன்பின் ஆழமான ஒரு முகமன்றோ நட்பு? அன்பு என்றால் ஞானம். பகவான் ஞானத்திற்கு அரசனன்றோ! ரங்கனிடம் காட்டப்பட்ட அன்பே தனி.

விரூபாக்ஷ குகையில் ஏற்பட்ட அனுபவங்களோடு நின்றுவிடவில்லை பகவானுக்கும் ரங்கனுக்கும் இருந்த உறவு. சில சமயங்களில், அதிகாலை இரண்டு மணிக்கு அவரை எழுப்பி, “வா. நாம் நீச்சலடிக்கச் செல்வோம்” என்று குளத்திற்கு அழைத்துச் செல்வார் பகவான். (தற்போதைய ரமணாச்ரமம் கட்டப்படும் முன் பின்பாகத்தில் சிறிய குளம் ஒன்று இருந்தது.) அவ்வாறு ரங்கனைப் பொறுத்தவரை பகவான் பழைய வேங்கடராமனாக மாறிவிடுவார். மதுரையில் இருந்த அந்த நாட்களில், ரங்கனுக்குக் கோபமூட்டுவதற்காக, தண்ணீருக்குள் மூழ்கி, அவரது தொடையில் பகவான் ஒரு உதை கொடுப்பார். பகவான் பலசாலியாக இருந்ததால் அவர் கொடுக்கும் உதை இரும்புக் கம்பியால் அடிப்பதைப் போன்ற வேதனையைத் தரும். இப்போதும் நீச்சலடிக்கச் சென்றபோது விளையாட்டாக, ரங்கனை உதைத்தார். உடனே ரங்கன் கால்களைப் பிடித்துக் கொண்டு, கண்ணில் ஒற்றிக்-கொண்டு, தலைமீதும் வைத்துக்கொண்டார். “பகவானே! உங்கள் கால்கள் எப்படி இவ்வாறு மிருதுவாக மாறியது? மதுரையில், நீங்கள் உதைத்தால் இரும்புக் கம்பியால் அடிப்பது போன்றல்லவா இருக்கும்! இப்போது உங்கள் கால் ரோஜா இதழ்களைப் போன்ற மென்மையோடு உள்ளன” என்றார் ரங்கன். “அப்படியா ரங்கா! ஆன்மீகத்தில் நிறைவு

ஏற்பட்டுவிட்டால் உடம்பிலும் மாறுதல் வந்துவிடுமோ என்னவோ'' என்று பகவான் பதிலுரைத்தார்.



ஒருமுறை, கிரிவலம் செய்து கொண்டிருந்தபோது, ரங்கனின் காலில் முள் தைத்துவிட்டது. பகவான் குனிந்து, தானே அதை நீக்கினார். அதுவரை பகவானின் கால்களை ரங்கன் கவனிக்கவில்லை. சிறிது நேரத்திற்குப் பின் அவர் ஒரு முள்ளின் மீது கால் பதித்தபோது, ''பகவான்! பகவான்! உங்கள் காலில் முள் ஏறிவிட்டது. தயவுசெய்து உட்காருங்கள். நான் அதை எடுத்துவிடுகிறேன்'' என்று ரங்கன் கூறவும், நண்பனின் திருப்திக்காக அவர் அமர்ந்தார். பகவானின் காலைப் பார்த்தபோது, ஒன்றல்ல, பல முட்கள் அதில் குத்திப் பதிந்திருப்பதைக் கண்டார் ரங்கன். பகவான் முகத்தைச் சுளித்துக்கொண்டு, ''ரங்கா! நீ எந்த முள்ளை எடுக்கப் போகிறாய்? முன்னால் குத்தியவற்றையா அல்லது

இப்போது குத்தியதையா? அது இருந்துவிட்டுப் போகட்டும்'' என்று பகவான் கூறியதற்கு ரங்கன் மறுப்புத் தெரிவித்தார். அதற்கு பகவான், ''இதோ பார் ரங்கா! முள் தைத்தால், காலைத் தரையில் தேய்த்துவிட்டால் போதும். எல்லாம் சரியாகிவிடும்'' என்று அமைதியாக சமிக்ஞை செய்தார்.

ஒருமுறை, ரங்கனுக்குப் பகவானைத் தழுவிக் கொள்ள ஒரு சந்தர்ப்பம் வாய்த்தது. பகவானுடைய உடம்பு, தாமரை இதழை ஒத்த மென்மையோடு, பட்டுப்போன்றிருந்ததைக் கண்டு அவர் வியந்தார். மதுரையில் இருந்தபோது அவருடைய உடல் 'சொற சொறப்பாக' இருந்தது. அதனால் அவர் யார் மீதாவது உரசினால் வேதனை உண்டாகும். ஆச்சரியத்தோடு பகவானிடம், ''எப்படி உங்கள் தோலின் தன்மையே மாறி விட்டது?'' என்று ரங்கன் கேட்டபோது, முன் கூறிய பதிலையே பகவான் கொடுத்தார்: ''ஆன்மீக நிறைவு எல்லாவற்றையும் மாற்றிவிடுகிறது'' என்றார். மற்றொரு முறை, நண்பன் என்ற உரிமையோடு, ''பகவான்! உங்கள் தலை ஏன் எப்போதும் ஆடிக்கொண்டே இருக்கிறது? நடப்பதற்கு உங்களுக்குக் கம்பு அவசியமா'' என்று ரங்கன் கேட்டார். நண்பனிடம் உள்ளதை உள்ளபடி தெரிவித்து, ''ரங்கா! இது வயதினால் வந்த கோளாறு இல்லை. மரணானுபவத்திற்குப் பின் நான் திருவண்ணாமலைக்கு வந்து அடிவாரத்தில் தங்கியிருந்ததிலிருந்து என் தலை ஆடியபடியே உள்ளது'' என்றார். ''ஏன்?'' என்ற ரங்கனின் கேள்விக்கு, ''முரட்டுத்தனமான, மதம் பிடித்த காட்டு யானை ஒரு குடிசைக்குள் நுழைந்தால் குடிசை என்னவாகும்? அதுதான் எனக்கும் நடந்திருக்கிறது. அது சின்னாபின்னமாகிவிடும்'' என்று பதிலளித்தார். இவ்வாறுதான் பகவானின் மிகப் பெரிய ஆன்மீக அனுபவங்கள் அவரது தேஹத்தை வெகுவாகப் பாதித்தன.

ரங்கன் ஒருமுறை ஜோதிடரிடம் ஆலோசனை கேட்கச் சென்றபோது, அவர், ஒரு வருஷத்திற்கு எண்ணிலடங்காப் பிரச்சனைகள் வரக்கூடும் என்று கூறவே, விஷயத்தைப் பகவானிடம் கடிதம் மூலம் தெரிவித்தார். “அவன் என்னோடு வந்து தங்கும்படி நான் கூறியதாகப் பதில் எழுது” என பக்தர் ஒருவரிடம் பகவான் தெரிவித்தார். ரங்கனுடைய விஷயத்தில் மட்டுமே பகவான் இவ்வாறு நடந்து கொண்டார். ரங்கன் வந்து சேர்ந்தவுடன், “என்னை விட்டு எங்கும் செல்லாதே. எப்போதும் என்னுடனேயே இரு” என்று பகவான் உத்தரவிட்டார். பகவானுடன் தங்குவதற்காகச் சென்னையிலிருந்து ஒரு நண்பர் வந்திருந்தார். அவர் திரும்பிப்போக எண்ணிய அன்று, அவருடன் ரயில் நிலையத்திற்குத் தானும் வருவதாகத் தெரிவித்தார் ரங்கன். உடனே பகவான், ரங்கனுக்குக் கண்டிப்பான எச்சரிக்கை விடுவித்தார், “ரங்கா! அவரை ரயில் நிலையத்திற்கு அழைத்துச் சென்று ரயிலேற்றிவிடு. பின் நேராக என்னிடம் வந்துவிடு. வேறு எங்கும் செல்ல வேண்டாம். ஊருக்குள் சென்று இரவில் தங்கவேண்டாம். பேசாமல் திரும்பி வந்து என்னோடு இரு” என்று உறுதியாகக் கூறினார். கடைசியில் சில மாதங்களுக்குப் பின் சொந்த ஊருக்குச் செல்ல பகவான் அனுமதி அளித்தார். அவர் திரும்பிச் சென்றபோது, தனது பிரச்சனைகள் எல்லாமே தீர்க்கப்பட்டுவிட்டதை ரங்கன் உணர்ந்தார்.

பகவானுடைய குழந்தைப் பருவத்தில் நடந்த சில சுவையான நிகழ்ச்சிகளை ரங்கன் கூறியுள்ளார். பகவானுடைய தந்தை வழக்கறிஞர் என்பதால், பல சட்டரீதியிலான காகிதங்-களை, வீட்டிலுள்ள அட்டத்தில் பத்திரமாக வைத்திருந்தார். ஒருநாள், நண்பர்களுடன் விளையாடிக் கொண்டிருந்த போது, மேலே இருந்த காகிதங்கள் கொண்டு கப்பல்கள் செய்து, கோயில் குளத்தில் விடத் தீர்மானித்துச் செயல்பட்டனர். தந்தை மகன் மீது பாசத்துடன் இருந்தபோதும், நடந்த

விஷயத்தை அறிந்தபோது, எல்லோரும் எதிர்பார்க்கக் கூடிய வகையில், அவரது முகம் கோபத்தால் சிவந்தது. “அவனை நிர்வாணமாக்கி, மொட்டையடித்துக் கோவணத்தைக் கட்டி வீட்டைவிட்டுத் துரத்து” என்று அழகம்மாளுக்கு உத்தர-விட்டார். பல ஆண்டுகளுக்குப் பின், “வேங்கடராமா! நீ துறவியாகப் போவாய் என்பதை, உன் தந்தை பல ஆண்டுகளுக்கு முன்னரே ஜோசியம் சொல்லிவிட்டார். ஞாபகம் உள்ளதா?” என்று ரங்கன் நினைவு கூர்ந்தார்.

பகவான் ஸ்கந்தாச்ரமத்தில் இருந்தபோது ரங்கன் அடிக்கடி வருவதுண்டு. ஒரு நாள், பகவான் உள்ளே படுத்திருப்பதைப் பார்த்தவுடன், மெதுவாக அறைக்கதவை சாத்திக்கொண்டு வெளியே வந்துவிட்டார். ஒரு வினாடிக்கு முன் பகவானை ரங்கன் அறைக்குள் பார்த்திருந்த போதும், வெளியில் யாருடனோ அவர் பேசிக்கொண்டிருந்ததைக் கண்டார். உடனே ஓடிப்போய் அறைக்குள் பார்த்தபோது பகவான் கண்களை மூடிப் படுத்திருந்தார். தான் பார்த்ததை நம்பமுடியாமல், பகவானிடம் தான் கண்ட காட்சியை எடுத்துரைத்தார் ரங்கன். பகவான், அவர் கூறியதைப் பொருட்-படுத்தாமல், “நீ வெளியே பார்த்த அந்தத் திருடனை உடனே பிடித்திருக்க வேண்டும். நாம் அவனை ஒரு கை பார்த்திருக்கலாம்” என்று விளையாட்டாகக் கூறி வேறு எதுவும் பேசமுடியாதவாறு முடித்துவிட்டார்.

ஒருமுறை, ரங்கன், “பகவானே! நீங்கள் மதுரையில் இருந்தபோதே ஸாக்ஷாத்காரத்தைப் பெற்றுவிட்டீர்களல்லவா?” என்று கேட்டார். “எனக்குப் புரியவில்லை என்றபோதும், நான் படித்துக் கொண்டிருந்த போதே அருணாசலேச்வரன் என்னுள் மிகுந்த சக்தியோடு நுழைந்துவிட்டான். அவன் தன்னை எனக்குக் காட்டினான் என்றால் அது அவனருளே. என் உடல் முழுவதும் எரிச்சல் எடுத்தது. அந்தக் கணம் முதல் நான் ஸமாதியில் இருந்தேன். அப்போது உன்னுடன் பேசவும்

விளையாடவும் செய்தேன் என்றாலும், நான் முழுமையாக ஸமாதியில்தான் இருந்தேன்'' என்று ரங்கனிடம் மட்டுமே இவ்விஷயங்களைப் பகிர்ந்து கொண்டுள்ளார் பகவான்.

ஒருநாள், பகவானுடைய பற்களும் ஈறும் கறுத்து இருந்ததை ரங்கன் கவனித்தார். "பகவானே! உங்கள் உடம்பும், பற்களும் நல்ல ஆரோக்யத்துடன் தானே இருந்தன?'' என்று குறிப்பிட்டார். பகவான் எவ்வித உணர்ச்சி வெளிப்பாடுமின்றி, "ஆம். ஆனால் ஒருமுறை நான் இங்கு தனியாக இருந்தபோது, ஒருவன் எனக்கு விஷத்தைக் கொடுத்து விழுங்கும்படி கூறினான். நானும் விழுங்கினேன். அது என்னைக் கொல்லவில்லை. ஆனால் ஈறையும் பற்களையும் நாசம் செய்துவிட்டது'' என்று தெரிவித்தார். பகவானுக்கு மூன்று முறை விஷம் அளிக்கப்பட்டுள்ளது. பல ஞானியருக்கு இந்த அனுபவம் ஏற்பட்டுள்ளதென்பது விசித்திரமாக உள்ளது. யோகி ராம்ஸுரத்குமார் அவர்களுக்கும் இருமுறை விஷம் தரப்பட்டது.

ரங்கனிடம் நட்பைப் பகிர்ந்து கொண்டது போன்றே பகவான் உபதேசங்களையும் பகிர்ந்து கொண்டார். குடும்பக் கவலைகள், பணம் மற்றும் உலகப் பிரச்சனைகள் இவற்றில் சிக்கிக் கொண்டுள்ள தன்னால் ஆன்மீக சாதனைகளைச் செய்ய இயலாது என்று எண்ணி ரங்கன், அடிக்கடி மனம் தளர்வார். "உன் எண்ணங்களை எல்லாம் தூக்கி வெளியில் போடு. எண்ணமற்ற நிலையில்தான் உனக்குச் சுதந்திரத்தை அனுபவிக்க இயலும்'' என்று அவரிடம் பகவான் கூறுவார். துரதிருஷ்டவசமாக ரங்கனால் பகவானது அறிவுரைகளைக் கடைப்பிடிக்க முடியவில்லை. தன்னால் ஆன்மீக முன்னேற்றம் அடையவே முடியாது என்ற தீர்மானத்திற்கு வந்த அவர், "ஞானத்தைப் பெறுவதற்கு முன் நான் எத்தனை பிறவிகள் எடுக்க வேண்டியிருக்கும்?'' என்று பகவானை வினவியபோது, அவர் அழகான பதில் ஒன்றை அளித்தார். "உண்மையில்,

நேரம், தூரம் போன்ற விஷயங்கள் எதுவுமே இல்லை. ஒருமணி நேரத்திற்குள், எத்தனையோ நாட்களும், ஆண்டுகளும் கடந்து விடுவதாக நாம் கனவு காண்கிறோம். சினிமாவில், வெறும் நிழல், கடலாகவும், மலையாகவும் கட்டடங்களாகவும் தோன்றுவதில்லையா? உலகம் உனக்கு வெளியில் இல்லை. சினிமாவில் நடப்பது போல் எல்லாமே உனக்குள்ளேதான் நடக்கிறது. மனதிற்குள் உள்ள சிறிய உலகமே வெளியில் பெரியதாகக் காட்சி அளிக்கிறது'' என்று பகவான் விளக்கமாகக் கூறினார். ஒருநாள், ரங்கன், ``பகவானே! உங்கள் அருள் எனக்குக் கிடைக்கவேயில்லை'' என்று குறைபட்டுக் கொண்டார். அப்போது பகவான், ``ரங்கா! கழுத்துவரை கங்கையின் வெள்ளப் பெருக்கில், தண்ணீரில் நின்றுகொண்டு, தாகமாக உள்ளது என்றும், அதைத் தீர்த்துக் கொள்ள வீட்டுக் குழாயிலிருந்து தண்ணீர் கொண்டு வர வேண்டுமென்றும் கேட்கும் ஒருவரைப் போன்றுள்ளது நீ பேசும் பேச்சு'' என்று அன்போடு சிரித்தவாறு பதிலுரைத்தார்.

தென்னிந்தியாவில், கும்பகோணத்தில், பன்னிரண்டு வருஷங்களுக்கு ஒருமுறை, மஹாமகம் என்ற ஒரு மிகப் பெரிய இந்து சமயத் திருவிழா நடைபெறும். லக்ஷக்கணக்கில் மக்கள் கூடுவர். அந்த விழாவிற்குத் தான் குடும்பத்தோடு போகப் போவதாக ரங்கன், பகவானுக்குக் கடிதம் எழுதியிருந்தார். இருந்தும், அத்திருவிழாவில் முக்கிய தினத்தன்று எதிர்பாராத விதமாக அவர் பகவானைக் காண வந்துவிட்டார். பகவான் ஆச்சரியத்தோடு, ``நீ இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறாய்? எல்லோரும் திருவிழாவிற்குச் சென்று கொண்டிருக்கும் சமயத்தில், நீ எதற்காக இங்கு வந்தாய்?'' என்று வினவினார். அதற்கு ஆழ்ந்த பக்தியோடு, ``இங்குள்ள கடவுள் கும்பகோணத்தில் இருப்பவரைவிட மிகவும் பெரியவர் என்பதை நான் உணர்ந்து கொண்டு விட்டதால் இங்கு வந்தேன் என்று பகவானிடம் பதில் உரைத்தார். சில

தினங்கள் தங்கிய பின், திரும்ப வேண்டிய வேளை வந்தது. பகவானை விட்டுப் பிரியும் வேதனையைத் தாங்க முடியாமல் அவர் பலமாக அழுதார். பகவான் அவரைச் சமாதானம் செய்து, “ரங்கா! நீ கும்பகோணத்தில் இருந்து இங்கு வந்ததாகவும், இப்போது மதுரைக்குச் செல்வதாகவும் கற்பனை செய்கிறாய். உண்மையில் நீ எப்போதும் எங்கு இருக்கிறாயோ அங்கேயேதான் இப்பொழுதும் இருக்கிறாய். அதாவது என்னுடன்தான் இருக்கிறாய். நீ என்னோடு இருக்கும்பொழுது ஆனந்தக்கடலில் மூழ்குகிறாய். உனது சொந்த முயற்சியால் ஆத்மாவின் நிலையை நீ அடைந்துவிட்டால், என்னிடம் விசேஷமாக எதுவும் இல்லை என்பதை நீ உணர்ந்து கொள்வாய். நீயும் அதே ஆத்மாதான் என்பதை உணர்ந்து கொள்வாய்” என்று கூறினார். சில சமயங்களில், “நான் வார்த்தைகளே இல்லாத இடத்தில் உள்ளேன்” என்று பகவான் கூறுவார். அப்போது, “பின், நீங்கள் ஏன் பேசுகிறீர்கள்?” என்று ரங்கன் கேட்பார். “கருணையால்” என்று பகவான் கூறுவார். ஒருமுறை ராமஸ்வாமி பிள்ளை என்ற மற்றொரு பக்தர் தனது சாவிக்கொத்தைத் தொலைத்து விட்டுப் பகவானிடம் வந்து, “எனது சாவிக்கொத்து தொலைந்துவிட்டது” என்றார். சாவிக்கொத்து எங்கு இருந்ததோ அங்கேயேதான் இருக்கிறது. அது காணாமல் போகவில்லை. அது எங்குள்ளதென்ற உனது ஞாபகம் தான் தொலைந்து விட்டது. ஆத்மா எப்போதும் எங்கும் உள்ளது. ‘நான்’ எப்போதும் எங்குமுள்ளது. அஞ்ஞானத்தினால் அதைத் தேடு வதிலேயே நமது நேரம் முழுவதையும் செலவிடுகிறோம்.

தற்போதைய ரமணாச்ரமத்திற்கு வந்த பிறகு, அங்கு இருப்பவர்களிடம் பல குறைகளைக் கண்டார் ரங்கன். “உங்களைச் சுற்றியே வாழும் உங்கள் பக்தர்களிடம், எவ்வாறு அஹங்காரம் இப்படி வளர்கிறது பகவானே?” என்று அவர் பகவானிடம் கேட்டார். “வேறு எப்படி அதை அழிக்க

முடியும்? முதலில் அது உள்ளேயிருந்து வெளியில் வரவேண்டும். அதனால் இது சுத்தம் செய்யும் நடவடிக்கையே அன்றி வளர்க்கும் நடவடிக்கை அன்று'' எனப் பதில் கூறினார் அவர். ஒருமுறை, ரங்கன், ''நீங்கள் எப்போதும் இந்தக் கற்கள் நிறைந்த மலையை ஏன் கடவுள் என்று புகழ்கிறீர்கள்?'' என்று கேட்டார். ''வெறும் பாறைகளின் குவியலே அருணாசலம் என்று நீ எண்ணுகிறாயா? தெய்வீக சக்தியுள்ளவர்களும், யோகிகளும், இன்றும் கூட இங்குள்ள குகைகளில் வாழ்கின்றனர். அருணாசலம் கடவுளே. சிவனும் அதுவே. உன் இதயமாக விளங்கும் ஆத்மாவும் அதுவே'' என பகவான் விளக்கினார்.

நண்பர்களுக்குள் வழக்கமாக நடப்பதுபோன்று, ரங்கனும் பகவானும் பரிஹாஸமாகவும் பேசிக்கொள்வதுண்டு. ஒருநாள், ரங்கன், ''உங்களுக்கு வாழ்க்கையில் நிறைவேற்ற வேண்டியது ஏதாவது உள்ளதா?'' என்று பகவானிடம் கேட்டார். ''எல்லாமே நிறைவேறிவிட்டது. விட்டுப்போனது எதுவும் இல்லை'' என்றார் பகவான். ''அப்படிச் சொன்னால் என்ன அர்த்தம்?'' என்று ரங்கன் கேட்கவும், பகவான், ''நான் விரும்புவதுபோல் நான் இருக்கலாம்'' என்று பதிலுரைத்தார். ரங்கன் அவரது வயது வந்த பெண்ணை அழைத்து வந்திருந்ததால், ''அப்படியானால், ஒரு பெண்ணை அழைத்து வந்து உங்களுக்குத் திருமணம் செய்து வைக்கட்டுமா?'' என்று ரங்கன் பரிஹாஸமாகக் கேட்டார். பகவானும் சளைக்காமல், ''கட்டாயம் செய்து வை'' என எதிர்மொழி கூறினார். சில ஆண்டுகளுக்குப் பின் பகவான் சிரித்துக் கொண்டே, ''இருபது ஆண்டுகளுக்கு, ரங்கன் வரும்-போதெல்லாம் நான் பயந்தேன். அவன் ஒருவேளை ஏதாவது பெண்ணை அழைத்து வந்து எனக்குத் திருமணம் செய்து வைத்துவிடுவானோ என்று நிஜமாகவே ரங்கனைப் பார்த்தாலே அஞ்சினேன்'' என விளையாட்டாகக் கூறினார்.

குறுகிய காலத்திற்குள், ரங்கனை மீண்டும் கஷ்டங்கள் சூழ்ந்து கொண்டன; அவரது மனைவி நோய்வாய்ப்பட்டாள். பெண்களுக்குத் திருமணம் கூடிவரவில்லை; வேலை போய் விட்டது; அடமானம் வைத்த வீட்டைத் திருப்ப முடியவில்லை. “என்னுடன் வந்து தங்கு” என்று பகவான் அவரை அழைத்தார். ஆனால் அவரிடம் மிகவும் கடுமையாக நடந்துகொண்டார். ஏனெனில் அவர் திருப்தியின்றி எப்போதும் முறையிட்ட வண்ணமாக இருந்தார். “பகவான் நீங்கள் எல்லோருடைய கேள்விகளுக்கும் பதில் அளிக்கிறீர்கள். ஆனால் என்னோடு பேசுவது கூட இல்லை. நாம் எத்தனை நெருங்கிய நண்பர்களாக இருந்தோம்! என்னுடைய பிரச்சனைகளைக் கூறி நான் புலம்பிக் கொண்டே இருக்கிறேன். நீங்கள் என் மீது சிறிது கூடக் கருணை காட்டுவதில்லை” என இவ்வாறு குறை கூறிப் பகவானைத் ‘தொண தொண’வென்று தொடர்ந்து தொந்தரவு செய்து கொண்டிருந்தார். பகவான் சற்றும் அசைந்து கொடுக்காமல் பாறை போன்று இருந்தார். ஒன்றிரண்டு மாதங்களுக்கு, இரவும் பகலும் இது தொடர்ந்தது. இடைவெளி இல்லாத, ரங்கனின் புலம்பலைப் பகவான் தன் கடுமையான மௌனத்தால் எதிர்த்தார். கோடைக்காலத்தில் ஓர் இரவு; ரங்கனால் அதற்கு மேல் பொறுக்க முடியவில்லை. அவர், பகவானின் பாதங்களில் விழுந்து அழத் துவங்கினார். “நான் உங்களை விடப்போவதில்லை. நீங்கள் எனக்குப் பதில் கூறியே ஆகவேண்டும். நான் துயரத்தில் தத்தளித்துக் கொண்டிருக்கிறேன்! என்னைக் காப்பாற்றுங்கள்! என் முகத்தைக் கூடப் பார்க்கமாட்டேன் என்கிறீர்களே! தயவு செய்யுங்கள்” என்று அழுது புலம்பிய ரங்கனை எழுப்பி நிறுத்தி, பகவான் வானத்தைச் சுட்டிக் காட்டினார். திருவண்ணாமலையில், மேக மூட்டமில்லாத கோடை இரவுகளில், வானில் வைரக் கற்களை வாரி இறைத்தது

போன்று நக்ஷத்திரங்கள் மிகப் பிரகாசமாக ஜ்வலிக்கும். கீழ்க்காணும் சம்பாஷணை மூலம் ரங்கனுக்கு ஆழ்ந்த, நுண்ணிய அறிவை வழங்க முற்பட்டார் பகவான்.

பகவான் கூறலானார்: "மேலே பார். நமது பிரபஞ்சத்திலுள்ள மிகவும் சிறிய நக்ஷத்திரத்தை அங்கே பார். சூரியன் மிகப் பெரிய நக்ஷத்திரம். அத்துடன் ஒப்பிடும்போது நமது பூமி மிகவும் சிறியது. ஆனாலும் மேலே காணப்படும் மிகச் சிறிய நக்ஷத்திரத்தோடு ஒப்பிட்டால், நமது சூரியனே மிகச் சிறியது. நான் கூறுவது புரிகிறதா?" என பகவான் கேட்கவும், "ஆம் பகவான்" என்று ரங்கன் பதில் அளித்தார்.

**பகவான்**: "அதனால், அந்தச் சிறிய நக்ஷத்திரத்தைவிட சூரியனே மிகச் சிறியது என்றால், நம் பூமி எத்தனை சிறியது?"

**ரங்கன்** : "மிகவும் சிறியதுதான் பகவான்"

**பகவான்**: "அந்தச் சிறிய நக்ஷத்திரத்தோடு ஒப்பிட்டால் ஆசியா எத்துணை சிறியது?"

**ரங்கன்**: அது இன்னும் சிறியதுதான்.

**பகவான்**: அந்த விண்மீனுடன் இந்தியாவை ஒப்பிட்டால்?

**ரங்கன்**: இந்தியா ஒரு சிறிய புள்ளியே.

**பகவான்**: அந்த நக்ஷத்திரத்தோடு அருணாசலத்தை ஒப்பிட்டுப் பார்த்தால் அது எத்தனை சிறியது?

**ரங்கன்**: அது மிக மிகச் சிறிய புள்ளி பகவான்.

**பகவான்**: அந்த நக்ஷத்திரத்தோடு ரமணாச்ரமத்தை ஒப்பிட்டாலோ?

**ரங்கன்**: அது ரொம்ப ரொம்பச் சிறிய புள்ளி.

**பகவான்**: அதோடு உன்னை ஒப்பிடும்போது நீ யார்?

என்ற பகவானின் கேள்வி ரங்கனின் கண்களைத் திறந்தது. “கண்ணுக்குப் புலப்படாத ஒரு புள்ளியை போன்ற நீ உன்னைப் பற்றியே எப்பொழுதும் எண்ணிக் கொண்டிருக்-கிறாய்” என்ற பகவானின் பதில் அவருடைய இதயக் கதவுகளைத் திறந்தது. பகவானின் கால்களில் வீழ்ந்து கதறியழுதார். பகவானது அருளால் ஏற்பட்ட ஞானோதயத்-தினால் பரவச நிலையை அடைந்தார் ரங்கன்.

ரங்கனால் மறுதினம் உறங்க முடியவில்லை. தனக்கு அருகே படுத்திருந்த அவரை எழுப்பி வீட்டிற்குத் திரும்பிச் செல்லுமாறு பகவான் கூறினார். வீடு திரும்பியபோது, அனைத்துப் பிரச்சனைகளுக்கும் தீர்வு கிடைத்திருந்தது. கருணையும், தயையும் நிறைந்த அவரது உண்மையான நண்பன் பகவான் அவரைக் காப்பாற்றிவிட்டார். ஊலகாயதமான துன்பங்கள் தீர்ந்ததோடல்லாமல், ஆன்மீக விழிப்பையும் அவர் அடைந்தார். ஞானி ஒருவர் பக்தனைத் தன்னிடம் ஈர்த்துக் கொள்ளும்போது, பல சமயங்களில் பக்தனுடைய குடும்பம் முழுவதையுமே, தன் அன்பாலும் ஞானத்தினாலும் ஈர்த்துக் கொள்கிறார். ரங்கனுடைய விஷயத்திலும், அவருடைய தாய், மனைவி, சகோதரர்கள் முதலியோர், பகவானுடைய அன்பு என்னும் வலையில் விழுந்து முழுமையாக அவரிடம் பக்தி செலுத்தினர்.

ரங்கனுக்கு ஒரு சகோதரர் இருந்தார். அவரும் பகவானுடன் படித்தவர்தான். மணி என்று அவருக்குப் பெயர்; என்றாலும் அவருக்குப் போக்கிரி மணி என்று பட்டப் பெயர் இருந்தது. முரட்டுத்தனமாக இருப்பார். வாட்ட சாட்டமாக இருந்த அவர் எங்கு சென்றாலும் எல்லோரையும் பயமுறுத்துவார். அவருடன் சண்டையிடும் துணிவு யாருக்கும் இல்லாததால், அவர் கூறியபடி எல்லாம் கேட்பார்கள். குழந்தைப் பருவத்தில் பகவானைப் பார்த்ததுதான் என்றாலும் அவருடைய அன்னைக்குப் பகவானிடம் பக்தி உண்டு.

விருபாக்ஷ குகையில் ஒரு முறை பகவானைப் பார்த்தபின் மணியின் தாயார் முழுமையாக மாறிவிட்டார். தாய்க்கு ஆன்மீகத்தில் இருந்த நாட்டம் மகனுக்கு இருக்கவில்லை. ஒருமுறை, திருப்பதிக்குச் சென்று கொண்டிருந்தபோது, ரயில், திருவண்ணாமலை வழியாகச் சென்றது. “இங்கே இறங்கி, நமது வேங்கடராமனைப் பார்த்துவிட்டுப் போகலாம்” என்று தாயார் மகனிடம் கெஞ்சிக் கேட்டார். “எனக்கு இந்தப் போலிச் சாமியார்களிடமெல்லாம் நம்பிக்கை இல்லை. நான் வரமாட்டேன்” என்று வேதனையளிக்கக் கூடிய விதத்தில் மணி பதில் கூறினார். திருப்பதிக்கு அவர்கள் நேராகப் போய்விட்டார்கள். திரும்பி வரும் வழியில் மணியின் தாய் மீண்டும் அவரிடம் கெஞ்சிக் கேட்டார். திருவண்ணாமலையைத் தாண்டி என்னால் போகமுடியாது. எனக்கு, நம் வேங்கடராமனைப் பார்த்தே ஆகவேண்டும்” என்று உறுதியாகக் கூறியபோது, போக்கிரி மணியும் சம்மதித்தார். “உன் மீது இரக்கப்பட்டு அங்கு உன்னை அழைத்துச் செல்கிறேன். ஆனால் நான் அவனுக்கு நமஸ்காரம் செய்யமாட்டேன். அவனிடம் மரியாதையாகவும் பேசமாட்டேன். நான் அதே போக்கிரி மணியாகத் தான் இருப்பேன். ஆன்மீகம் பேசுபவர்களை நான் மதிப்பதில்லை. உண்மையைக் கூறப்போனால், உனக்கு ஆக்ஷேபணை இல்லை என்றால், அவனுடைய காதைத் திருகி, மதுரைக்கு திருப்பி இழுத்துச் சென்று, அவனுடைய தாயிடம் சேர்த்து விடுவேன். சிறிய வயதில் ஸந்நியாஸமாவது? சுத்த அபத்தம்” என்று மணி கூறினார்.

விருபாக்ஷ குகைக்குச் சென்றதும் மணியின் தாயார் பகவானை வணங்கினார். போக்கிரி மணி பிடிவாதமாக நின்று கொண்டிருந்தார். பிறகு பகவான் அவரைத் திரும்பிப் பார்த்தார். அவ்வளவுதான்; அவர் உடம்பு நெடுஞ்சாண்கிடையாக பகவான் முன் விழுந்து கிடந்தது. தன்னை எது விழவைத்தது என்று

அவருக்குப் புரியவில்லை. சிறிது நேரத்திற்குப் பின் எழுந்து பகவானைப் பார்த்தார். என்னவோ நடந்திருந்தது! அவர் முழுவதுமாக மாறியிருந்தார். மணியின் தாயார் பகவானிடம், “இது யார் என்று உங்களுக்குத் தெரிகிறதா? உங்களால் அடையாளம் கண்டுபிடிக்க முடிகிறதா?” என்ற கேட்டபோது, “ஓ! ஏன் கண்டுபிடிக்க முடியாது? நம்ம போக்கிரி மணிதானே இவன்” என பதிலளித்தார். மாற்றம் பூரணமாக இருந்ததால், மணி தலைகீழாக மாறி, ரங்கனைவிடப் பெரிய பக்தராக ஆகிவிட்டார். பகவானை இறைவனாகவே கருதி மரியாதை செய்தார். மரியாதை அளவு கடந்து போனதால் சில சமயங்களில் குகைக்கு வெளியே நின்று கொண்டு, “பகவானிடம் ப்ரம்மா வந்துள்ளேன் என்று கூறு” என்று வேறு யாரிடமாவது சொல்லியனுப்புவார். அவர் சொன்னதற்கு என்ன அர்த்தம் என்றால், பகவான், மிகவும் சக்தி வாய்ந்த முழுமுதற் கடவுள் சிவன் என்றும், தான் அவரைவிடக் குறைந்த மதிப்புள்ள ப்ரம்மா என்பதும் ஆகும். ஆனாலும், தானும் கடவுள் தான் என்ற எண்ணம் அவருக்கு இருந்தது.

ஒருமுறை, அவரது குடும்பத்தினர் அனைவருக்குமே சங்கராச்சாரியார் மந்திர தீக்ஷை அளித்தார். ஆனால் மணி, “நான் மனிதர்களிடம் தீக்ஷை பெறமாட்டேன்” எனக் கூறி தீக்ஷை பெற மறுத்துவிட்டார். “அவர்களெல்லாம் தெய்வீகமானவர்கள் என்று நீங்கள் சொல்வீர்கள். நான் கடவுளிடமிருந்து மட்டுமே தீக்ஷை பெற்றுக் கொள்வேன். என்னுடைய கடவுள் ரமண மகரிஷிதான்” என்று கூறிவிட்டு, அடுத்த ரயிலைப் பிடித்துத் திருவண்ணாமலைக்கு வந்துவிட்டார். “என் குடும்பத்தில் அனைவரும் சங்கராச்சாரியரிடமிருந்து மந்திரதீக்ஷை பெறச் சென்றுள்ளனர். நான் கடவுளிடம் இருந்து நேரடியாகத் தான் தீக்ஷை பெறுவேன் என்று கூறி உங்களிடம் வந்துவிட்டேன்” என்று மணி கூறியபோது பகவான் சிரிக்க ஆரம்பித்துவிட்டார்.

பகவானுடைய மறுமொழி சிரிப்பாக இருந்ததால் மணி, “இதையெல்லாம் நான் ஏற்கமாட்டேன். எனக்கு மந்திரம் தந்தாலொழிய நான் இங்கிருந்து போகமாட்டேன்’’ என்றார். பகவான் சிரித்தபடி அமைதியாகவே இருந்தார். பின், மணியின் பிடிவாதத்தைக் கண்டு, கடைசியில் அவரைப் பார்த்துச் ‘சிவ சிவ’ என்று கூறினார்.



ரங்கய்யர் மற்றும் குடும்பத்தினர் - பகவான் ஜயந்தியின் போது எடுத்தது (ஸ்ரீ பகவான் படத்திற்கு அருகில் , இடுப்பில் கையை வைத்துக் கொண்டு நிற்பவர் போக்கிரி மணி)

அந்த நொடியிலிருந்து, “சிவ சிவ’’ என்ற புனித மந்திரத்தை இடையறாது ஜபித்து, அதன் பலனாக முழுமையான மாற்றமடைந்தார். க்ஷயரோகம் உடம்பைப் பாதித்திருந்த போதும், ஒரு நிமிடம் கூட விடாமல் ஜபம் செய்தவாறிருந்தார். முன்னர், போக்கிரியாக இருந்த அவரது முகம், புதுப்பொலிவுடன், பிரகாசமாக விளங்குவதை அவரது குடும்பத்தினர் கவனித்தனர். மரணத் தறுவாயில், “என் கடவுளைத் தரிசிக்க வேண்டும்’’ என அவர் கேட்டுக்

கொண்டபோது, ரமணாச்ரமத்திற்கு அழைத்து வந்தனர். அவர் பகவானிடம், ‘‘நான் இந்த உடலை விடப்போகிறேன். அதனால் அதற்கு உங்கள் ஆசிகள் கிடைக்கட்டும்’’ என்று கூறினார். போக்கிரி மணியைப் பகவான் வேடிக்கையாகவே பார்ப்பார். ஏனெனில் அடுத்த நிமிடம் அவர் என்ன செய்வார் என்பது யாருக்கும் தெரியாது. தரையில் படுத்து, பகவான் அமர்ந்திருந்த இடத்தைச் சுற்றி மூன்று முறை அங்கப் பிரதக்ஷிணம் செய்தார். ‘‘இந்த தேஹத்தின் பிரயாணம் இத்துடன் முடிவு பெற்றது’’ என்று கூறி, ‘சிவ சிவ சிவ சிவ’ என்று ஓதியவாறு வீட்டிற்குத் திரும்பினார். அவர் உயிர் பிரிவதற்குச் சற்று முன், அநேக வருத்தத்துடன் அமர்ந்திருந்த மனைவியை நோக்கி, ‘‘கவலைப்படாதே. நான் உன்னை விட்டுப் போகவில்லை. நாற்பது நாட்களுக்குப் பின் திரும்பி வந்து உன்னை என்னோடு அழைத்துச் செல்கிறேன்’’ என்ற கூறினார். அவரது மனைவி, சரியாக நாற்பது நாட்கள் ஆனபோது இறைவனடி சேர்ந்தாள்!

ரங்கனும், போக்கிரி மணியும் மந்திர ஜாலம் போன்று இத்துணை மாறுவார்கள் என்று யாரும் கற்பனை கூடச் செய்திருக்க மாட்டார்கள். குருவின் அருள் ஒருவர் மீது விழும் போது தானாகவே மாறிவிடுகிறார். குருவின் அருள் உனக்குக் கிடைத்த அத்தருணத்தில் இருந்து, உன் மூலம் எல்லாமே நிறைவேறுகிறது; உன்னால் நிறைவேற்றப்-படுவதில்லை. இதில் மிகப்பெரிய வித்தியாசம் உள்ளது. ‘உன்னால்’ என்றால் உன் அஹங்காரத்தால் என்று பொருள். ‘உன் மூலம்’ என்று கூறும் போது திருவருளால் நிறைவேறுகிறது என்று பொருள்.



## சாப் ஜான்



பகவானின் மற்றொரு சிறந்த நண்பர், அவருடைய வகுப்பில் படித்த தோழனாகிய சாப் ஜான் என்னும் இஸ்லாமியர். அவரைச் சந்தித்து, அவரது குருவாகிய பகவானிடம் இருந்து அவர் நேரடியாக பெற்ற பக்தி-பூர்வமான அனுபவங்களைப் பற்றி கேட்கும் வாய்ப்பு, எனக்குக் கிடைத்தது. என் உடன்பிறப்பாகிய சுந்தரம் வேலை பார்த்த நெய்வேலியில் அவர் வாழ்ந்து வந்தார். ஒருநாள் சுந்தரத்திடம் இருந்து கிடைக்கப் பெற்ற செய்தியினால் திகைப்படைந்தேன். – 'என்னுடைய சக ஊழியர், தனது தந்தை பகவானுடன் இருந்ததாகக் கூறினார்'' என்பதே அச்செய்தி. நான் உடனே நெய்வேலிக்கு புறப்பட்டுச் சென்றேன். சாப் ஜான் பகவானுடன் நான்கிலிருந்து ஆறாம் வகுப்பு வரைப் படித்திருக்கிறார். அவருடன் கால்பந்து விளையாடியுள்ளார். சாப் ஜான், நான் பார்த்த போது 90 வயது முதியவராகவும், கண் பார்வையற்றவராகவும் இருந்தார். நான் அவர் வீட்டிற்கு போக முடிவு செய்த அன்று தன் மகனிடம், "என்னுடைய வகுப்புத் தோழன் வேங்கடராமன் இன்று வரப்போகிறார். என்னைப் பார்ப்பதற்காக வருகின்றார்'' என்று கூறியுள்ளார். நான் அவரை வணங்கியபோது என்னை "வேங்கடராமன்'' என்று விளித்தார். அவருடைய மகன், "இவர் கணேசன்! அப்பா, இவர் கணேசன்!'', என்று திரும்பத் திரும்ப திருத்திக் கூறியும், "ஆம், வேங்கடராமன் வா'' என்று கூறியே தொடர்ந்து பேசினார். அவர் என்னைத் தொட்டுப்பார்த்து, தழுவிக்கொண்டு, என்னை அவர் அருகில் அமரச் செய்து, கண்களில் நீர் மல்க, "இப்படித்தான் என்னுடைய தோழன் வேங்கடராமன், நான் அவனைத் தொட்டுப்பார்க்க அனுமதித்தான், என்னை அவனருகில் அமர வைத்து உணவு அருந்தச் செய்தான்.

இப்போது என்னை ஆசீர்வதித்து, கூட்டிச் செல்ல வந்திருக்கிறான். எனது தோழன் மிகவும் உண்மையானவன்'' என்று கூறினார்.

அவரை வணங்கிய பிறகு, நான் அவருடைய விலைமதிப்பற்ற வகுப்புத் தோழனாகிய பகவானைப் பற்றிக் கூறுமாறு வேண்டிக் கொண்டேன். அவர் மடைதிறந்த வெள்ளமென தனது மனதைத் திறந்து கொட்டினார். – ''வேங்கடராமன் தமிழில் சிறந்த புலமைப் பெற்றவன். அவன் எப்போதும் வகுப்பில் முதன்மையான மாணவன். குறிப்பாகத் தமிழ் இலக்கணத்தில் ஸூத்திரங்களைக் கூறுவதில் மிகச் சிறந்தவன். எங்களுடைய தமிழ் பண்டிதர் ஜான் பாலகிருஷ்ணனுக்கு அவனை மிகவும் பிடிக்கும். அவன் சுமாராகவே ஆங்கிலம் படிப்பான். மற்ற பாடங்களில் சராசரிக்கும் மேற்பட்ட மாணவனாகவே இருந்தான். பொதுவாக, பள்ளிப் பாடங்களில் அவனுக்கு மிகுந்த விருப்பம் கிடையாது. அவன் விளையாடுவதில், குறிப்பாக கால்பந்து ஆடுவதில் மிகுந்த விருப்பமுடன் இருந்தான். அவன் மாணவனாக இருந்தபோதே மிகுந்த தெய்வ பக்தியுடையவன். திருப்பரங்குன்றத்தில் உள்ள சுப்பிரமணிய ஸ்வாமி கோயிலை மிகுந்த ஈடுபாட்டுடனும், தெய்வ பக்தியுடனும், மிகுந்த களிப்புடனும் வலம் வருவான். என்னைப் பலமுறை அவனுடன் அழைத்துச் சென்றுள்ளான். என்னை அவனுடன் கோயிலைச் சுற்றிவர கூட்டிச் செல்லும்போது, ''கடவுளின் படைப்புக்கள் அனைத்தும் ஒன்றே. கடவுள் ஒருவரே. மேலெழுந்த வாரியாக நோக்கும்போது கடவுளின் உருவங்களில் இருக்கும் வேறுபாடுகள் அனைத்தும் மனிதனால் ஏற்படுத்தப்பட்டவையே'' என்றும் கூறுவான். அவனால் இவ்வாறு என் மனதில் விதைக்கப்பட்ட பரந்த நோக்கே, என்னை காஞ்சிபுரம் வரதராஜ பெருமாளின் சிறந்த பக்தனாக்கியது.

வேங்கடராமன் என்னிடம் கூடச் சொல்லாமல் வீட்டைவிட்டு காணாமல் போனது எனக்கு அதிர்ச்சியாக இருந்தது. பிறகு நான் காவல்துறைப் பணியில் சேர்ந்தேன். 1903 இல், உத்தர மேரூர் என்ற ஊரில் இருந்த ஒரு கடையில் வேங்கடராமனின் உருவப்படத்தைப் பார்த்து வியப்பிற்குள்ளானேன். ஆனால் அது மிகவும் வித்தியாசமான தோற்றமாகும். நான் மிகவும் ஆவலுடன் அந்த உருவப்படம் எப்படி கிடைத்தது என்று கடைக்காரரிடம் கேட்டேன். அந்த உருவப்படம் திருவண்ணாமலையில் வசிக்கும் ஒரு பிராமண ஸ்வாமியினுடையது என்றும், அவர் அப்போது மௌனத்தில் இருப்பதாகவும், அந்தக் கடைக்காரர் கூறினார். என் பழைய (பால்ய) நண்பனைச் சந்திக்கும் ஆர்வத்துடன் அவரது இருப்பிடத்திற்குச் சென்றேன். என்னை மிகுந்த மகிழ்ச்சியுடன் வரவேற்றார். ஆனால் பேசவில்லை. ஒரு பிரகாசமான புன்னகையை வீசி தலையை அசைத்தார். முன்பு பார்த்ததைவிட மிக அழகாகவும், சந்நியாசியின் ஒளி மிகுந்த தோற்றத்துடனும் இருந்த என் பள்ளித் தோழனைச் சந்தித்தபோது மெய் சிலிர்த்துப்போனேன்.

நான் திருப்பத்தூரில் காவல்துறை அதிகாரியாக இருந்தபோது, தற்போது உள்ள ரமணாச்ரமத்திற்குச் சென்றேன். அப்போது எனது தந்தை இறந்த சமயமாதலால் நான் மிகவும் வருத்தத்துடன் இருந்தேன். ஸ்ரீ ரமணர் தனது தாயின் ஸமாதியை எனக்கு காட்டியபோது சற்று ஆறுதலடைந்தேன். உடம்பைப் பொறுத்தவரை மரணம் என்பது தவிர்க்க முடியாத ஒன்று என்பதை அவரது செயல் எனக்கு உணர்த்தியது. அதற்குப் பிறகு நான் அவரைப் பலமுறைச் சென்று பார்த்தேன். ஒவ்வொரு முறையும் என்னைச் சிறப்பாகக் கவனித்ததுடன், அங்கு உள்ளவர்களுக்கு என்னை அறிமுகம் செய்து வைத்தார். உணவகத்தில் என்னை அருகில் அமர வைத்து என்னுடன் சாப்பிடுவார். அவர் அவ்வாறு செய்வது

மிகவும் அரிதானது என்று பிறகுதான் எனக்குத் தெரிந்தது. நான் நண்பன் என்ற நிலையிலிருந்து அவருடைய பக்தன் என்ற நிலைக்கு மாறினேன். அவர் அகமுகமாக என்னுள் கொண்டுவந்த மாற்றம், பகவான் என்மேல் பொழிந்த மிகப்பெரிய ஆசீர்வாதமாகும். ஒருமுறை, அவர் என் கனவில் தோன்றி, என் மனைவி இறக்கப்போகிறார் என்பதை அறிகுறிகளால் சுட்டிக்காட்டி, எனக்கு மறைமுகமாக ஆறுதல் கூறி, என்னை அந்த அதிர்ச்சி தரும் நிகழ்வுக்குத் தயார்படுத்தியது, அவர் பெரிய மஹான் என்பதைப் பறைசாற்றுகிறது. அவ்வாறு அவர் காட்டிய அறிகுறியின்படி, வெகு விரைவிலேயே என் மனைவி இறந்துவிட்டாள். ஆனால் மகரிஷியின் கருணையால் அது என்னை அதிகமாகப் பாதிக்கவில்லை'' என்று கூறி முடித்தார்.

பகவான் மீது ஸாப் ஜான் கொண்டிருந்த ப்ரேமையை-யும் பக்தியையும் கண்டு நான் நெகிழ்ந்து போனேன். அவரிடம் குறைந்த நேரமே பேசினேன் என்றபோதும், நான் அவரிடம் விடைபெற்றுச் சென்ற பின், அவர் தன் மகனிடம், ''என் வேங்கடராமன் உண்மையான தோழன். அவன் என்னை வழியனுப்புவதற்காகவே இன்று வந்துள்ளான்'' என்று கூறியுள்ளார். இரண்டு நாட்களுக்குப் பிறகு அவர் இறைவனடி சேர்ந்தார்.



## டி.கே. சுந்தரேச ஐயர்



பகவானின் பழைய பக்தர்களைப் பற்றி நாம் கேட்கவோ, படிக்கவோ செய்யும் ஒவ்வொரு வினாடியிலும், இயற்கையாக அவர்கள் காட்டிய வழியில் நடக்க முற்படுகிறோம். அவர்கள் எந்த அருணாசலம் என்னும் ஆத்மாவோடு தங்களை மீண்டும் இணைத்துக் கொண்டார்களோ, அதே ஆத்மாவை நாம் மேலும் நெருங்குகிறோம். விஸ்வநாத ஸ்வாமி குஞ்சு ஸ்வாமி, அண்ணாமலை ஸ்வாமி முதலியோரிடமிருந்தும், மற்றும் பலரிடமிருந்தும் அந்த பக்தர்களைப் பற்றிக் கேட்டதன் பயனாக, மௌனமான பரவச நிலையில் கரைந்து போயிருக்கிறேன். இந்தப் பரவச நிலையை அனுபவிப்பதற்கு நாம் செய்ய வேண்டியதெல்லாம் பகவான் கூறிய மொழிகளைக் கவனமாகக் கேட்பதுதான்: - "பொய்யான தோற்றங்களிலிருந்து ஸத்தியத்திடம் உன் கவனத்தைத் திருப்பு. உடல் - மனம் என்ற சேர்க்கையும், இந்த உலகமுமே பொய்யான தோற்றங்கள்". நாம் கவனத்தை எண்ணங்கள் என்ற பொய்த் தோற்றங்களில் இருந்து விலக்கி, ஒளிவீசும் இந்த பக்தர்களின் அழிவற்ற ஸாந்நித்தியம் என்ற உண்மைப் பொருளில் திருப்பி அதில் வாழ முற்படுவோம்.

இந்து கலாசாரம், பாரம்பரியம் இவற்றின் படி குரு என்ற சொல் அதன் பொருள், முக்கியத்துவம் இவை குறித்து நம் அனைவருக்குமே தெரியும். இருந்தாலும் உபகுரு என்றால் என்னவென்பது சிலருக்குத் தெரியாமல் இருக்கலாம். குருவை எத்துணை மதிக்கிறோமோ அது போன்றே குருவைச் சுட்டிக் காட்டும் உபகுருவுக்கும் மரியாதை செலுத்தவேண்டும். உபகுரு, ஒரு புத்தகமாகவோ, மரமாகவோ அல்லது ஒரு நண்பனாகவோ, எதுவாக இருந்தாலும் அதைப் பற்றிக் கவலையில்லை. உபகுருவும், குருவும் ஒரே மாதிரியாக

மதிப்பும் மரியாதையும் செலுத்தப்பட வேண்டியவர்கள். குருவுக்குக் கடமைப் பட்டிருப்பதைப் போன்றே உபகுருவுக்கும் கடமைப்பட்டுள்ளோம்.

எனக்கு இரண்டு உபகுருக்கள்; முதல் உபகுரு என் தாய். எனக்கு ஒன்றரை வயதாகியிருந்த அக்காலத்தின் நினைவு வருகிறது. நான் தொட்டிலில் கிடந்தேன். என் அன்னை, ரமணர் தாலாட்டு ஒன்றைப் பாடிக்கொண்டிருந்தாள். என்னைத் தூங்கச் செய்ய வேண்டுமென எண்ணும் போதெல்லாம் அந்த ரமணர் தாலாட்டை அவர் பாடுவார். இப்பொழுதும், கண்ணை மூடிக்கொண்டு, என் இதயத்தின் மீது கவனத்தைத் திருப்பும் போதெல்லாம், என் தாய் அந்தத் தாலாட்டைப் பாடுவதை என்னால் கேட்கமுடிகிறது. குருபக்தியின் விதையை என்னிடம் விதைத்தவர் என் தாய். தவழும் பருவத்தில் என்னைப் பகவான் முன் உட்கார வைப்பார். சற்று வளர்ந்த பின், தினமும், “பகவான் முன் சென்று அவரை வணங்கு. அவரது கண்ணைப் பார்த்து அருளைப் பெற்றுக் கொள்” என்பார். நான் பள்ளிக்குச் செல்லத் துவங்கியபோது அன்னையிடம் ஏதாவது நிகழ்ச்சியைப் பகிர்ந்துகொண்டால் உடனே, “இதைப் பகவானிடம் போய்க் கூறு” என்பார். நான் புதுப் பேனா வாங்கினால், “அதைக் கொண்டுபோய் பகவானிடம் காட்டு. அவருடைய கையில் கொடுத்துப் பின் வாங்கிக்கொள்.” என்பார். அவர் மரணம் வரை எனக்குக் கொடுத்த ஒரே உபதேசம், “உனக்கு பகவான் மட்டும் போதும். வேறு எதுவும் தேவையில்லை” என்பதாகும்.

எனது இரண்டாவது உபகுரு, எனது பள்ளி ஆசிரியர். T.K. சுந்தரேச ஐயர். நாங்கள் அவரை TKS என அழைப்போம். அவரது பணிவு அபூர்வமானது. அவரது எளிமை அசாதாரணமானது. நான் 6ஆம் வகுப்பில் படித்தபோது எனக்கு ஆசிரியராக இருந்தார். என்னிடம் விசேஷ கவனம்

செலுத்துவார். அடிக்கடி ரமணாச்ரமத்திற்கு வருவார். என்மீது மிகுந்த, தனிப்பட்ட அக்கறை காட்டுவார். என்னை அழைத்து, “கணேசா, இங்கு வா. ஒரு ஸந்நியாஸி வந்துள்ளார். அவரை நமஸ்காரம் செய்” எனக் கூறுவார். அல்லது, “ஒரு ஸந்நியாஸினி வந்துள்ளார். வந்து வணங்கு” என்று கூறுவார். அல்லது, “இந்த ஸ்வாமிஜி சங்கரமடத்தைச் சேர்ந்தவர். அவரை விழுந்து வணங்கு” என்று உரைத்துத் தானும் வணங்கி, என்னையும் வணங்கும்படி கூறி உத்தரவிடுவார். அவரது இந்தச் செயலுக்கு ஆச்ரமத்தில் சிலர் எதிர்ப்புத் தெரிவித்தனர். “TKS-க்குத் தான் சித்த ஸ்வாதீனமில்லை. கணேசனையும் பைத்தியமாக்குகிறார். விநோத மனப்பான்மை-யுள்ளவர்களை எல்லாம் சாதுக்கள், ஸந்நியாஸிகள் என்று கூறி அவர்களை எல்லாம் நமஸ்கரிக்கும்படி செய்கிறார்” என்று குற்றம் சாட்டுவார்கள். பகவானுடைய அசாதாரணமான அருளே என்னை, என் ஆசிரியர் TKS-யிடம் கொண்டு சேர்த்தது என நான் நம்புகிறேன்.

பிற்காலத்தில் எனக்கு வயது வந்த பிறகு, பாரதத்தில் முன் வாழ்ந்தவர்களும், வாழ்ந்து கொண்டிருப்பவர்களுமான பல சாதுக்கள், ஸந்நியாஸிகள், ஞானிகள் முதலியவர்களை TKS தான் அறிமுகப்படுத்தினார். ஸ்வாமி ராம்தாஸிடம் அனுப்பியவரும் அவரே. ஸ்வாமி ராம்தாஸ் எனக்கு வழி காட்டுவார் என்ற உள்ளுணர்வு அவருக்கு இருந்தது. தனது ஆன்மீக வாரிசான அன்னை கிருஷ்ணாபாயே, என் வாழ்நாள் முழுவதும், என்னை வழி நடத்தக் கூடியவர் என்று ஸ்வாமி ராம்தாஸ் உணர்ந்திருந்தார். வாழ்ந்து கொண்டிருந்த ஞானிகளில் திருச்சி ஸ்வாமி அதிகம் ப்ரபலம் ஆகாதவர். அவரை யாருக்குமே தெரியாத நிலையில், TKS என்னை அவரிடம் அனுப்பி நமஸ்கரிக்கும்படி செய்தார்.

யோகி ராம்ஸூரத்குமாரைத் திருவண்ணாமலையில் ஒருவருக்குமே தெரியாமல் இருந்த அந்த சமயத்தில் அவர்

மணிக்கணக்காக TKS உடன் வந்து அமர்ந்திருப்பார். ஒரு நாள் TKS யோகியைச் சுட்டிக்காட்டி, “கணேசா! இவர் ஒரு சித்த புருஷர். பசியோடு இருக்கிறார். ஆகாரம் ஏதாவது கொண்டுவந்து கொடு” என்று கூறியவுடன், நான் சமையலறைக்கு ஓடிச்சென்று, உணவு எடுத்து வந்து யோகிக்குக் கொடுத்தேன்.

எனது குரு, பகவான் ஸ்ரீ ரமண மகரிஷி கூறியுள்ள ஒரே ஒரு வழியில்தான் ஆன்மீக இதயத்தைத் திறக்க முடியும். “அது ஒரு தாமரை மொட்டுப் போன்றது. அதன் இதழ்கள் ஒவ்வொன்றாக விரிக்கப்படவேண்டும். இதழ்கள் மலர்ந்தால் மட்டுமே ஆன்மீக அனுபவங்களைப் பெற இயலும்” என்று அவர் கூறியுள்ளார். சாஸ்திரங்கள் படிப்பதோ, ஆன்மீக சாதனைகளோ இந்தத் தாமரையை மலரச் செய்யாது. எந்த யோகமும் அதை மலர்விக்காது. அந்த ஆன்மீகப் பாதையில் ஏற்கனவே பயணம் செய்துள்ளவர்களின் பார்வையும், அருகாமையும் ஆசிகளும் மட்டுமே அதைச் செய்யவல்லது. ஒரு பார்வையினால் இதயத்தில் ஒரு இதழை அவர்களால் மலரும்படி செய்ய முடியும். ஏதோ கடினமான ஒன்றை மென்மையாகக் கூறுவதன்று இது. என்னைப் பொறுத்தவரை குறிப்பிட்ட ஒரு மஹானின் தொடர்பாலேயே ஒவ்வொரு இதழும் மலர்ந்தது.

ஒருமுறை TKS-யிடம், “நமக்கு பகவான் குருவாக விளங்கும்போது, என்னை ஏன் மற்ற ஞானியர்களிடம் செல்லுமாறு கூறுகிறீர்கள்?” என்று கேட்டபோது, அழகான விளக்கம் ஒன்றை அவர் தந்தார். “பகவான் ஒரு பெரிய ஸமுத்திரம். ஒட்டு மொத்தமான உணர்வின் வடிவம். மற்ற தெய்வீக புருஷர்கள், சாதுக்கள், ஸந்நியாஸிகள், ஞானிகள் முதலியோர் நதிகளைப் போன்றவர்கள். உன்னுடைய நிலை என்ன கணேசா? நீ ஒரு சொட்டுத் தண்ணீராகவாவது இருக்கவேண்டுமென நான் விரும்புகிறேன். உன்னை

ஸமுத்திரத்திற்கு அழைத்துச் செல்லக் கூடிய பெரிய நதிகள், சிற்றாறுகள், ஓடைகள், கால்வாய்கள் இவற்றின் அன்பை உணர்ந்தால் மட்டுமே, நீ ஒரு சொட்டுத் தண்ணீர் என்பதை உன்னால் உணர முடியும். நீர் தொடர்ந்து ஓடுவது அது எங்கிருந்து பிறந்ததோ அந்தக் கடலை அடைவதற்காகவே என்று நமது ஆன்மீக நூல்கள் கூறுகின்றன. இது தொடர்ந்து நிகழும் ஒன்று. கடலைச் சென்றடைய வேண்டுமானால், நீ இப்போதே ஒரு சொட்டுத் தண்ணீர் என்பதை உணரவேண்டும். அந்த ஒரு துளி தண்ணீர், நதியோடு கலந்தால் மட்டுமே ஸமுத்திரத்தை அடைய முடியும். அவ்வாறில்லாவிடில் அந்தச் சொட்டுத் தண்ணீரால் கடலை அடைய இயலாது" என்று விளக்கம் தந்தார் TKS. பணிவு, மௌனம், பக்தர்கள், ஞானிகள் இவர்களின் பெருமை இவற்றை எல்லாம் இந்த ஆசிரியர் எனக்குக் கற்பித்தார். சாதுக்கள் ஸந்நியாஸிகள் முதலியோரின் பெருமையை உணராமல் பணிவு ஏற்படாது. ஏனென்றால், அந்நிலையில், ஒருவர் மனம் முற்றிலுமாக உலகாயதமான மனதின் ஆதிக்கத்தில் இருக்கும். அருணாசலமே ரமணர் என்றும், ரமணரே அருணாசலமென்றும், ஆத்மா என்றும் எனக்கு முதன் முதலில் தெளிவு படுத்தியது அவரே.

1960-ஆம் ஆண்டில், நான் ஆச்ரமவாசியாக இருந்த ஆரம்ப நாட்களில், ஆத்ம விசாரம் குறித்துப் பகவான் எழுதிய புத்தகங்களைப் படித்ததாலும், அவரது நேர் சீடர்களுடன் நெருங்கிப் பழகியதாலும் பகவானது 'ஆத்மவிசாரம்' என்னும் நேர் வழியின் தனித்தன்மையை உணர்ந்து கொண்டிருந்தேன். இளம் வயதுக்கே உரிய ஆர்வத்தினாலும், ஊக்கத்தினாலும், நேர் வழிகள் அல்லாத கர்மம், பக்தி, யோகம் ஆகிய மற்ற வழிகளின் சக்தி குறைவானது என்றே எண்ணினேன். இறுதியில், அவை ஆத்மவிசாரத்தில் முடிகின்றன என்று

கூறியபோதும் அவற்றை பல சமயங்களில் பகவான் புகழ்ந்து பேசியிருக்கிறார் என்பதை நான் சிறிதும் சிந்திக்கவில்லை.

எனது இந்தக் கருத்தை, என் மீது அக்கறைக் கொண்ட எனது ஆசிரியர் T.K.சுந்தரேச ஐயர் கவனிக்கத் தவறவில்லை. ஒருநாள் இரவு, ஆச்ரம நூலகத்திலிருந்து சுமார் 400 பக்கங்கள் கொண்ட ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் வாழ்க்கை வரலாறு (by Eastern and Western Disciples) என்ற புத்தகத்தை எடுத்து என்னிடம் கொடுத்துப் படிக்குமாறு வற்புறுத்தினார். ஐம்பது பக்கங்கள் படிப்பதற்குள், அந்த தக்ஷிணேச்வரத்து மஹானுக்கு முழுமையாக அடிபணிந்தேன். எனது ஆன்மீக வாழ்க்கைக்குப் புதுப் பொலிவு ஏற்பட்டது.



அப்பொழுது முதல் ஸ்ரீ பகவானுடைய வசனாம்ருதமும், ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அமுத மொழிகளும் (The Gospel of Sri Ramakrishna) எனது ஆன்மீக வாழ்க்கைக்கு சிறந்த வழிகாட்டிகளாயின. என் அக வாழ்க்கை பயணத்தில், ஏறத்தாழ 30 மஹான்களைச் சந்திக்கும் பேறு பெற்றேன்.

அவர்கள் என் அகக் கதவுகளை ஒன்றன் பின் ஒன்றாகத் திறந்து வைத்தனர்.

பகவான் ஒருமுறை, “நான் உபதேசிப்பது, பக்தியோடு கூடிய விசாரம் என்றும், எண்ணங்கள் அற்ற நிலையே பக்தியும் முக்தியும் ஆகும்” என்றும் கூறிய அந்த உயர்ந்த ஞானத்தின் முக்கியத்துவத்தை நான் உணர்ந்தேன். ஞான மார்க்கம் என்பதே விசாரம். பராபக்தியிலிருந்து அது வேறுபட்டதன்று; வார்த்தைகளில் மட்டுமே வித்தியாசம் உள்ளது; அவ்வளவே.

1908இல் பகவான் விரூபாக்ஷ குகையில் இருந்தபோது, TKS அவரிடம் வந்தார். அப்போது அவருக்கு பன்னிரண்டு வயதுதான். அருணாசலேச்வரரே மனித உருவில் விரூபாக்ஷ குகையில் இருப்பதாக அவரது உறவினர் ஒருவர் கூறக் கேட்டார். அந்த நாட்களில் பகவான் அநேகமாக மௌனமாகவே இருந்தார். எப்போதாவது ஓரிரு வார்த்தைகளைக் கூறுவார். TKS வந்தபோது, பகவான் மூடியிருந்த கண்களைத் திறந்து, அருட்பார்வையை அவர் மீது செலுத்தி ஆசீர்வதித்தார். “நான் பார்த்தது மனித உருவமன்று” எனப் பிற்காலத்தில் அவர் என்னிடம் கூறியுள்ளார். “உயிரோடுள்ள மெருகிட்ட தங்கச் சிலையைக் கண்டேன். பகவான் என்னை நோக்கினார். அங்கு, தமிழ்ப்பாடல்களைப் பாடியவாறு, அவரைச் சுற்றிச் சுமார் பத்து பேர் இருந்தார்கள். அப்போது அவர் என்னைக் கருணையோடு நோக்கி, ‘எனக்காக நீ ஒரு பாட்டுப் பாட மாட்டாயா?’ என்று கேட்கவும், எல்லோருக்கும் அது மிகுந்த வியப்பை தந்தது. ஏனெனில், அப்போது அவர் அநேகமாக மௌனத்தில் இருந்ததோடு, யாரிடமும் எதையும் கேட்ப-தில்லை.” மெய்சிலிர்த்துப் போன TKS, 63 நாயன்மார்களில் ஒருவரான சுந்தரமூர்த்தி நாயனாரது பாடல் ஒன்றைப் பாடினார். பகவான் ஏற்கனவே சுந்தரரைப்

பற்றிப் பெரிய புராணத்தில் படித்திருந்தார். அப்பாடலின் கருத்து:

மற்று பற்றுஎனக் கின்றி நின்திருப்பாத மேமனம் பாவித்தேன்
பெற்றலும் பிறந்தேன் இனிப்பிற வாததன்மைவந்து எய்தினேன்
கற்றவர் தொழுது ஏத்தும் சீர்க்கறை யூரில் பாண்டிக் கொடுமுடி
நற்றவா உனை நான்மறக்கினும் சொல்லும்நா நமச்சிவாயவே

“பிரபோ! உன் பாதாரவிந்தங்களைத் தவிர எனக்கு வேறு துணையில்லை. அவற்றைப் பிடித்துக்கொண்டு உனதருளை நான் பெற்றுவிடுவேன். பண்டைக்கால ரிஷிகள் உன் புகழைப் பாடியுள்ளனர். என் மனம் வழிதவறிச் சென்றாலும், ‘உனது புனித நாமத்தை என் நாவு இடைவிடாது ஓதவேண்டும்’ என்ற வரத்தை எனக்களிப்பாய்”



ஆழ்ந்த மௌனத்தில் T.K.S

பாடலைக் கேட்டு பகவான் மிக்க மகிழ்ச்சி அடைந்து, “ஆம். ஆம். செய்ய வேண்டியது அதுதான்” என்று கூறினார். பன்னிரண்டு வயதுப் பையனுக்கு அது முதல் உபதேசமாகி-யது. ரிஷிகளும் ஞானியரும் இயற்றிய, நூற்றுக்கணக்கான

தமிழ் பாடல்கள் அடங்கிய மூன்று, நான்கு புத்தகங்களை, அவர் வாழ்க்கை முழுவதும், எப்போதும் கையில் வைத்திருப்பார். முதல் உபதேசம் அவருக்குக் கலங்கரை விளக்கமாக அமைந்தது.

இந்தச் சிறுவன், தினந்தோறும் விரூபாக்ஷ குகைக்குச் சென்று, பகவானுடன் நேரத்தைக் கழிப்பான். காலப்போக்கில் அவன் ஒரு ஆசிரியர் ஆனான். அவனுக்குத் தனது ஆன்மீக வளர்ச்சி குறித்த சந்தேகங்கள் இருந்தன. ஒருநாள், “நான் எதற்காக அந்த ஸந்நியாஸியிடம் சென்று, அவரோடு இருக்கவேண்டும்? நான் முன்னேறவே இல்லை. கண்ணுக்குப் புலப்படக் கூடிய எந்த மாற்றமும் என்னிடம் ஏற்படவில்லை” என்று தோன்றியதால் மூன்று மாதங்களுக்கு அவன் பகவானிடம் செல்லவில்லை. ஒருநாள் இரவு கண்விழித்தபோது தனது தலையணை கண்ணீரால் நனைந்திருப்பதைக் கண்டான். தான், குருவைப் பார்க்காததால் ஏங்குவதை உணர்ந்து கொண்டான். அதிகாலையில் மலைக்கு ஓடிச்சென்றான். அச்சமயம் பகவான் ஸ்கந்தாச்ரமத்தில் இருந்தார். ஆச்ரமத்திற்கு வெளியே வந்து TKS-க்காக காத்துக் கொண்டிருந்தார். தூரத்தில் பகவானைப் பார்த்த TKS-ஆல் உணர்ச்சிகளை அடக்க முடியவில்லை. அழுதுகொண்டே ஓடிப்போய், பகவானின் பாதங்களில் விழுந்து, அவற்றைத் தன் கண்ணீரால் நனைத்து, “பகவானே! தயவுசெய்து என்னை மன்னித்துவிடுங்கள்” என்று கூறினான். அவர் அவனை எழுப்பி நிறுத்தினார். பகவான் நாட்களை எண்ணிக் கொண்டே இருந்ததால், “இன்று நூறாவது நாள். நீ வந்து நூறு நாட்கள் ஆகிவிட்டன. உனக்கு என்னவாயிற்று?” எனக் கேட்டவுடன், “நான் வராமல் இருந்ததற்கு வருந்துகிறேன். முட்டாள்தனமான காரியத்தைச் செய்துவிட்டேன். ஆனால், பகவானே! என்னுள் எந்த முன்னேற்றத்தையும் நான் காணவில்லை. இங்கு வந்து உங்களுடன் உட்காருவதால் எந்தப் பிரயோஜனமும்

இருப்பதாக உணரவில்லை'' என TKS பதில் கூறினார். அதற்கு பகவான், ''சரி அது போகட்டும். நீ எந்தப் பிரயோஜனத்தையும் பார்க்கவில்லை. ஆனால் எதையோ இழந்துவிட்டதாக உணரவில்லையா? என்று கேட்டார். இந்த கட்டத்தைப் பின்னர் நினைவு கூர்ந்த TKS, ''நாம் பகவானிடமிருந்து எந்தப் பிரயோஜனத்தையும் எதிர்பார்த்துச் செல்வதில்லை. அவர் இல்லாமல் நமக்கு வாழ்க்கையே இல்லை. இதயத்தில் இந்த ஆனந்தம் ஏற்படுவதற்கான வாய்ப்பை நழுவ விடக்கூடாது. இல்லையெனில் அதைத் தவற விட்டுவிடுவோம்'' என்று உரைத்தார்.

குறைவான அவரது சம்பளத்தில், பகவானுக்குக் காணிக்கையாகச் சிறிதளவு கற்கண்டோ அல்லது பொரியோ-தான் அவரால் எடுத்துச் செல்ல முடிந்தது. ஒருநாள், அதற்கும் கூட முடியாத நிலை. வெறும் கையோடு பகவானைக் கண்டு வணங்கிவிட்டு, ''பகவானே! எனக்கு மிகவும் வருத்தமாக உள்ளது. கையில் பணமில்லாததால், உங்களுக்குக் காணிக்கை எதுவும் எடுத்துவர இயலவில்லை'' என்றார் TKS. ''ஏன் அப்படிச் சொல்கிறாய்? முக்கியமானதை நீ எடுத்து வந்திருக்கிறாய். மற்றவை அனைத்தும் முக்கியமானவை அன்று'' என்று பகவான் கூறினார். ஆனால் TKS-க்குப் பொருள் விளங்கவில்லை. ''உன்னை நீ எடுத்து வந்துள்ளாயே!'' என்று பகவான் தெளிவு செய்தார். இங்கு நாம் முக்கியமாகப் புரிந்து கொள்ள வேண்டியது ஆன்மீகப் பயணத்தில் 'தன்னை' ஒரு போதும் தவிர்த்து விடுதல் கூடாது. குருவையும் அவரது உபதேசங்களையும் புகழ்வது எளிது. ஆனால், அவ்வாறு செய்யும் போது, 'தன்னை' விலக்கிவிடுவது கூடாது. நீங்களும் மிகவும் முக்கியமானவர்தான்.

நாட்கள் செல்லச் செல்ல TKS-க்கு சந்தேகங்கள் நிறைய இருந்தன. ஒருமுறை, ''எந்த ஒன்றை அறிந்தால் எல்லா சந்தேகங்களும் நீங்கும்?'' என்று பகவானைக் கேட்டார்.

“சந்தேகிப்பவன் யார் என்று தெரிந்துகொள். சந்தேகப்படுபவனைப் பிடித்துவிட்டால், பிறகு சந்தேகங்கள் எழ மாட்டா. எல்லோருமே ஞானிகள் தான் என்றும் எல்லோருமே முக்தியடைந்தவர்கள் என்பதையும் சந்தேகத்துக்கு இடமின்றி அறிந்துகொள். இந்த உண்மையை ஒரு சிலரே உணர்ந்துள்ளனர். அதனால் சந்தேகங்கள் எழுகின்றன. அவற்றை வேரோடு களைய வேண்டும். சந்தேகப்படுபவனை இல்லாமல் செய்ய வேண்டுமென்பதுதான் இதன் பொருள். அவன் இல்லாமல் போய்விட்டால், சந்தேகங்களும் எழாது. சந்தேகிப்பவன் என்றால் அது மனதைக் குறிக்கும்” என்ற பகவானின் சொற்களைக் கேட்ட TKS, “இதைச் சாதிக்கும் வழி என்ன?” என்று கேட்டார். “நான் யார்? என்னும் விசாரத்தைப் பழகு. விசாரத்தால் மட்டுமே சந்தேகிக்கும் மனதை இல்லாமல் ஒழிக்க முடியும். அனைத்திற்கும் அப்பாற்பட்ட ஆத்மாவில் நிலைநிற்க முடியும்” என்று பகவான் பதிலளித்தார்.

மற்றொரு சமயத்தில் TKS-க்கு வேறொரு சந்தேகம் எழுந்தது. அவர் ஒரு பண்டிதர். மரபு வழியிலிருந்து தவறாதவர். பல சாஸ்திரங்களையும் படித்தவர். அதனால், ஆறு சக்கரங்கள், அமானுஷ்யமான மையங்கள், குண்டலினி இவை, அவரை மிகவும் வசீகரித்தன. பகவானிடம் இவை பற்றிக் கேட்டார். பகவானும் பதில் அளிக்கும் விதமாக, “ஆத்மாவை மட்டுமே உணர்ந்து கொள்ள வேண்டும். குண்டலினி சக்தி, தெய்வங்களின் தரிசனம், சித்திகள், அவற்றின் ஆச்சரியமான வெளிப்பாடுகள் இவையனைத்தும் ஆத்மாவிலேயே உள்ளன. இவைகளைப் பற்றிப் பேசுபவர்களும், இவற்றைப் பழகுபவர்களும் ஆத்மாவை உணர்ந்ததில்லை. ஆத்மா, இதயத்தில் உள்ளது. இதயமேதான் அது. மற்ற எல்லாவிதமான வெளிப்பாடுகளும் புத்தியைச் சார்ந்தவை. இதயத்தில் இருந்துதான் புத்தி, அதன்

சக்தியைப் பெறுகிறது. இதயத்தில் தங்கியிருத்தலே ஆத்மாவை உணர்வதாகும். அதைச் செய்யாமல், புத்தியை மையமாகக் கொண்ட ஒழுக்கப் பயிற்சிகளும், மற்ற வழிகளும் காலத்தை வீண் செய்வதாகவே ஆகும். இல்லாத அஞ்ஞானத்தை விலக்கத் தேவையானவை என்று கூறி, பற்பல முயற்சிகளையும், ஒழுக்கங்களையும் விடாப்பிடியாகப் பிடித்துக் கொள்வது முட்டாள்தனமான காரியம் அல்லவா?'' என்று கூறி விளக்கம் அளித்தார்.

1920இல், மாமரத்துக் குகையில் வசித்துக் கொண்டிருந்த காவ்யகண்ட முனியை, பகவான் TKS-க்கு அறிமுகம் செய்து வைத்தார். TKS தினமும் பகவானைக் காண வருவார். "நாயனாவிடம் செல். அவரிடமிருந்து ரிக் வேதத்தையும், மற்ற சாஸ்திரங்களையும் கற்றுக்கொள்'' என்று கூறி அவரை நாயனாவிடம், பகவான் அனுப்பி வைப்பார். காவ்யகண்டரைக் கண்ட TKS-ஐ, அவருடைய புகழும், பாரம்பரிய ஞானத்தில் அவருக்கிருந்த தேர்ச்சியும், அதில் அவர் படைத்த சாதனைகளின் தாக்கமும் ஸ்தம்பிக்கச் செய்தன. அவரது சீடனாகி, சாஸ்திரங்களைக் கற்கத் துவங்கினார். நாயனாவும், TKS-ம் தினமும் பகவானிடம் செல்வார்கள். பகவான் அவர்களுக்கு வழிகாட்டுவார். வாலிபராக இருந்த TKS, நாயனாவின் பெருமைகளாலும், நூலறிவாலும் மிகவும் கவரப்பட்டு, அவரிடமே தன் பாராட்டுக்களைத் தெரிவித்தபோது, அவர், "சுந்தரேசா! பகவானுடைய அருள் இல்லையானால் ஒருவரால் சாஸ்திர நுணுக்கங்களையெல்லாம் அறிந்து கொள்ளவே இயலாது. அவரிடமிருந்து ஒரு வார்த்தை வந்தால் போதும். எல்லாமே தெளிவாகிவிடும்'' என்று பணிவோடு பதிலிறுத்தார். பகவானிடம் நாயனாவுக்கு இருந்த பெருமதிப்பை TKS அப்போது உணர்ந்து கொண்டார்.

காவ்யகண்டரைப் பற்றி நாம் பார்த்தபோது மூன்று முக்கியமான நிகழ்வுகளைப் பார்த்தோம். குண்டலினியின் எழுச்சியால் ஏற்பட்ட அசாதாரண அனுபவங்கள், உமா ஸஹஸ்ரம் நிறைவு செய்யப்பட்ட விதம், பகவான் நாயனாவிடம், தன்னைச் சுற்றிய சூரிய சந்திரன் முதலானவை பற்றிக் கூறிய நிகழ்ச்சி - இம்மூன்று நிகழ்வுகளின் போதும், உடன் இருக்கும் பொன்னான வாய்ப்பு TKS-க்குக் கிடைத்துள்ளது. நாயனாவுடன் நெருக்கமாக இருந்ததால் தனக்குக் கிடைத்த அபூர்வமான பரிசுகள் அவை என்று அவர் குறிப்பிட்டுள்ளார்.

காவ்யகண்டருக்குப் பண்டிதர்களாக இருந்த 200க்கும் மேற்பட்ட சீடர்கள் இருந்தனர். அவர்களிடமெல்லாம், "இன்று முதல் நான் குருவன்று. ரமண மகரிஷியே நம் குரு" என அவர் தெரிவித்திருந்தார். இதற்குப் பின் ரமண மகரிஷி தற்போதைய ஆச்ரமத்திற்கு வந்துவிட்டார். உலகில் நல்ல செல்வாக்குடன் இருந்த அந்தச் சீடர்கள், ரமணாச்ரமத்தின் எதிர்காலம் சிறப்பாக இருக்கும் என்பதை அறிந்திருந்தனர். நாயனா ஆச்ரம நிர்வாகத்தை ஏற்றுக்கொண்டால், அது மேலும் சிறப்பாக அமையும் என்று நம்பினர். மற்றொரு குழுவினர், பகவானின் சகோதரர் நிரஞ்ஜனானந்த ஸ்வாமியே நிர்வாகத்தை ஏற்க வேண்டுமென விரும்பினர். ஒருநாள், நாயனாவின் பக்தர்கள், ஹாலில் இருந்த பகவானிடம் இவ்விஷயமாக, 'நாயனா ஆச்ரம மேலாளராக ஆக வேண்டும்' என்ற தங்கள் விருப்பத்தை தெரிவித்தனர். நீண்ட நேர மௌனத்திற்குப் பின், பக்தர்களிடம் எதுவும் கூறாமல், நாயனாவைப் பார்த்து, "நாம் இம்மாதிரியான விஷயங்களில் ஏன் மனதை விட வேண்டும்? அவனே நிர்வாகத்தை கட்டிக் கொண்டு அழட்டும்" என்று பகவான் கூறியதும், நாயனா எழுந்து பகவானை வணங்கிய பின், "இப்போது முதல் சின்ன ஸ்வாமிதான் ஆச்ரம மேலாளர்" என்று அறிவித்தார்.

அவர் விடைபெற்றுக் கொண்டபோது, மற்ற பக்தர்களும் வெளியில் வந்தனர். நாயனா, TKS-ஐப் பார்த்து, “இன்று முதல் நாமெல்லோரும், எந்த நிபந்தனையும் இன்றி, சின்ன ஸ்வாமிக்கு ஆச்ரம நிர்வாகத்தில் உதவியாக இருக்கவேண்டும்” என்றார். TKS இதை மனப்பூர்வமாக ஏற்றுக்கொண்டார். இதற்கு முன்னரே நாயனா இந்திய சுதந்திரத்திற்காக வேலை செய்வதற்குப் பத்தாயிரம் அங்கத்தினர்களைக் கொண்ட பெரியதொரு ஸ்தாபனத்தை நிறுவி இருந்தார். இந்தியா முழுவதும் மந்திர ஜபம் செய்வதாக அவர்கள் தீர்மானித்திருந்தனர். நாயனா தலைவராகவும் TKS பொதுச் செயலாளராகவும் இருந்தனர். நாயனா ‘சின்ன ஸ்வாமிக்கு முழுமையாகப் பக்க பலமாக இருக்க வேண்டும்’ என கூறியதால், ஆச்ரம அலுவலகத்தில் TKS வேலை செய்ய முற்பட்டார். ஆழ்ந்த ஆன்மீக நாட்டமுடையவரும், வேத விற்பன்னரும், பண்டிதரும் ஆன TKS-க்கு ஸம்ஸ்கிருதம், தமிழ், ஆங்கிலம் ஆகிய மூன்று மொழிகளும் நன்கு தெரியும். அதனால் ஆச்ரம கடிதப் போக்குவரத்து விஷயங்களில் அவரைப் பொறுப்பாளராக நியமித்திருந்தனர். பகவானுடன் நெருங்கிய தொடர்பு கொள்வதற்கு, அவர் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டார். ஆன்மீக விஷயமாக வரும் ஒவ்வொரு கடிதத்தையும் பகவானிடம் எடுத்துச் சென்று, அவரது அபிப்பிராயங்களைக் கேட்டறிவார். தேவையானவற்றிற்கு பகவான் விளக்கம் தந்தபின், TKS கடிதத்தை எழுதி, தபாலில் அனுப்பும் முன், பகவானுடைய ஒப்புதல் பெற பகவானிடம் காட்டுவார்.

பகவான், ஏற்கனவே பல பாடல்களையும், ‘நான் யார்’, ஆத்ம விசாரம் போன்ற உபதேசங்களையும் எழுதியிருந்தார். வித்துவான்களாக இருந்த சில பக்தர்கள் எல்லாவற்றையும் ஒன்றாகத் தொகுத்து, ‘ரமண மகரிஷியின் நூல்திரட்டு’ என

வெளியிட விரும்பினர். பகவான் தமிழில் எழுதியிருந்தவற்றை எல்லாம் சேகரித்து அச்சகத்திற்கு அனுப்பினர். அதற்கு முன்னுரை எழுதப்பட வேண்டியிருந்தது. பகவான் சுதந்திரமாக எழுதியுள்ள நூல்களுக்கு, முன்னுரை எழுதும் தகுதி தங்களுக்குக் கிடையாது எனக் கூறி, தமிழ் பண்டிதர்களான முருகனார், நடனானந்தர் இருவருமே பின்வாங்கி விட்டனர். ஆச்ரமத்திலும் தயக்கமிருந்ததால், முன்னுரை எழுதப்படாமலே இருந்தது. ஒருநாள், TKS மிகவும் காலதாமதமாக நகருக்குள் இருந்து வந்தார். அவர் ஹாலுக்குள் நுழைந்ததும், “முன்னுரையை நீயே ஏன் எழுதக்கூடாது?” என்று பகவான் அவரிடம் கேட்டார். அவருக்கு அதிர்ச்சியாக இருந்தபோதும், பகவானிடமிருந்து வரும் சொற்கள் அனைத்துமே ஸத்தியம் என்பதையும் அது ஒரு கட்டளை என்பதையும் அவர் உணர்ந்திருந்தார். “எப்படி என்னால் எழுத முடியும்? ஆனால், உங்கள் அருள் இருக்குமானால் முடியாததென்று ஏதாவது இருக்க முடியுமா?” என்று கூறிய TKSயிடம், பகவான், “நீ எழுது. அது சரியாக வரும்” என்றுரைத்தார். அவர் கீழே அமர்ந்து, பகவானை நோக்கிவிட்டு எழுத ஆரம்பித்தபோது, அவரால் சரளமாக எழுத முடிந்தது. எழுதி முடித்தபின் அதை பகவானது பாதங்களில் சமர்ப்பித்தார். பகவான் அதைப் படித்தார். பகவான் படித்துவிட்டதால் TKS கிளம்பினார். பகவான் அவரை மீண்டும் அழைத்து, “இங்கே வா. எதற்காக, ‘நான் நம்புகிறேன்’ என்று எழுதியிருக்கிறாய்? ‘அது திண்ணம்’ என்று ஏன் எழுதக்கூடாது?” என்று கூறியவாறு, கடைசி வரியில் அந்த ஒரே ஒரு திருத்தத்தைச் செய்தார். ‘நூல் திரட்டின் உருவில், இதயபூர்வமாக அதை ஏற்கும் ஆன்மீக நாட்டமுள்ளவர்கள் அனைவருக்கும் பகவானது அருள் முக்தியையும், ஆனந்தத்தையும் அளிக்குமென்பது திண்ணம்’ என்று கடைசி வரி மாற்றப்பட்டது. (இன்றளவும் தமிழில் அந்தத் திரட்டோ அல்லது வேறு மொழியாக்கம்

செய்யப்பட்டதோ இறை நாட்டம் கொண்டவர் பலரையும் வழிநடத்துகிறது. சிலருக்கு அது உயிர் மூச்சாகவே உள்ளது. நூல் திரட்டைப் போன்ற சிறந்த ஒரு புத்தகம் கிடையாது என்று எனது நண்பரும், ஆன்மீக வழிகாட்டியுமான ஆர்தர் ஆஸ்போர்ன் அடித்துக் கூறுவார்.)



கையில் 'நூல் திரட்டுடன்' – T.K.S

தமிழில் மட்டுமே இருந்த 'மூல நூல் திரட்டு' பின்னர் 'ஆர்தர் ஆஸ்போர்னி'ன் விருப்பத்திற்கிணங்க, உலகெங்கும் கிடைக்கும் வகையில், ஆங்கில மொழிபெயர்ப்புச் செய்யப்பட்டது. அதை வெளியிடக்கூடிய பதிப்பாளர் ஒருவரையும்கூட அவர் தேர்ந்தெடுத்திருந்தார். சில பாடல்கள் மட்டுமே மொழி பெயர்க்கப்பட்டிருந்தன. வேலை அதிகமாக இருந்தது. ஆனால் ஆஸ்போர்னுக்கு உதவி செய்ய யாரும் முன்வரவில்லை. எனது ஆசிரியர் TKSதான் அவரோடு அமர்ந்து, உதவிகளைச் செய்தார்.

ஆஸ்போர்ன் வீட்டிற்குச் சென்று விட்டால், TKS என்னிடம் எழுதும்படி கூறுவார். நான் அதை டைப் செய்து ஆஸ்போர்னிடம் சேர்ப்பேன். இவ்வாறு நூல் திரட்டின் ஆங்கில

மொழியாக்கத்தை அநேகமாக நானே டைப் செய்தேன் என்பதைச் சிறிதும் ஆணவமின்றி, ஆனால் மிகுந்த பரவசத்தோடு உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன்.

எனது ஆசிரியர் கவிஞரும் கூட. தமிழ்ப் பாடல்கள் எழுதுவதில் மிகுந்த திறமையுள்ளவர். ஸத்குரு ரமணரைப் போற்றி ஆறு பாக்களை அவர் எழுதியிருந்தார். அதைப் பகவானின் பாதங்களில் வைத்தபோது, ஐந்தாவது பாடலில், முன்மாதிரியே, அவர் ஒரே ஒரு திருத்தம் செய்தார். 'அனைவரையும் ஆசீர்வதித்துப் பகவானது அருள் பெருகுகிறது' என்ற பதத்தை 'அனைவரையும் ஆசீர்வதிக்கும் பொருட்டு அவரது அருள் செலுத்தப்படுகிறது' என்று மாற்றினார். அருள் என்ற தெய்வீக சக்தி, அனைவருக்குமே எளிதில் கிடைக்கக் கூடிய ஒன்று என TKS எனக்கு விளக்கிக் கூறினார். குரு, சீடன் என்ற உறவில், அருட்சக்தி எவ்விதத்தில் சீடனிடம் செலுத்தப்பட வேண்டுமோ அதைக் குருவே செய்கிறார். பகவான் 'பாயும்' என்ற சொல்லைப் 'பாய்ச்சும்' என்பதாகத் திருத்தினார். எத்தனை நுணுக்கமான, ஆனால் சிறப்பான மாற்றம்!

1963 இல், பகவானுடைய நூல் திரட்டைத் தமிழ் மூலநூலிலிருந்து ஜெர்மனில் மொழி பெயர்க்கும் எண்ணத்தோடு, தீவிரமாக ஆன்மீகத்தில் ஈடுபட்டிருந்த, ஜெர்மனியைச் சேர்ந்த 'லூஸி கார்நெல்ஸன்' என்ற பெண்மணி, தனது நாட்டில் இருந்தவாறே தமிழ் கற்று வந்தாள். மொழி பெயர்த்த பின்னர் அதைச் சரிபார்ப்பதற்காக ஆச்ரமத்திற்கு வந்தாள். யாரும அவளுக்கு உதவாத நிலையில் TKSதான் வேண்டியதைச் செய்து கொடுத்தார்.

"அவள் ஆன்மீகத்தில் சிறந்த நிலையில் இருக்கிறாள். அவளை நமஸ்காரம் செய்" என்று என்னிடம் அவர் கூறினார். (லூஸியாக இருந்த அவர் எனக்கு 'லூஸி மா' ஆகிவிட்டார்)

ஜெர்மனில் எழுதப்பட்ட அந்த நூல் திரட்டு, TKS-ஆல் சரிபார்க்கப்பட்டு முழுமை பெற்றது. கற்றறிந்த பண்டிதராக இருந்தபோதும் அவர் எளிமையே உருவானவர். தன்னை வெளிக்காட்டிக் கொள்ளாதவராதலால், அவரைப் பலருக்கும் தெரியாது.



ஒருநாள், நான் TKS-ஆல் கூறப்பட்ட நீண்டதொரு பகுதியை, அலுவலகத்தில் டைப் செய்து கொண்டிருந்தபோது, பகவானிடம் பக்தி பூண்ட, மேலை நாட்டவரான ‘டங்கன் க்ரீன்லீஸ்’ என்பவர் வந்தார். “என்ன டைப் செய்கிறீர்கள்? நான் அதைப் படிக்கலாமா?” என்று கேட்டபோது, “தாராளமாகப் படிக்கலாம்” என்று கூறிப் பகவானின் மிக அழகான உபதேசமாக இருந்த அதை அவரிடம் தந்தேன். “இதை யார் எழுதினார்கள்?” என அவர் வினவ, “எனது ஆசிரியர் TKS” என்று பதிலளித்தேன். “அவரால் எழுதப்பட்ட வேறு ஏதாவது உள்ளதா?” என்று அவர் கேட்டார். என்னிடம் ஏழு அல்லது எட்டு கோப்புக்கள் உள்ளதாகத் தெரிவித்தேன். “தயவு செய்து அவற்றை என்னிடம் கொடுக்கிறீர்களா? நான்

எடுத்துச்சென்று அவற்றைப் பதிப்பிற்குத் தயார் செய்து தருகிறேன்” என்று கூறினார். டங்கன் க்ரீன்லீஸ் சரிபார்த்தது 'At the feet of Bhagavan' (பகவான் காலடியில்) என்ற புத்தகமாகும். கையெழுத்துப் பிரதியை எடுத்துவந்தபோது, “இப்புத்தகத்துக்கு என்ன பெயர் வைக்கலாம்?” என்று அவர் கேட்டார். 'At the feet of Bhagavan' என வைக்கலாம் என்று என் அபிப்பிராயத்தைக் கூறினேன். TKS மிகவும் மகிழ்ச்சியடைந்தார். “இதை எடுத்துப் போய் பகவானின் காலடியில் வை” என்று அவர் கூறவும் நான் அதைப் பகவானது ஸமாதிக்கு எடுத்துச் சென்றேன்.

நான் TKS உடன் பல மணி நேரத்தைக் கழிப்பேன். அவர், பெரும்பாலும் மௌனமாகவே இருப்பார். மலையைச் சுற்றியோ அல்லது மலைமேல் ஸ்கந்தாச்ரமத்திற்கோ என்னை அழைத்துச் செல்வார். பேசினார் என்றால், சில சமயங்களில் மிகவும் சுவையான நிகழ்ச்சிகள் பற்றிக் கூறுவார். ஒருமுறை, “கணேசா! நான் பகவானுடன் இருந்தபோது, ஒருநாள், பகவான் என்னிடம், அருணாசலத்திற்கு, திருவண்ணாமலை, இந்தியா மற்றும் வேறு பல இடங்களிலிருந்தும், சித்த புருஷர்கள் கிரிவலம் செய்ய வருவார்கள். சிலசமயம் அவர்கள் ஒளிவடிவில் இருப்பார்கள் எனக் கூறியுள்ளார்.” என்றார். அந்த ஒளி வடிவங்களைத் தான் கண்டிருப்பதாக, பகவான் TKS-இடமும் வேறு பலரிடமும் கூறியுள்ளார். ஒருவருக்கு உண்மையான பக்தி இருந்தால் இந்த ஒளியைப் பார்க்க முடியுமென்றும் அவர் கூறினார். பழைய பக்தர்களில் பலர், அந்த ஒளி, மலையைச் சுற்றி நகர்வதைப் பார்த்திருப்பதாகவும் TKS கூறினார். “கணேசா! அதைப் பார்க்க ஏக்கத்துடன இரு; எதிர்பார்க்காதே; காலக்கெடு வைத்துக்கொள்ளாதே. பார்க்கவேண்டும் என்று கூடச் சொல்லாதே; கர்வம் கொள்ளாதே; முழுமையான,

ப்ரார்த்தனையுடன் கூடிய எளிமையோடு இரு. அந்தக் காட்சி உனக்கு அளிக்கப்படும்'' என அவர் கூறினார்.

அந்த ஒளியை, ஒரு முறையன்று; மூன்று முறை நான் கண்டிருக்கிறேன் என்னும் தகவலை உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன். முதல் முறை நான் தனியாக இருந்தபோதும், இரண்டாவது முறை ஒரு ஜப்பானியக் குழுவுடன் இருந்தபோதும் பார்த்தேன். நான், அந்த ஒளியைக் காணமுடியும் என்ற விவரத்தை அவர்களுக்கு கூறிக்கொண்டிருந்த போது, ''எங்களாலும் பார்க்க முடியுமா?'' என்று அவர்கள் கேட்டனர். அதே சமயத்தில், அந்த ஒளி கண்ணில் பட்டது. அவர்கள் அனைவருமே அதைக் கண்டு, கீழே விழுந்து வணங்கினர். மூன்றாவது முறையாக 2003ஆம் ஆண்டில் பார்த்தேன். ஒரு நாள், மாலை ஆறரை மணி அளவில் மதுரை பக்தர்கள் அறுபது பேர், நொச்சூர் வெங்கடராமன், மற்றும் சிலருடன் கிரிவலம் வந்து கொண்டிருந்தேன். பஞ்சமுக தரிசனம் செய்யுமிடத்தை நெருங்கியபோது, ஒரு பாறையில் அமர்வதென்று தீர்மானித்தோம். அங்கு அமர்ந்தபோது ஆச்ரமத்தில் உணவு வழங்கும் நேரம் நெருங்கிவிட்டதை உணர்ந்த மதுரை பக்தர்கள், எங்களிடம் விடைபெற்று, ஆச்ரமத்திற்குத் திரும்பிவிட்டனர். எனது நண்பர் T.R.ராமச்சந்திரன், அந்தப் பாறையில் நாங்கள் உட்காரும் போதெல்லாம் 'ஸத்யோ ஜாதம் ப்ரபத்யாமி ஸத்யோ ஜாதாய வை நமோ நமஹ' என்ற சிவோபாஸனா மந்திரத்தை ஜபித்த நினைவு எனக்கு ஏற்பட்டது. நொச்சூர் வெங்கடராமனிடம், அந்த மந்திரத்தை அவரால் ஜபிக்க முடியுமா? என்று நான் கேட்டவுடன் அவரும் ஜபித்தார். நாங்கள் அதைக் கேட்டபடி அமர்ந்திருந்தோம். ஜபம் முடிந்தபின் நாங்கள் நமஸ்கரித்து, எழுந்தபோது, நாங்கள் எல்லோரும் அந்த ஒளியைக் கண்டோம்.

ஒருநாள், சில வேத விற்பன்னர்கள் TKS-உடன், ஸாமவேதம் ஓதியவாறு கிரிவலம் செய்து கொண்டிருந்தனர். திடீரென்று சாலையின் நடுவே நான்கைந்து புலிகள் அமர்ந்திருப்பதைக் கண்டனர். செய்வதறியாது, வேதம் ஓதுவதை அவர்கள் நிறுத்திவிட்டனர். நீண்டநேரம் புலிகள் அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டுப் பின்னர் எழுந்து சென்று காட்டிற்குள் மறைந்துவிட்டன. பகவான், அப்போது ஸ்கந்தாச்ரமத்தில் இருந்தார். TKS அங்கு ஓடிச்சென்று, நடந்த விஷயங்களைப் பகவானிடம் உரைத்தார். “நீங்கள் ஏன் வேதம் ஓதுவதை நிறுத்தினீர்கள்? அவர்களெல்லாம் சித்த புருஷர்கள். நீங்கள் ஓதுவதைக் கேட்க ஆவலுடன் இருந்தனர். நீங்கள் தொடர்ந்து வேதங்களை ஓதியிருக்கவேண்டும்” என பகவான் கூறினார்.

TKS என்னிடம், “தெய்வீகமான அருணாசலத்தில் அறிந்துகொள்ள முடியாத பலவிதமானப் பகுதிகள் உள்ளன” என்று கூறினார். பகவானும் அந்த தெய்வீக அனுபவத்தைத் தன்னுடன் பகிர்ந்து கொண்டுள்ளதாகக் கூறினார். மலையின் உள்ளே தான் இருப்பதாக உள்ள காட்சிகளைப் பகவான் மூன்று முறை பார்த்திருக்கிறார். TKSக்கும் அந்த அனுபவம் ஏற்பட்டுள்ளது. எனக்கும் கூட அம்மாதிரியான அனுபவம் ஏற்பட்டதென்பதை உங்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். நம்பிக்கை வையுங்கள். மனித அறிவுக்கு எட்டாத விஷயமானாலும் ஏற்றுக் கொள்ளுங்கள். பக்தியோடும் எளிமையோடும் இறைவனைச் சரணடைந்து வாழுங்கள். உங்களைவிட, ஒருநாள் மூத்தவராக இருப்பினும், அவரை ஸாஷ்டாங்கமாக நமஸ்கரியுங்கள். அப்போது பணிவு தன்னால் வரும். ஆன்மீக சுதந்திரம் பெறுவீர்கள். ஒருவரை வணங்குவது அடிமைத்தனமாகாது. அது சுதந்திரம். ஆன்மீக சுதந்திரம். எனினும், இதயத்தில் அருணாசலத்தைக் கொள்வது

– ‘அகமே நினைப்பவர்’ என பகவான் அருளியபடி – மிகவும் முக்கியம்.

பகவான் மிகுந்த தயை உடையவர். ஒருமுறை TKS ஸந்நியாஸினி ஒருவரை ஸாஷ்டாங்கமாக வணங்கினார். அதைக் கண்ணுற்ற சின்ன ஸ்வாமி மிகுந்த கோபத்தோடு, “பகவான் இங்கு இருக்கும்போது மற்றவர்களை ஏன் வணங்குகிறீர்கள்?” எனக் கடுமையாக அவரை ஏசினார். அதனால் மிகுந்த மனத்தளர்வுற்ற TKS, உணவு உண்ண-வில்லை. அதிகாலையில் அவர் வந்தபோது பகவான் அடுக்களையில் இட்லி தயார் செய்து கொண்டிருந்தார். TKSஇன் முகம் வாட்டமுற்று இருப்பதைக் கண்ட அவர், “உள்ளே வா. உட்கார்ந்து இட்லி சாப்பிடு” என்று அழைத்தார். “பகவான்! வகுப்புக்கள் உள்ளதால் நான் பள்ளிக்கு அவசரமாகச் செல்லவேண்டும்” என்று TKS பதில் கூறவும் “உண்மை வெளியில் வந்துவிட்டது. இன்று ஞாயிற்றுக்கிழமை. நீ எப்படிப் பள்ளிக்கூடம் செல்லமுடியும்?” என்று பகவான் கிண்டலாகக் கூறி, இலையைப் போட்டு, “வா, உட்கார். இன்று விசேஷமான சாம்பார் வைத்துள்ளேன்” என்றார். பின் என்னருகிலேயே அமர்ந்து இலையில் இட்லிகளைப் போட்டுக் கொண்டே இருந்தார் பகவான். “நான் அதுவரை அத்தனை இட்லிகளைச் சாப்பிட்டதே இல்லை” என TKS பின்னர் கூறினார்.

ரமணாச்ரமத்திற்கு வந்த புதிதில், ஹாலின் ஒரு கோடியிலிருந்த கயிற்றில் தன் துண்டைப் பகவான் காய வைப்பார். அங்கு ஒரு குருவிக் கூடும், அதில் மூன்று நான்கு முட்டைகளும் இருந்தன. ஒருநாள், பகவான் துண்டை இழுத்தபோது ஒரு முட்டை கீழே விழுந்து ஒரு பக்கம் உடைந்துவிட்டது. பகவான் அதிர்ந்து போனார். “பார்! பார்! இன்று நான் என்ன காரியம் செய்துவிட்டேன் என்று பார்” என

அருகிலிருந்த தொண்டர் ஒருவரிடம் கூறினார். முட்டையை மெதுவாகக் கையில் எடுத்து, “பாவம்! இதன் தாய் மிகவும் வருந்துவாள். வரப்போகும் அவள் குஞ்சை நாசமாக்கிவிட்டேன் என்று என் மீது கோபம் கூடக் கொள்ளலாம். உடைந்த ஓட்டை மீண்டும் இடத்தில் வைத்துச் சரி செய்ய முடியுமா என்று பார். முயற்சி செய்து பார்ப்போம்” எனக் கூறி ஈரத்துணி ஒன்றில் முட்டையை வைத்துச் சுற்றி வைத்தார். “அருணாசலம்தான் இந்தப் பாவத்திலிருந்து என்னைக் காப்பாற்றவேண்டும்” என்றார். முட்டையை அதனிடத்தில் வைத்துவிட்டுச் சில மணி நேரங்களுக்கு ஒரு முறை, ஈரத்துணியை மாற்றிக் கொண்டே இருந்தார். ஏழு நாட்களுக்குப் பின் விரிசல் விட்ட இடம் சேர்ந்துகொண்டதைக் கண்ட பகவான், “என்ன அதிசயம் பார்! விரிசல் மூடிவிட்டது. தாய்க்கு மகிழ்ச்சியாக இருக்கும். அதைப் பொரிக்கச் செய்துவிடுவாள். ஓர் உயிரைக் கொன்ற பாவத்திலிருந்து அருணாசலம் என்னைக் காப்பாற்றிவிட்டது” என்றார். சில நாட்களுக்குப் பின் முட்டையிலிருந்து குஞ்சு வெளியில் வந்தது. அதைக்கண்ட பகவான் ஆனந்தம் பொங்க அதைக் கையில் எடுத்து, மற்றவர்கள் வியப்புறும் வகையில் உதட்டாலும் தன் மிருதுவான கைகளாலும் அன்போடு தடவிக்கொடுத்து, அவர்கள் ஒவ்வொருவரிடமும் பார்ப்பதற்குக் கொடுத்தார்.

ஒருமுறை, TKS, பிறரிடம் பகவான் அக்கறை காட்டுவதில் உள்ள விசேஷத் தன்மையை எனக்கு விவரித்தார். தீவிர ஆன்மீக விழைவினால், பகவானுடன் அருணாசலத்தில் தங்கி ஸேவை செய்ய நிச்சயித்த ஸாதகர்களின் மனைவிமார்களிடம் பகவான் காட்டிய அக்கறை அசாதாரணமானது. முருகனாரின் மனைவி, ஸப்- ரிஜிஸ்ட்ரார் நாராயணய்யரின் மனைவி, எனது தாயார் நாகலக்ஷ்மி, இவர்கள் வாழ்க்கையில் நடந்த பல நிகழ்ச்சிகளைக்

கூறும்போது, TKS தனது வாழ்க்கையிலிருந்தும் சில விஷயங்களை எடுத்துரைத்தார். TKSஇன் மனைவி ஒரு மகனை விட்டுவிட்டு இறந்து போனாள். இதனால் அவர் ஆன்மீகத்தில் ஆழமாக மூழ்கினார். ஆனால், குடும்பத்தில் பெரியவர்கள், அவரை மீண்டும் திருமணம் செய்து கொள்ள வற்புறுத்தினர். TKS வலிமையாக மறுப்புத் தெரிவித்தார். அவர்கள் தொடர்ந்து வற்புறுத்தியதைத் தாங்க முடியாமல் பகவானுடைய ஸந்நிதிக்குச் சென்றார். அப்போது பகவான் மலை மேல் இருந்தார். பகவான் TKSஐப் பார்த்து, "வாழ்க்கையை அதன் போக்கில் விட்டு விடு. எதிர்த்து நிற்காதே. கடைசியில் எல்லாம் சரியாகிவிடும். சூரியனுக்குக் கீழேயே இருக்கும் ஒருவரை இருட்டு அண்டமுடியுமா?" என்று அறிவுரையளித்தார். TKS மறுமணம் செய்து கொண்டார். இரண்டாவது மனைவியின் மூலம் இரு குழந்தைகள் பிறந்தன. TKSஇன் இரண்டாவது மனைவியிடம் அசாதாரணமான அன்பு காட்டினார் பகவான். அவரது ஸந்நிதியில் அந்தப் பெண்மணி இருந்தபோதெல்லாம் அவளிடம் விசேஷகவனம் செலுத்தினார். பகவானுடைய பல பண்டித பக்தர்களும், பணக்கார பக்தர்களும் தன்னை மதிக்க மாட்டார்கள் என்று TKS கூறியுள்ளார். "நான் ஏழை என்பதாலும் எனக்குப் பட்டப் படிப்புக்கள் இல்லாததாலும் அவர்கள் என்னை வெறுத்திருக்கலாம். நீ வெறும் பள்ளிக்கூட ஆசிரியர் தானே என்று நேரடியாகவே என்னை அவமதிப்பார்கள்" என்று அவர் கூறுவதைக் கேட்ட நான் உற்சாகமிழந்து மிகுந்த வருத்தத்தில் ஆழ்ந்தேன். TKS என் முதுகில் தட்டிக் கொடுத்து, "பகவான் என்னிடம் எல்லை மீறிய அன்பும், பிரியமும், கவனமும் செலுத்தினார். பகவான் காட்டிய அக்கறையை விட நிறைவானது ஏதாவது இருக்க முடியுமா?" என்று சமாதானம் செய்தார்.

1933இல், முப்பத்தியாறு வயதான பின்னரும் அவருக்கு நிறைவு ஏற்படவில்லை. “பகவான்! உங்களுடைய உண்மை உருவத்தை எனக்குக் காட்டுங்கள்” என அவரிடம் ப்ரார்த்தித்துக் கொண்டார். பகவான் TKS-ஐ அமரச் செய்து, தனது அருட் பார்வையை அவர் மீது செலுத்தினார். TKS-இன் இதயக்கதவு திறந்தது. அவர் கண்களை மூடிப் பரவசநிலை எய்தினார். “உனக்கு என்னவெல்லாம் பார்க்க வேண்டுமோ, அவற்றை இப்போது பார்த்துக் கொள்” என்றார் பகவான். TKS-இன் இஷ்ட தெய்வம் இராமனானதால், அவர் இராமனைக் காண விரும்புவதாகத் தெரிவித்தார். இராமன் சக்கரவர்த்தி-யாகத் தலையில் கிரீடம் அணிந்து, ஸீதையுடன் சிம்மா-சனத்தில் அமர்ந்திருந்ததையும், அவரது சகோதரர்கள் சுற்றிலும் சூழ்ந்து நிற்க, ஹனுமான் அவரது காலடியில் வீற்றிருப்பது போன்ற காட்சியையும், அவர் இரண்டு மணிநேரம் தரிசித்தார். அந்த பரவச நிலையிலிருந்து அவர் வெளியே வந்தபோது, “நீ என்ன பார்த்தாய்?” என்று பகவான் கேட்டார். தான் பார்த்த காட்சியை அவர் விவரித்துக் கூறினார். பகவான், “நீ போய் தக்ஷிணாமூர்த்தி அஷ்டோத்தரத்தை எடுத்து வா. ஐந்தாவது நாமத்தைப் படி. அதில், தக்ஷிணாமூர்த்திக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் நாமம் ‘யோக பட்டாபிராமாய நம:’ – அதாவது தக்ஷிணாமூர்த்தியே இராமன் என்ற அர்த்தத்தில் கூறப்பட்டிருக்கிறது. இராமனுடைய தலைநகரான அயோத்தியாவிற்கு எட்டு மூலைகளும் ஒன்பது நுழைவாயில்களும் உள்ளதாகக் கூறப்பட்டுள்ளது. அதே போல் திருவண்ணாமலையிலும் எட்டு மூலைகளும் ஒன்பது நுழைவாயில்களும் உள்ளன. திருவண்ணாமலையே அயோத்யா. இராமனே அருணாசலம் - தக்ஷிணாமூர்த்தி” என்று கூறினார். “எனக்கு வணங்குவதற்கு ஒரு கடவுள், ஒரு சாஸ்திரம், ஒரு தேவதை (உருவத்துடன் கூடிய கடவுள்) இவை தேவை. எனக்கு பகவான், எல்லாவற்றையும் குறிக்கும்

ஒரு கடவுளாக இருக்கிறார். அவரது உபதேசங்களே எனது சாஸ்திரம். இராமனே என் தேவதை. இராமனது தரிசனத்தை அளித்துத் தானே இராமன் என்பதை நிரூபித்துவிட்டார்'' என்று TKS கூறினார்.

ஒருமுறை அவரிடம், ''நீங்கள் 'ஓம் நமோ பகவதே ஸ்ரீ ரமணாய' என்ற மந்திரத்தை எவ்வாறு இயற்றினீர்கள்?'' என்று நான் கேட்டேன். அதற்கு அவர், ''எனக்குப் பகவான் கிருஷ்ணனிடம் சிறு வயது முதலே ஆழ்ந்த பக்தி உண்டு. பல தலைமுறைகளாக எங்கள் குடும்பத்தினருக்கு, 'ஓம் நமோ பகவதே வாஸுதேவாய' என்ற மந்திரமே தீக்ஷையாகத் தரப்பட்டது. வாஸுதேவன் என்பது கிருஷ்ணனின் மற்றொரு பெயர். இதனால் மிகுந்த ஆர்வத்தோடு பகவத் கீதை, ஸ்ரீமத் பாகவதம் இவற்றைப் படித்து மகிழ்வேன். கிருஷ்ணனைத் தரிசனம் செய்ய மிகுந்த ஏக்கத்துடன் இருந்தேன். ஒருநாள், பகவத்கீதையில் 'ஞானி து ஆத்மைவ மே மதம்' அதாவது 'ஞானியும் நானும் ஒன்றே' என்ற பொருளில் அவர் கூறியுள்ளது என் மனதில் ஆழமாகப் பதிந்தது. வாஸுதேவனே ஆன பகவான் ரமணர் என்னோடு இருக்கும்போது, தனியாகக் கிருஷ்ணனை ஆராதித்து, அவனது தரிசனம் பெற ஏங்குவதன் அவசியம் என்ன? என்ற எண்ணம் என்னுள் எழுந்தது. நான் ஆழ்ந்து சிந்தித்தேன். 'எனக்கு ஒரு மந்திரம், ஒரு கடவுள், ஒரு சாஸ்திரம் மட்டுமே தேவை. அவ்வாறில்லாவிடில் ஒரு தெய்வத்தை நம்பிக்கையோடு பற்றுவதில் போராட்டம் ஏற்படக் கூடும்' என்று தோன்றியது. திடீரென்று என் இதயத்தில் 'ஓம் நமோ பகவதே ஸ்ரீ ரமணாய' என்ற மந்திரம் இடைவெளியின்றித் தானாக ஒலிக்க ஆரம்பித்தது. நான் பகவானிடம் ஓடிச் சென்று, திடீரென்று ஒலிக்க ஆரம்பித்த புனித மந்திரத்தைக் குறித்துத் தெரிவித்தேன். அதை ஜபிக்க அவர் முழு அனுமதியளித்தார். மந்திரத்தில் எத்துணை அக்ஷரங்கள் உள்ளனவென்று பின்னர் கணக்கிட்டபோது

பன்னிரண்டு உள்ளதாக அறிந்தேன். வாஸுதேவ மந்திரத்திலும் அதே எண்ணிக்கையில்தான் அக்ஷரங்கள் உள்ளன. எல்லையில்லா மகிழ்ச்சியில் மூழ்கினேன். பகவானால் முழுமையாக ஏற்றுக் கொள்ளப்பட்ட மந்திரம் என்று அறிந்தபோது, ஆச்ரம நிர்வாகிகள் பெயர் எழுதப்பட்டிருந்த பலகையில் 'ஓம்' என்பதற்குக் கீழ் இருந்த 'ஸ்ரீ ரமணாச்ரமம்' என்ற பெயரை மாற்றி, 'நமோ பகவதே ஸ்ரீ ரமணாய' என்று எழுதினர்.

ஆச்ரமத்தில் நிரந்தரமாகத் தங்க ஆரம்பிக்கும் முன், இரண்டு ஸ்தாபனங்களில் நான் பணியாற்றி இருந்தேன். அவற்றில் பெற்ற முதல் மாதச் சம்பளத்தை இரு பங்காக்கி, என் உபகுருக்களான என் தாய்க்கும், என் ஆசிரியர் TKS-க்கும் அனுப்பியிருந்தேன். அப்போது என் பெருமதிப்பிற்குரிய ஆசிரியர் TKS-இன் இறுதி நாட்களாக இருந்தன. உடல் நலம் மிகவும் மோசமாகிப் படுக்கையில் இருந்தார். தினமும் அவரைக் காணச் செல்லும் நான், இறுதி நாளன்றும் போனேன். "என்னைக் கவனித்துக் கொள்ளும் இவர்கள் மிகுந்த ஏழ்மையில் உள்ளனர். அதனால் இந்தக் கவரில் உள்ள பணத்தை எனது ஈமச் சடங்குகள் செய்வதற்குச் செலவு செய்து கொள். மயானத்திற்குச் செல்லும் வழி நெடுகிலும், 'அருணாசல சிவ' என்று ஓதியபடி நீயே எனது சடலத்தை எடுத்துச் செல்ல வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார் ஆசிரியர்.

தொடர்ந்து அழுதுகொண்டே இருந்த நான் அவரிடம், "உங்களுக்கு இவ்வளவு பணம் எவ்வாறு கிடைத்தது?" என்று கேட்டேன். "இரண்டு முறை உன் முதல் மாத சம்பளத்தை எனக்கு அனுப்பியிருந்தாயல்லவா? அது என் மனதிற்கு மகிழ்ச்சியளித்ததால், அந்தப் பணத்தை நான் செலவு செய்யவே இல்லை. இப்போது என் இறுதிப் பயணமாக அருணாசலத்திடம் நான் திரும்பச் செல்லும்போது அதை நீயே

செலவு செய்'' என்று கூறினார் TKS. என் தலையை வருடி, ''உனக்கு ஆசீர்வாதமாக இதையளிக்கிறேன். பார்! என்னுடையதனைத்தையும் உனக்குத் தருகிறேன்'' என்று கூறினார். ஞானத்தோடு கூடிய அச் செயலின் அழகுக்கும், சிறப்புக்கும் ஈடாகச் சொல்வதற்கு உலகில் ஏதாவது உள்ளதா?!



''பகவானே! என் மனம் வேறெங்கு சென்றாலும், என் நாவு உனது நாமத்தை இடைவிடாது ஓதவேண்டும்''





வார்த்தைகள் அனைத்தும் உதிர்ந்து போகட்டும்.
அவற்றின் சாரமான உண்மை உணர்வு மட்டும்,
எல்லோர் இதயத்திலும் மலரட்டும் என்பதே,
என் பணிவான வேண்டுகோள்.
இறைவனருள் எப்போதும் உள்ளது.

- வே. கணேசன்

